# சிவஞானபோதமும் - பன்னிருதிருமுறையும்




திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் – 15

உ
சிவமயம்

# சிவஞானபோதமும் – பன்னிருதிருமுறையும்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

21–ஆவது குருமகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ

சுப்ரமண்ய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

திருவருளாணைப்படி



ஷை ஆதீனத்து வித்துவான்

தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன்

இயற்றியது

ஜய – சித்திரை – திருஓண நாள்

1954

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## குருமரபு வாழ்த்து

---

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு
நீடூழி தழைக மாதோ.

திருச்சிற்றம்பலம்.





இருபத்தொன்றுவது குருமகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# பொருளடக்கம்

*



---

உ

சிவமயம்

# நன்றியுரை

## குரு வணக்கம்

---

**"நல்துணை ஆவது நமச் சிவாயமே"**

**மூலனூர் மொழிந்துவைத்த நமச்சிவாய மந்திரம்**
**ஞாலமேல் நடக்குமாறு நாடுகண்ட நாயகன்**
**காலனூர் வெங்காமனூர் கமலனூரைக் காய்ந்தவன்**
**சீலமேவு துறைசைசுப்ர மண்யகுருவைத் தொழுவமே**

---

ஆன்மாவுக்கு வேண்டுவது பேரின்பம். இதனை ஞானபக்திகளால் அடைய வேண்டும். ஞானம், சாத்திரத்தாலும் சதாசாரியராலும் விளைவது. பக்தி, தோத்திரப் பயிற்சியால் பல்குவது. இவற்றை ஒரு சிறிதும் குறைவின்றி மக்கட்கருள இருப்பன **சிவஞானபோத சாத்திரம்–திருவாவடுதுறை ஆதீனம்–– தேவாரமாதி தோத்திரப் பனுவல்கள்.** சாத்திரங் கற்றுத் தோத்திரம் ஓதித் திருவாவடுதுறை ஞானசாரியருடைய திருவடி அடைதலே முழுப்பேறு. இவற்றுள், ஞானசாரியருடைய திருவடிக்கு ஆளாதலை இதன் முன்னர் அடியேன் அப்பெருமான் திருவடிக் கணிந்துள்ள ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தி ஆற்றுப்படை கருத்தாகக் கொண்டது.

மற்றிரண்டு பனுவல்களையும் ஒப்பிட்டோதுவதற்கு அடிகோலுவதே இதுபோது வெளிவருகின்ற இந்தச் "**சிவஞானபோதமும்-பன்னிரு திருமுறையும்**" என்ற நூலின் உட்கிடை. அடியேனுக்குள்ள அறிவு சிறியது. நூற்குரிய பொருளோ மிகப்பெரியது. ஆதலின் இப்பணி திருவருள் துணையின்றேல் இயலாதென்பது வெளிப்படை.

**திருவாவடுதுறை ஆதீன** பரம்பரையில் இது போழ்து **இருபத்தோராவது குருமஹா சந்நிதான**மாக எழுந்தருளியிருந்து சிவக்ஷேத்திர-குருக்ஷேத்திர - பரிபாலனங்களும் சித்தாந்த சைவ பரிபாலனமும் சாஸ்திர தோத்திரப் பாதுகாப்பும் செய்தருளுகின்ற **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்** திருவருளாணையால் இந்த நூல் இயன்றது. மேலும், இப் பரமாசாரிய சுவாமிகள், இதன் முன்பு ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தி ஆற்றுப்படை நூலினை ஆதீன வெளியீடாக மலரச் செய்தருளியவாறே இந்த நூலும் தமது ஆதீன வெளியீடாக மலரும் வண்ணம் இந்நூலுக்குரிய திருவுருவப் படங்களையும் உதவித் திருவருள் பாலித்துள்ளார்கள். இங்ஙனம் அடியேனை ஆட்கொண்டருளும் சுவாமிகளின் பெருங் கருணைத் திறத்தினை நெஞ்சம் நினைந் துருகித் திருவடிகளில் தஞ்சம் புகுகின்றேன்.

மற்றும், இந்நூலினைத் தமது திருநோக்கினால் புனிதப் படுத்தியும் சாற்றுக்கவி யளித்துப்போற்றி யும் இத் திருவாவடுதுறை ஆதீனப் பெரும்புலவர் சித்தாந்த சைவமணி உயர் திரு. த. ச. மீனாட்சி

சுந்தரம் பிள்ளையவர்கள் கடைக்கணித் துதவி யுள்ளார்கள். இவர்கள் பெருங் கருணையினை அடி யேன் என்றும் நினைந்து நன்றி கூர்வல்.

இதன்மேல், இந்நூல் வெளிவருவதற் குரிய ஊக்கத்தினை அவ்வப்போது அடியேனுக்களித்தும், இந்நூற் கருத்தினைத் திட்பநுட்பமாகத் தெரிவிக் கும் முகவுரை யுதவியும் பேரன்பு பூண்டவராவார், அடியேனது ஆர்வமிக்க நண்பரும், இவ்வாதீன அடியவருமாகிய உயர் திருவாளர் வித்துவான் T. S. தியாகராச தேசிகர் அவர்களாவர். இவர் களது பேரன்பு யாண்டும் துணைபுரிவதாகுக.

நூலினைக் காண்போருள்ளங் கவருமாறு கவி னுறுத்துவது அச்சழகேயாகும். இந்த நூலினை மிகச் சுருங்கிய நேரத்திலே நல்லமுறையில் அச்சிட் டழகுபுரிந் துதவிய திருப்பாதிரிப்புலியூர் "சரஸ்வதி" அச்சகத்தார்க்கும் எனது நன்றி பெரிதும் உரியதாகுக! வளர்க நற்பனுவல்கள்! வாழ்க நற் சைவம்!

நூலாசிரியன்,

ஆதீன வித்துவான் **தே. ஆ. ஸ்ரீநிவாஸன்**



ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்

# சிறப்புப்பாயிரம்

திருவா வடுதுறைத் தேசிக நாதன்
குருமா மணிமுதல் நமச்சி வாய
மூர்த்திக் கருளிய சீர்த்திச் சித்தர்
சிவப்பிர காசத் தவப்பெருங் குரவன்
அன்னோன் குரவன் அருணமச் சிவாயன்
என்னும் மச்சுச் செட்டிக் கருள் செய்
உமாபதி சிவனு முயரருட் குருமணி
மறைஞான சம்பந்த இறையவற் கெழிற்குரு
அருணந்தி சிவாசா ரியன்முடி மிசையடி
வைத்தருள் செய்தெமை வழிவழி யடிமை
கொண்டருள் குருபரன் கோதறு வெண்ணெயில்
தண்டமிழ்த் துறைசையில் சந்ததம் குடிகொண்
டுய்ந்நெறி காட்டும் மெய்கண்ட தேவன்
அருளிய சைவ சித்தாந்தத் தமிழ்நூற்
சிவஞான போதத் துறுமா றிரண்டு
சூத்திரக் கருத்தும் பொழிப்பும் கிடக்கையும்
சாத்திர அமைவும் தோத்திர மாகிய
அருட்பாக் களில்நனி பொருத்திக் காட்டித்
தமிழ்ப்புல வோர்நுகர் அமிழ்தெனத் திருமுறைப்
பெருங்கட லதனை அரும்பே ரறிவாம்
மத்தினின் மதித்தவன் பத்தியின் வழிபடும்
மாலெனத் தந்தே மகிழ்ந்தனன் கற்றோர்
பாலக வாத பண்புடைப் புலவன்
எப்பொரு ளாயினு மிசைத்ததி னின்றே

மெய்ப்பொருள் காணும் விற்பனப் பனவன்
சேந்தனைக் கந்தனைத் தெய்வப் பிடியின்
காந்தனை வள்ளி மணாளனை மயின்மிசைச்
செந்தமிழ்ப் பரமா சிரியனை வேலனைத்
திருமுரு காற்றுப் படையினா லநுதினம்
வழிபடு முளத்தன் வகையுறும் அறிஞன்
எங்கள் துறைசையில் இருபத் தொன்றெனத்
தங்கும் குரவன் பொங்குபே ரருட்கடல்
சித்தாந்த சாத்திரம் இத்தரை முழுவதும்
பரம னருளால் பரப்பவந் துதித்தோன்
செந்தமிழ்ப் புலவராம் சேய்களை யொருதாய்
என்னப் போற்றும் மன்னிய வள்ளல்
சைவப் பயிர்மிகத் தழையத் தழைத்து
வேண்டா தீதலின் மாண்டகு கொண்மூ
வேண்டிய துதவலிற் காண்டகு கற்பகம்
சிந்தித் தவைதர முந்துசிந் தாமணி
புண்ணியம் பூசும் கண்ணிய மேரு
ஆவியிற் போற்றும் காவி யுடையோன்
உம்பர்த் தலத்தும் பம்பிடு கீர்த்தித்
திப்பிய தேசிகன் சுப்பிர மணிய
அருட்குரு ராயன் ஆணையில் துறைசை
ஆதீன வித்துவா னெனவபி தானமும்
பெற்றவ னென்பா லன்பா லுற்றவன்
சீனி வாசன் தானிவ னெனச்சொலித்
தக்கோர் புகழும் தண்டமி ழோனே.

இங்ஙனம்,

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்
சித்தாந்த சைவமணி -
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை**

உ

சிவமயம்

# அணிந்துரை

**அகர உயிர்போல் அறிவாகி எங்கும்**
**நிகரில்இறை நிற்கும் நிறைந்து.**

மக்களினத்தின் முகமொப்பது சமயம். சமயத்தின் இரு கண்களென விளங்குவன சமய சாத்திரங்களும் தோத்திரங்களும் ஆம். கண் இல்லாமல் வழி நடப்பது கடினம். அப்படியே சாத்திர தோத்திர நூலறிவு இல்லாது சமய வாழ்வு நடத்துவது அரிது. சாத்திர நூலறிவு உலகைப் பற்றியும், தன்னைப் பற்றியும், தலைவனைப் பற்றியும் தெரியவேண்டிய ஞானத்தை விளைப்பது. தோத்திர நூல், சாத்திரநூலால் துணியப்பட்ட தலைவனை நன்கறிந்து அவன்பால் பக்தி உண்டாகச் செய்வது. இந்த ஞானமும் பக்தியும் ஒரே குறிக்கோளுக்கே உதவுவன. "கண் இரண்டும் ஒன்றையே நோக்கும்" என்பது நன்னெறியுரை. சாத்திரம் இம்மையிலும் மறுமையிலும் இன்புற்றிருப்பதற்கே வழி கோலுகிறது. தோத்திரம் அவ்வின்பத்தே இடையீடின்றி அழுந்தித் துய்ப்பதற்கே வகைசெய்கின்றது. ஆதலின் இந்த இருதிறத்து நூல்களும் ஒன்றே என்னலாம்.

சைவ சமயம் மிகச் சிறந்தது. இதன் நுணுக்கம் அறிந்தார் யாவர்க்கும் இஃது உடன்பாடே. இச் சமயத்துச் சிறந்த சாத்திர நூல்கள் மெய்கண்ட சாத்

திரங்கள் எனப்படும். தோத்திர நூல்கள் மூவர் தேவார முதலியன. இவை பன்னிரு திருமுறைகள் எனப் பகரப்படும். இவற்றுள் இரண்டொன்று தோத்திர நூலாகக் காணப்படா விடினும் பத்தி விளக்கும் பான்மையில் தோத்திரக் கருத்தே உடையனவாம். மெய்கண்ட சாத்திரங்களில் அடங்கிய நூல்கள் பதினான்காம். இவற்றுள் தலைசிறந்தது ஸ்ரீ மெய்கண்டதேவர் அருளிச்செய்தி சிவஞானபோத நூலாகும். இந்த நூலில் வேதாகம திருமுறைகளின் செய்திகளெல்லாம் உள்ளன என்பது ஆன்றோருரை. அங்ஙனம் அமைந்திருத்தலை "வேதம் பசு" என்னும் பாடலுணர்த்தும். பால் தயிராகத் திரிந்து வெண்ணெய் ஆகிறது. இதுவே நெய். அதுபோலவே வேதாகமச் செய்திகள் மொழி திரிந்து நூலாகியுள்ளன. இவை நெய்யொப்பன. நெய்யினீங்காதது அதன் சுவை. அவ்வாறே ஸ்ரீ மெய்கண்டார் சாத்திரம் சுவை நிகர்ப்பது. இதனை இந்தச் **"சிவஞானபோதமும் – பன்னிருதிருமுறையும்"** என்ற நூல் ஆராய்கிறது. இம்முறையில் இஃது ஒரு புது முயற்சியே யாகும்.

இந்நூல் சிவஞானபோதப் பன்னிரு சூத்திரங்களோடு பன்னிரு திருமுறைகளையும் ஒப்புக்காண முயல்கிறது. சூத்திரம் பன்னிரண்டாகவும் திருமுறை பன்னிரண்டாகவும் எண்ணொப்புமை கொண்டிருத்தலால் கருத்தொப்புமை காணலாமா என்ற எண்ணம் எழுதல் இயல்பே. இங்ஙனம் கருத்தொப்புமை காண்டற்கு இந்நூல் வழி கோலுகின்றதென்னலாம். இம்முறையில் இந்நூல் சாத்திரத்தின் ஒவ்வொரு சூத்திரத்தோடு திருமுறையின் ஒவ்வொரு பாடலை ஒப்புக்காண்கிறது. அதிலும், ஒவ்வொரு திருமுறையின் முதல் திருப்பாட்டிலே ஒவ்வொரு சூத்திரத்தின் கருத்தும் முறையே கருக்கொண்டு கிடத்தலை இந்நூல் ஆய்வது அருஞ்

செயலேயாகும். சிற்சில இடங்களில் சொல்லொற்றுமைகூடக் காட்டப்பட்டுள்ளது. மற்றும் ஒவ்வொரு திருமுறையின் முதற் பாசுரத்தை ஒப்பிடுவதேயன்றி அப்பதிகத்து இறுதிச் செய்யுளிலும் அவ்வவ்வெண்ணுட்பட்ட சூத்திரக் கருத்துக்கள் பொருந்தியிருத்தலும் ஆங்காங்கு புலப்படுத்தப்பட்டுளது. மேலும் சூத்திரத்துக்குச் சூத்திரம் இயைபு காட்டப்பட்டிருத்தற்கிணங்க, திருமுறைக்குத் திருமுறை இயைபிருத்தலை அவ்வத் திருமுறை இறுதிப் பாசுரங்கொண்டு காட்டியிருத்தல் களிப்பூட்டுஞ் செய்தியாகும். இவற்றால் திருமுறைகளின் அடைவுக்குக்கூட ஏதோ உள்ளீடான காரணமொன்றிருத்தலை இந்நூலாய்வு நமக்குத்தெரிவிக்கின்றதென்பது அடியேன் கருத்து. மற்றும் அந்தந்தச் சூத்திரப் பொதுக் கொள்கைக்கேற்ப, அந்தந்தத் திருமுறை ஆசிரியர்களின் வரலாறும் ஒருவாறு அமைந்து கிடத்தலும் இந்நூலில் எடுத்துக் காட்டுதல் இறும்பூது பயக்கின்றதென்னலாகும். இந்நூலால் சிவஞான போதச் செய்திகளின் இன்றியமையாதன எவ்வளவு தூரம் திருமுறைகளில் கருக்கொண்டிருந்து முகிழ்த்து வளர்ந்துள்ளன என்பதை அறியலாம். இத்தகையதொரு முயற்சியினை இதனாசிரியர் மேற்கோண்டுழைத்திருத்தல் சைவ நன்மக்கள் போற்றுக்குரியதே.

இந்நூலின் ஆசிரியர் வித்துவான் உயர் திரு. **T. A. சீனிவாஸாசாரியார்** அவர்கள் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீன ஆதிபரமாசாரியராக விளங்கியருளும் ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக மூர்த்திகளின்மீது 'ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தி – ஆற்றுப்படை' என்ற அரிய ஒரு செய்யுள் நூலை இயற்றி அம்மூர்த்திகளின் திருவருளுக்கிலக்காகி, ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் திருவருள் ஆசியையும் பெற்று இவ்வாதீனத்து வித்துவான்களுள் ஒருவராகத் திகழும்

நற்பேறுபெற்ற பெரியார் ஆவர். அவர்கள் தற்பொழுது ‘சிவஞானபோதமும் – பன்னிரு திருமுறையும்’ என்ற இவ்வரிய ஆராய்ச்சிநூலை இயற்றியுள்ளமை பெரிதும் பாராட்டுக் குரியதே. இந்நூலாசிரியர் சித்தாந்த சைவநெறி பிறழாது சமய சாத்திர அருங்கருத்துக்களைத் தெள்ளிதின் உணர்ந்து, திருமுறைகள் பன்னிரண்டும் சிவஞான போதத்தின் பன்னிரண்டு சூத்திரங்கட்கும் இலக்கியமாகத் திகழ்கின்றன என்னும் அருங்கருத்தைப் புலப்படுத்தியுள்ள புலமைத்திறம் வியத்தற் குரியதே. இந்நூற் கருத்துக்கள் விஜய ஆண்டு மகரத் தலைநாட் குருபூஜை விழாச் சொற்பொழிவுகளுள் ஒன்றாக இவ்வாதீனம் **ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம்** அவர்களின் திருமுன்பு இந்நூலாசிரியரால் பேசப்பட்டு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் அருள் ஆசியுடன் இவ்வாதீனத்து மகா வித்துவான் ஸ்ரீமான் ஆறுமுகநாவலர் அவர்கள், மற்றும் இவ்வாதீன வித்துவான் ஸ்ரீமான் த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் முதலிய சான்றோர் பலராலும் பாராட்டப்பட்டமை நேரில் அடியேன் அறிந்த செய்தியாகும். மேலும் ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளே, ‘காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்’ — என்ற ஞானமொழிக்கிணங்க, இதன் ஆசிரியருக்குத் தோன்றாத் துணையாய் உள்நின்று உணர்த்த சாத்திர தோத்திர இவ்வருங் கருத்துக்களை இந்நூலில் வாரி வழங்கியுள்ளார்களோ எனவும் அடியேன் கருதுகின்றேன்.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்தொன்றாவது குருமகா சந்நிதானமாக, அருள்ஞான பீடத்தில் அமர்ந்து சிவஞானச் செங்கோல் செலுத்தியருளும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள், இன்றைய சைவவுலகு சிவஞானமும் சிவநெறி யொழுக்கமும் நிரம்பப் பெற்றுச்

சிவானந்தப் பெருவாழ்வில் திளைத் தின்புறல்வேண்டும் என்ற பேரருள் நிறைவால், இதுகாறும் பல அரிய சைவ சாத்திர நூல்களையும் செந்தமிழ் நூல்களையும் அச்சிட்டு வழங்கி, இதுபோலும் சைவ சாத்திர தோத்திர ஆராய்ச்சி நூல் வெளியீடுகளைச் செய்தருளுவதுபற்றி அவர்கட்குச் சைவவுலகு பெருநன்றி செலுத்தும் கடப் பாடுடையது. அன்றியும், கூடிய விரைவில் இத் திருவாவடுதுறை ஆதீனத்து ஞானச் செல்வங்களாகிய **சிவஞான மாபாடியம்** முதலிய சித்தாந்த சைவ சாத்திர நூல்களையும், தமிழ் **'காமிகாகமம்'** என்ற அரியசாத்திர நூலையும் அழகிய முறையில் வெளியிடற்குரிய ஏற்பாடு களை நமது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் திருவுள்ளங் கொண்டுள்ளார்கள் என்பதைப் பணி வுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இவ்வாறே என் றும் நிகழ அருளும்வண்ணம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் திருவடி இணைமலர்களைத்தியா னித்து அடியேன் தலைமேல் புனைகின்றேன்.

இங்ஙனம்,

கடலூர் **N. T.**
13—4—1954

வித்துவான் **T. S. தியாகராஜ தேசிகன்,**
**திருவாவடுதுறை ஆதீன அடியவன்**

உ

சிவமயம்

## குரு வணக்கம்

---

ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் :

இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
இறைவனை, உயிர்க்கொலை செய்யாமை
அருள், பொறி அடக்கல், பொறை, தவம், வாய்மை,
அன்பு, அறிவு என்னும்எண் மலர்கொண்டு
ஒருமையொடு அருச்சித்து இடுகஎன்று அடியர்க்கு
ஒள்ளிய தீக்கைசெய்து உணர்த்தத்
திருஅமர் துறைசை உறையருள் குருவாம்
திருநமச் சிவாயர்தாள் போற்றி.

— சிவஞான முனிவர்

---

திருக்கயிலா யத்திறைவன் இவ்வுலகின்
உயிர்களெலாம் திருந்தக் கண்ட
மருக்குலவா வடுதுறைநற் பரம்பரையின்
முதல்வரென மன்னும் தேவை
அருத்தியினே டெப்பொழுது மகத்தினடைத்
தவரேயென் றவனி போற்றும்
திருத்தவமார் **தேசிகசுப் பிரமணியர்**
திருவடிகள் சென்னி சேர்ப்பாம்.

—தே. ஆ. ஸ்ரீ



ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளை
21 - ஆவது மஹாசந்நிதானம்
ஸ்ரீ - ல - ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் வழிபடுதல்

உ
சிவமயம்

# நூல் முகம்

வேதம் பசுவதன் பால் மெய்யா கம நால்வர்
ஓதும் தமிழுதனின் உள்ளூறுநெய்—போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் திறம்.

**உலகம்**

உலகம் பல்வகை உயிர்கட்கும் இடமாக உள்ளது. இது மண்ணுலகு. இதுபோலும் உலகுகள் பலப்பல உள என்பதே பெரியோர் துணிபு. உலகம் தன்னுட்பட்ட உயிர்களின் வளர்ச்சிக்காவன யாவும் தந்துதவுமாறு படைக்கப் பட்டுள்ளது. இவ்வுதவும் தொழில் இன்றேல் உலகம் பயனிலதாகக் கருதப்படும். அவ்வவ்வுயிரின் உடம்புகட்கேற்ப, வேண்டும் பொருள்களையெல் லாம் தன்னுட்கொண்டு தக்கவாறு அளித்து வளர்க் கிறது உலகு. ஐவகைத் தாய்மார்களில் வளர்ப்புத் தாய் போன்று இது பணியாற்றுவது நாமறிவதே. உலகின் உறுதுணையில்லாக்கால் நாம் வளர்ச்சி பெறுதல் இயலாது. இவ்வழியில் இவ்வுலகம் பன்னெடுங் காலமாக நின்று பணியாற்றி வருகின் றது. இவ்வளவும் தானுகவே செய்யுந்திறமை இவ் வுலகுக்கு உள்ளதா எனின் இலது. ஏனெனில்

உலகு சடப்பொருள். ஒவ்வொன்றையும் அறிந்து ஆற்றுதற்கான உயிராற்றல்—அறிவு—இது பெற்றில்லை. ஏதோ ஒரு பேராற்றல் வழி இஃது ஒழுகி வருகிறது. தாங்கியும் தந்தும் உதவும் இச் செயலை இவ்வுலகு பெற்றிருத்தற்கு ஒரு நோக்கம் இருந்தே தீரும். அந்த நோக்கத்தை ஈடேற்றும் பொருட்டே இதன் இருப்பு நிகழ்கின்றதென்னலாம். அத்தகைய சிறந்த நோக்கம் யாதென மேலோர் ஆராய்ந்து வெளியிட்டுள்ளனர். இதனில் யாரும் மாறுபட்டனரிலர். அந்தச் சீரிய நோக்கம் உடல் வளர்ச்சியன்று. உடல் வளர்ச்சியினைச் சாதனமாகக் கொண்டு ஏற்படவேண்டிய அறிவு — ஞானம் — எனப்படும் வளர்ச்சியாகும். இவ்வறிவு அல்லது ஞானத்தின் பயன் இன்பம் எனப்படும். இவ்வின்பப் பேறே முடிந்த குறிக்கோளாகும். எனவே, உலகமானது உயிர்கட்கு ஊன்வளர்ச்சிக்காவன உதவுகிறது. இவ்வுதவியால் உயிர்கள் அறிவு விளக்கங் கொள்கின்றன. இவ் விளக்கத்தால் வருவதே இன்ப நிலை. ஆதலால், உலகம் உயிர்களின் இன்பப் பேற்றை எண்ணியே படைப்புண்டு நிலவி வருகின்றது என நாம் கோடல் தக்கதாம்.

## உயிர்கள்

அத்திக் கனியுள் வித்துக்கள் போலக் கோடிக் கணக்காக விரிந்து விளங்குவன உலகங்கள். "அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம் .......... நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன" என்பர் மணிவாசகர். இவ்வெல்லாம் அருள்வெளிக்குள்ளே தங்கிக் கிடப்பன என்பர் தாயுமானூர். இத்துணை

அண்டங்கள் எற்றுக்கு? யாவும் உயிர்களின் பொருட்டே நிலவுகின்றன. உயிர்களும் பல திறத்தன. அவற்றின் எண்ணிக்கையும் அளவிறந்ததே. எல்லா வகை உயிர்களையும் மூவகைப் பிரிவின்கீழ்ப் பாகுபடுத்துரைப்பர் ஞானநூலோர். உயிர் நித்திய மான பொருளாகும். கடவுளும் நித்தியப் பொருளே. இந்த நித்தியத் தன்மையில் உயிரும் இறையும் ஒரு நிகரன. "என்று நீ அன்று நான்" என்பர் பெரியோர். கற்றவரோடு கற்றவர் சேர்வது சிறப்பு. அச் சேர்க்கை இன்பம் பயப்பது. ஒரே இயல்புடைய இரு வேறு பொருள்களுள் உயர்ந்த ஒன்றுடன் அவ்வுயர்வுக் குறைபாடுடைய பிறி தொன்று அக் குறைபாடுகளகன்று ஒன்றுபடுதலே உண்மை இன்பம் ஆகும். ஒரு தன்மைப் பட்ட பொருள்கள் ஒன்று கூடுதல் இயற்கையும் ஆகும். இயற்கை வழி ஒழுகுதலே அறிவுக்கு அழகு. இயற்கைக்கு மாறுபடுதல் அறிவின்மை காட்டிவிடும். உயிருக்குக் குணங்கள் பல உள. அவற்றை மூன்றென மொழிவர் அறிஞர். அவை, அறிவுடைமை, விருப்புடைமை, ஆற்றலுடைமை எனப்படும். இவற்றை அறிவு, இச்சை, செயல் எனவும் இசைப்பர். அறிவுடைமை சிறந்த பண்பாகும். அறிவுக்கும் இன்பத்துக்கும் நெருங்கிய தொடர்புளது. இங்ஙனமே, அறியாமைக்கும் துன்பத்துக்கும் தொந்தம் உள்ளது. எந்த உயிருக்கும் இன்பம் அடையவேண்டு மென்பதே விருப்பமாகும். இதனால் எவ்வுயிருக்கும் அறிவிருத்தல் அறியப்படுகிறது. இந்த அறிவு எல்லா உயிர்களுக்கும் ஒரு நிகராக இல்லை. மிகக் குறைந்த நிலையிலிருந்து வரவரக் கிளர்ந்து வளரும்

இயற்கையுடையது அறிவு. இதனாலேயே இலக்கண நூலோரும் அறிவு கருவியாகக்கொண்டு உயிர்களைப் பாகுபாடு செய்யலுற்றனர் எனத் தெரிகின்றது. உயிர்ப்பண்புகளுள்ளும் அறிவினையே முந்தக்கிளத்த லாயினர் அறிஞர். அறிவினை வளர்த்து இன்பநிலை எய்தவேண்டுமென்ற இச்சையிருப்பினும், அதற் கான சூழ்நிலையை விளைத்துக் கொள்ளவும், பயன் படுத்திக் கொள்ளவும், அவ்வழியில் முயலவும் தமக்குள்ள திறமையை அறியவும் இயலாதன வாகவே உயிர்கள் யாவும் மயங்கிய நிலையில் உள்ளன. இங்ஙனம் இவற்றைச் சிறைசெய்துள்ள ஒன்றையே சகசமலம் அல்லது ஆணவம் என்பர் அறிவு நூலோர்கள். இக் குறைபாடு உயிர்கட்கு இயல்பாகவே உள்ளது. இதனாலேயே கூடப் பிறந்த மலம் என்ற பெயர் ஆணவத்துக்கு ஏற்பட்டது. இங்ஙனம் செயலற்றுக் கிடக்கும் உயிர்களைக் கட்டவிழ்த்து விடுதற்கு ஒரு கருத்தா முயலவும் இரக்கங் காட்டவும் வேண்டியுள்ளது. சிறைச் சாலைக்குள் பூட்டப்பட்டுக் கிடக்குங் கைதியைச் சுதந்தரமுடையானொருவன் பூட்டைத் திறந்து வெளி விடுதல்போலும் இச் செயல் நிகழ்கிறது. இவ்வாற் றால் எல்லாவுயிர்கட்கும் உடன்பிறந்தது மலம் எனவும், விடுவிப்பது தந்தை அல்லது அரசு எனவும் விளங்கும். இவ் விடுதலை, முழு விடுதலை நிலை அடைதல் பையப் பையவே நடைபெறுகின்றது. நச்சு மருந்தைப் பல சுத்தி முறைகளாலும் புடங் களாலும் தூய்மை அடையும்படி வாகடமுணர்ந்த மருத்துவன் செய்வது போலவே உயிர்களை மலநீங் கும் வண்ணம் பல்வகைய தனு கரண புவனபோக

அநுபவங்களால் பவப்பிணி மருத்துவனுகிய இறைவன் புரிகின்ருன். இங்ஙனம் அவன் உதவாக்கால் உயிர்கள் தூய்நிலையாகிய இன்பநிலை எய்தல் ஒண்ணுது. இதனையே நம் மாணிக்கவாசக சுவாமிகள், "புல்லாய்ப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்ச் செல்லாநின்ற இத் தாவர சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்" எனச் சிவபுராணத்தே செப்பலுற்றனர். இலக்கண நூலோரும் 'உள்ளது சிறத்தல்' என்ற முறைபற்றி இதனையே ஓரறிவுயிர் முதலாக்கி மக்கள் தேவர் நரகர் எனக் கூறி வைத்துள்ளனர். இவ்வாறு பல பிறவி யுட்படுவதனுல் சற்றுச்சற்று அநுபவ அறிவு தலைப்பட்டு வளரலுறுகின்றது. ஓரளவு இவ்வறிவு வளர்ச்சிபெற்ற பின்னர்த்தான், உயிர்கள் தம் சுதந்தர ஈனத்தை உணரத்தொடங்கி கடவுளெண்ணம் கைவரப் பெறுகின்றன. இச்செய்தியே 'போற்றித் திரு அகவலில்', 'புல் வரம்பாய பலதுறை பிழைத்தும் தெய்வம் என்பதோர் சித்தமுண்டாகி' எனத் திருவாதவூரர் திருவாய் மலர்ந்துள்ளார். தெய்வசிந்தை தோற்றமெடுத்த பின்னர் உயிர்கள் மீளவும் தலைகீழாக நடந்து பல பிறப்புகட்கும் ஆளாகாமல், இருவினைகட்கும் இடஞ் செய்யாமல் அத் தெய்வத் திருவருட் குறிப்பின் வழியைக் குருவருளால் தெளிவுற அறிந்து அவ்வழியொழுகிப் பேரின்பம் எய்த எழுமையும் கடமை பூண்டுள்ளன. சார்ந்ததன் வண்ணமாவது உயிரியல்பு. இன்பமயமாவதே நல்லியல்பு. இப்

பிறவாப் பெருநெறி இன்பினை உயிர்களுள் ஒரு பகுதியினராகிய நாமும் எய்தக் கடமைப் பட்டுள்ளோம்.

**சமயம்**

பசி மனிதனுக்குள்ள ஒரு நோய். இந்தப் பசி நோய் உணவினாலன்றித் தீராது. பசி நீங்க உணவு கொண்டே தீரவேண்டும். பசி நீங்கினால் பலம்; அதாவது சுகம். இதனால் சுகம் வேண்டின் உணவு வேண்டும் என்பது பெறப்பட்டது. இஃது உடம்பின் சுகச் செய்தி. இவ்வாறே உயிருக்கு வேண்டுவது பிறவா இன்பு. உயிருக்கு இப்போதிருப்பது இளைப்பு. இந்த இளைப்பு நீங்கவேண்டும். நீங்குவதற்கு உதவியாயிருப்பதே ஞானம். இந்த ஞானம் பரிபூரண பக்தியின் முடிவாகும். இந்த ஞான போனகமே மக்கட்கு நற்கதி செல்லப் பயன்படுவது. இந்த ஞானம் எப்படிக் கிடைக்கும்? சாப்பாடு எப்படி ஏற்படுகிறது? அவ்வகையறிந்தார் ஆக்கியளிக்கின்றனர். அவ்வண்ணமே ஞான நெறியறிந்தார் ஞானத்தைத் தெளிவிப்பர். இவ்வாறு ஞான முதிர்ச்சி பெற்றார்கள் எல்லார்க்கும் பயன்படும் வண்ணம் ஞான அநுஷ்டிப்புகளை ஒருங்குரைக்கின்றனர். இவை, கால தேசங்கட்கேற்பக் கூடும்; குறையும் எனினும் அடிப்படையில் கூட்டமோ குறைவோ இராது. இவ்வடிப்படை ஞானநிலயமே சமயநிலை எனப்படும். எனவே ஞானமே சமயமாம்; சமயமே ஞானமாம். ஒளியின்றேல் இருள் நீங்காது. ஞானமின்றேல் துன்பு விலகாது. நமக்கிருப்பது துன்பு. இத் துன்புக் கட்டறுப்பது சமயம் எனப்படும். எனவே சமயத்தின் நோக்கம் இன்ன

தென்பது வெளிப்படை. "The aim of religion is to get rid of nature's control over us" என்பதும் பெரியோர்கள் கருத்தாம். ஊருக்குச் செல்ல வழி உதவுவதுபோல, இன்பத்தை எய்தச் சமயம் உதவுகிறது, சமயம், நம்மை யாரென உணரவைக்கிறது. நமக்குள்ள துன்பங்களை உணர்த்துகிறது. துன்ப நீக்கத்துக்கு வழிகளைச் சொல்லுகிறது. அவ்வழி சொல்லுவாரை அடைவிக்கிறது. அவ்வழியிற் செல்லுவாரோடு கூட்டுகிறது. அவ்வழியே செலுத்துகிறது. முடிவிலா இன்பத்தில் மூழ்க வைக்கிறது. தன்னையறிதல், தலைவனை அறிதல், தடையையறிதல், தடையை அறுத்தல், நன்மை தலைப்படல் என்ற இவைகளையெல்லாம் படிப்படியாகச் சமைத்தளிக்கின்றது சமயம். இம்மையில் சமுதாய நலத்துக்காவன யாவும் சமயத்தால் அமைவனவேயாம். இதனாலேயே நாத்திகம் ஒரு சமயமாக விரிந்த நோக்கினரால் கருதப்படுகின்றது. சமயத்தின் அடிப்படை ஞானம். ஞானத்தைத் தருபவன் கடவுள். கடவுள் அருள்கொண்டருளியவையே வேதாகமங்கள். இவைகள் ஞான சாதனங்கள். இவ்வழிவந்த யாவும் ஞானநூல்கள் எனவும் தத்துவ நூல்கள் எனவும் கூறப்படும். இவ்வளவும் தெரிவிக்கும் வழிகளே சமயக் கொள்கை எனப்படும். இக்கொள்கைவழி நடப்பதுதான் சமயாசாரம் இவ்வழி தாமும் நடந்து பிறரையும் நடத்துவோரே ஞானசாரியர்கள். மருந்தளித்தலும் பத்தியங் கூறலும் வயித்தியர் உதவிகள். மருந்துட் கொள்ளலும் பத்தியம் கடைப்பிடித்தலும் நோயாளி கடமை. இதனால் விளைவது தேகசுகம். இங்ஙனமே சமயநெறி நிற்றல் மக்கள் கடமை. இதன் விளைவே பூரண சுகம்

கண்ணில்லையென்றால் எதனையும் காண இயலாது. ஒளியிருந்தும் பயனில்லையாய் முடியும். ஆதலால், சமயம் இன்றேல் உண்மையுணர்ச்சி ஏற்படாது. இவ்வுண்மை யொழுக்கம் இல்லையேல் பிறப்பால் பயனில்லையாம். இதுகாறும் கூறியவாற்றால் சமயம் உயிர்நாடி போல்வதென இதன் இன்றியமை யாமை தேறப்படும்.

## சைவ சமயம்

மக்களாவர் ஈடேறுதற்குச் சமயம் இன்றியமை யாதது எனக் கண்டோம். சமயங்கள் இவ்வுலகில் பற்பல உள்ளன. ஒவ்வொரு மதமும் தான்தான் சிறப்புடையதெனச் செப்பாநிற்கும். இஃது அவ்வச் சமயவாதிகள் கூற்றும். மக்களின் அறிவு, குணம் முதலன ஒருபடித்தாயில்லை, பல விதங்களாக உள. ஆதலின் அவரவர் பண்பாடுகட் கேற்பக் கொள்கைகளும் பலவாயின. இவ்வாற்றால் சமயங் களும் பலவாயின. ஆனால் எல்லாச் சமயங்களும் முடிவில் ஒரு பயனையே கொள்ளும் திறத்தன. ஊர் ஒன்றுக்கு வழிகள் பலவாக இருத்தல்போல்வது இத்திறம். ஒவ்வொரு சமயமும் ஏதாவது ஒரு கொள்கையை வலியுறுத்திச் சொல்லும். எல்லாச் சமயத்தின் எல்லா நல்ல கொள்கைகளும் வேண்டு வனவே. ஒரு மேல்மாடத்துக்கு ஏற்றும் படிகள் பல உள. ஒவ்வொன்றும் அதனதன் உயரத்துக்கு ஏற்றும். இங்ஙனமே எல்லாச் சமயங்களும் உதவு கின்றன. எல்லாச் சமயங்களும் ஓரிடத்தை அல்லது ஒரு பொருளையே அடையச் செய்கின்ற முறையில் பாடுபடுகின்றன என்றாலும், மக்களின் கருத்துப்

பன்மைகளால் கடவுளும் பலராகக் காட்டப் படு கின்றனர். உண்மையில் ஒருவனே தேவன். இந்த உண்மை யாவர் உள்ளத்தும் உறைதல் தக்கது. துறைமுகங்கள் பல. ஆனால் கடல் ஒன்றே. எல்லாத் துறைகளையும் ஒரே கடல்தான் பெற்றுள்ளது. கடல் என்ற பெயருள் எல்லாத் துறைமுக இடங்களும் அடங்கும். துறைமுகம் ஒன்றன் பெயருள் கடல் முழுதும் கட்டுப்படாது. ஊர்கள் பல. எல்லாம் உலகம் என்பதனுள் அடங்கும். சாதிகள், இனங்கள் பலப்பல. எல்லாம் மக்கள் என்பதனுள் மன்னும். இங்ஙனமே கடவுளுக்கு வழங்கும் எல்லாப் பெயர்களும் கடவுள் என்ற ஒன்றுள் அடங்கும் எல்லாப் பொருள் களையும் தன்னுள்ளடக்கி, யாவற்றையும் கடந்திருப் பது கடவுளுடைய ஒரு தன்மை. இங்ஙனம் புறத்தே வியாபித்திருத்தலோடு அமையாமல் எல்லாப் பொருட்களின் உள்ளேயும் தங்கியிருத் தலும் கடவுளுடைய ஒரு தன்மையாகும். கடந்திருத்தல், உள்ளிருத்தல் என்ற இரண்டும் கடவுளின் இயல்புகளாம். இதனாலேயே கட எனவும், உள் எனவும் உள்ள இரு சொற்களைச் சேர்த்துக் கடவுள் என ஒரு நாமம் இட்டனர் பெரியோர். இதே பெயரை வேறு சொல்லால் கூறுகையில் சிவ என வழங்கினர் அத்தொல்லோர். சிவ என்ற சொல்லிலும் சிகாரம் கடந்து நிற்றலைக் குறிக்கும் குறியாகும். வகாரம் உள்ளீடாய் நிற்றலைக் குறிக்கும் குறியீடாகும். இதனால் கடவுள் என்னுஞ் சொல்லும் சிவ என்னும் சொல்லும் ஒரே கருத்துடைப் பெயர்களென நாம் உணரலாம். சிவம் வியாபகமுடையது. வியாபகமாவது கடந்தும்

கலந்தும் நிற்றல். இங்ஙனம் நிற்றல் என்பது சிவ என்னும் சொல்லின் ஒரு பொருள் என்பர் ஆதலால் சிவம் எனினும் கடவுள் எனினும் ஒன்றே குறிக்கும். இதனின் மேம்பட்டதொரு பொருள் ஏதும் இலது. யாவும் இப்பொருளுள் வியாப்பிய மாகும் இயல்புடையன. யாவற்றையும் தன்னுள் வியாப்பியமாகக் கொண்டுள்ள சிவத்தைப்பற்றி யுரைப்பதே சைவம் எனப்படும். சிவ சம்பந்தம் சைவம் என்பர். சிவமே யாவற்றினும் பெரிது. சிவத்தின் மேற்பட்ட பொருளிலது. ஆதலால் சைவமே யாவற்றினும் சிறந்தது. சைவத்தின் மேற்பட்டதொன்றில்லை என்பது சொல்லாமலே சொல்லாலேயே போதரும். இதனால் எல்லாச் சமயங்களையும் தன்னுட்கொண்டு எல்லாவற்றினும் மேலானதாய கொள்கையுடையதே சைவசமய மென்பது தெளிவாம். கால்கள், வால், வயிறு, தும்பிக்கை முதலியவை அவயவங்கள். இவ்வெல்லாம் அடங்கியிருக்கும் யானை அவயவியாகும். அது போலவே சைவம் அங்கியாகும். மற்றச் சமயங்கள் அங்கங்களாம். மரம் என்ற மாத்திரத்தில் கிளை முத லியனவும் மலர் முதலியனவுமாகிய எல்லாவகை உறுப் புகளும் அடங்கும். இவ்வாறே சைவம் என்ற பொழுதே உலகின் எல்லாச் சமயங்களும் இதனுள் அடங்கும். வேறொரு புதுச் சமயம் இனி ஏற்பட்டா லும், ஏற்படுத்தினாலும் அதுவும் சைவத்தேயின்றிப் புறத்தே நிற்கமாட்டாது இதுபற்றியே, சிவஞான சித்தியார் சுபக்கத்தில், "ஓது சமயங்கள் பொருள் உணரு நூல்கள் ஒன்றோடொன்றொவ்வாமல் உள பலவும் இவற்றுள் யாது சமயம் பொருள் நூல் யாதிங்கென்னில் இதுவாகும் அதுவல்லது எனும்

பிணக்கதின்றி நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காணநின்றது யாதொரு சமயம் அது சமயம் பொருள் நூல்" என ஸ்ரீ அருணந்தி சிவாசாரியர் ஓதலுற்றனர் என்க. வேதாகமங்கள் பொதுவாகவும் சிறப்பாகவும் கூறும் எல்லாப் பொருள்களையும் தன்னகத்தே உடையதே சைவ சமயமாகும் "இதனை இராசாங்கத்தமர்ந்தது வைதிக சைவசமயம்" என்பர் தாயுமானாரும். பதி, பசு, பாசம் என்னும் மூன்றேயான உள்பொருள் களைப்பற்றியும் இச்சமயம் எடுத்துரைக்கின்றது. இம் மூன்றின் மேற்பட்ட பொருள் எதுவுமில்லை. இம் மூன்றின் உண்மைகளை அளவைகளால் நிறுவியும், இவற்றின் பொதுவும் சிறப்புமான இயல்புகளை எடுத்தோதியும், பதியினைப் பாசத்தை நீக்கி அடையும் முறையை அறிவித்தும், சுத்த அத்து வைத இன்பத்தை எடுத்துக் காட்டியும் முடித்துக் கூறும் இயல்புடையது சைவசமயமாகும். விரிந்த பொருளிற் கூறின் நாத்திகருட்பட எம்மதத்தினரும் சைவரே ஆவர். எவரும் சிவத்தின் புறம்பாவாரல்லர். இக் கொள்கை நெறியே சற்றும் தவறாது நிற்பவர் சித்தாந்த சைவர் எனப்படுவர். ஆகலின், சித்தாந்த சைவம், சமயங்கள் யாவற்றினும் சிறந்ததென்க. மக்களாவர் காழ்ப்பேதுமின்றி இச் செந்நெறி யறிந்து தெளிந்து ஒழுகுதலால் பிறப்பெடுத்த பயனைத் தட்டின்றி எய்துதல் திண்ணமாம்.

## சைவ பரிபாலனம்

பொன் அரியதோர் உலோகம்; மதிப்பு மிக்கது. கிடைத்தற்கரியது. நவரத்தினங்களும் இத்தகை

யனவே. பொன்னைப் பூமியே பொதிந்து காக்கிறது. தாய், குழந்தையைக் காப்பதை நிகர்ப்பது இச்செயல். பூமியினின்றும் வெளிப்படுத்திய பின்னர் மக்கள் அப் பொன்னைக் கண்ணெனப் போற்றிக் காக்கின்றனர். கைசோர விடுவதில்லை. பொன்னும் அணிகளாகி அழகுறுத்துகிறது. நாணயமாகி மதிப்பளிக்கின்றது. இதனாலேயே யாவரும் பொன்னை நயக்கின்றனர். நனி காக்கின்றனர். நன்கு பயன் கொள்ளுகின்றனர். நூறு வெண் பொற்காசுகளைப் பாதுகாப்பதினும் அதற்கிணையான இரண்டு சவரன்களைப் பாதுகாத்தல் எளிது. இப்படிப் பல்வகையானும் சிறப்புடைய தங்கம் போல்வது சைவ சமயம். இதுவும் அரியது. பெருமை வாய்ந்தது. தெய்வீகத் தொடர்புடையது. கடவுட் காப்புடையது. மேற்கொண்டாரைத் தெய்வநிலைக்கேற்றி மதிப்பூட்டுவது. கைக்கொண்டொழுகுதற்குரிய எளிமை உடையது. எங்கும் செலாவணியாகும் பொன்போல எவராலும் மேற்கொள்ளத் தக்கது.

இத்தகைய சிறப்புகள் கொண்டுள்ளமையால் இதனைக் கடவுளே பாதுகாக்கின்றனர். மக்களனைவரும் கைசோர விடினும் இச்சமயம் தெய்வக் காப்புடைமையின் அழியாது. சிவம் அநாதியான பொருள். ஆதலால், இச்சமயமும் அநாதியானது ஆம்; அதாவது; மிகவும் பழமை வாய்ந்தது இச்சமயம் தோன்றிய காலத்தை அறுதியிட்டுரைத்தல் ஒண்ணாது. எந்தவகை மருந்தினும் அதன் தாய்ச் சரக்கு கலந்திருப்பது போலவே, இச் சைவசமயம் தனதுபழமையால் எல்லாச் சமயங்களினகத்தும்

விரவியுள்ளது. சமயப் பகைமையின்றி ஆராய்வோர்க்கு இது தெற்றெனப் புலப்படும். முழுமுதற் பொருளே இச் சமயத்தைத் தோற்றுவித்தமையால் இதனைக் காக்கும் பொறுப்பு இறைவன் மேலதாயிற்று. பரம்பொருள் இச் சமயத்தைத் தந்தருளியதும், புரந்தருள்வதும் மக்கள் நலங்கருதியே ஆகும். ஆதலால், மக்களே இச் சமயத்தைப் பேணுதற்கான கடப்பாடு பெரிதும் உடையர். சிறப்பாகச் சைவ சமயத்தார்கள் இப்பொறுப்பு மிகுதியும் பூண்டுளர் மரத்தின் மேலுறுப்புக்கள் எவ்வளவுதான் கிளர்த்தியாகக் காணப்படினும் அதன் வேர் பாதுகாக்கப்பட வேண்டுவது முக்கியம். வேருக்கு அழிவு நேரினும் அநாதரவு செய்தாலும் மரத்தின் எல்லா உறுப்புகளும் ஒழிதல் நிகழும். மரமும் வீழும். ஆகையால், வேர் நன்கு ஓம்பப்படுதல் ஒருதலையாக வேண்டுவது. இங்ஙனமே எவ்வகை மதங்களுக்கும் அடிப்படை யுதவியை ஆற்றிக்கொண்டிருக்கும் இதனைக் கண்ணுங் கருத்துமாகக் காத்தல் புரியாவிடில் அவ்வச் சமயமும் தன்னையே அசட்டை செய்துகொண்டதாக முடியும். ஊற்றுக்கண் அடைபட்டால் நீரோட்டம் நின்றுபோம்.

வேதாகமங்களின் வாயிலாகப் பரமன் இச் சமயத்தைப் பாதுகாத்தற்காவன புரிந்துள்ளான். தெளிவிலா முனிவர்கட்குத் தாமே வெளியிட்டுள்ளான். கல்லால் நீழலிருந்தான். சின்முத்திரை தாங்கியருளினான். இங்ஙனமெல்லாம் இச் சமயத்தைக் காத்தற்குக் கண்ணுதல் அவ்வப்போது முயன்றுள்ளான். ‘மன்னுமாமலை மகேந்திரமதனிற் சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்”

என்பது முதலாக இறைவன் மேற்கொண்ட செயல்கள் கீர்த்தித் திருவகவலில் கிளத்தப்படுகின்றன. பெற்ற தாய்க்கே பிள்ளையின் அருமை தெரியும். மலடியறியாள். இம் முறைமை பற்றியே இறைவன் பாதுகாப்பு சைவசமயத்துக்கு முக்காலும் நிகழ்கின்றதென்னலாம்.

கனிமரத்தைப் புதர்கள் மூடி மறைப்பதுண்டு. இவ்வழியில் ஓரொரு சமயம் பிற சமயங்களால் இச் சமயம் அடக்கப்படுதல் நிகழும். தந்தையை அவன் பெற்ற மக்கள் எதிர்ப்பதுபோலும் இச் செய்கை. இம் முறை கேடு நிகழும்போது மக்கட்கு உண்மை புலப்படுவதில்லை. சிற்றறிவாற் பற்பல வாறு மோகங் கொள்வர். இந்நிலை நேருங்கால் இறைவன் வாளா இருப்பதில்லை. அவ்வப்போதைய நிலைமைகட்கு ஏற்ப உறுதியும் ஞானமும் கொண்ட அடியார்களை உலகில் பிறப்பித்து அவர்களுழைப்பால், தெய்வீகத்தால் மக்களை நன்னெறிப் படுத்தி இச் சமயத்தைச் சீர்தூக்கி ஆக்கம் புரிந்துள்ளான். இத்தகைப் பெருமக்களை நாம் சமய குரவர்கள் எனப் போற்றி வழிபடுகிறோம். இன்னோர், சமயத்துக்குப் புரிந்துள்ள பாதுகாப்புப் பெரிதாம். திருஞானசம்பந்தராதியோர் சொல்லாலும் செயலாலும் பேருதவியாற்றியுள்ளனர். இவர்களால் சைவசமயம் ஆகாயம்போல மாசற வியாபித்து விளங்குகின்றது. ஆகாயத்தில் சூரியன் ஒளிருகின்றான். தண்மதியும் நிலவு கால்கின்றது. எண்ணற்ற தாராகணங்களிடையே அசுவினியாதி இருபத்தேழு நட்சத்திரங்களும் பிரகாசிக்கின்றன. இவற்றால் வானத்தின் ஒளி எப்போதும் போற்றப்

படுகின்றது. இங்ஙனமே சைவவானமும் போற்றப் படுகின்றது. சைவவானில் நீக்கமின்றி ஒளிதரும் கதிரோன் சிவமேயாவன். இச் சிவத்தினிடமாக உபதேயம் பெற்ற திரு நந்திதேவரே சந்திரனுக் கொப்பாக விளக்கஞ் செய்கிறார்.

வான வெளியிற் பன்னிரு ராசிகள் போலப் பன்னிரு திருமுறைகள் விளங்குகின்றன. இவற்றை அருளிச் செய்தவர்களான பெரியோர்கள் இருபத் தேழு நட்சத்திரங்கட்கு நிகரான இருபத் தெழுவராவர். திருஞானசம்பந்தர் முதல் சேக்கிழார் வரையில் உள்ள இந்த இருபத் தெழுவரும் சைவசமய பரிபாலகர்களே யாவர். இவர்களால் சைவசமயம் அவ்வப்போது ஊட்டம் பெற்றுவந்துள்ளது. ஆகாயத்தை எவரும் மாசு படுத்த இயலாது. ஆகாயமும் மாசுறும் இயல்பின தன்று. ஏனைய பூதங்கட்கு இடமளித்து, எப்பொருட் கும் உள்ளும் புறம்பும் நின்று ஆதரவளிக்கும் நீர்மையது வானம். இங்ஙனமே இயல்வது சைவப் பெருஞ்சமயம். உள்பொருள் கொண்டு ஒன்றாய் வேறாய் உடனாய் மன்னி உபகரிக்கும் இம் மெய்ச் சமயம் யாண்டும் புறந்தரப்படுதல் வேண்டுவ தொன்றாம்.

மற்றும், இச் சமயத்தினைக் கயிலாயத்திறை எப்போதும் கருத்துட்கொண்டு காத்துவருகின்றான் என்பதற்குக் கண்கண்ட சான்றும் உள்ளது. விண் ணும் மண்ணும் இச் சமயநெறி நின்று நன்னிலை எய்த வேண்டுமென்பதே மாதேவரின் திருவுள்ளமா கும். இப் பெருங் கருணை நோக்கால் ஸ்ரீ கண்டசிவம்

வேதாகமங்களின் அனைத்துப் பொருட்களையும் ஒன்றுபடுத்தி மாறுபாடு நீங்க எவர்க்கும் ஏற்பதாய்த் திருநந்திதேவர்க்கு ஞானோபதேயம் எனப்படும் சைவ சித்தாந்தத்தை உபதேசம் புரிந்தருளினர். அவர் வழியாகத் தேவபரம்பரை உளதாகிச் சைவசமயம் போற்றப்படலாயிற்று. ஸ்ரீ பரஞ்சோதி முனிவர் இச் சித்தாந்த சைவ நலத்தைத் திருவெண்ணெய்நல்லூர் ஸ்ரீ மெய்கண்ட தேவர்க் கருளினர். அப்பால் பூதபரம்பரை எழுந்தது; சைவம் போற்றியது. ஸ்ரீ உமாபதி சிவத்தின் உபதேய நெறி நின்று நம் பஞ்சாக்கர தேசிகர் முதலாகத் தொடர்ந்து அபிடேக பரம்பரை சைவ சமயத்தை நாளும் புரந்தருள்கின்றது இப் பரம்பரை நிலவியருளுந் தலமே நிலமேல் மிக்க திருவாவடுதுறை ஆகும். இங்ஙனம் திருக்கயிலாயத்தோடு தொடர்புடையதாகிச் சிவ பரம்பொருளின் திருக்கருத்தின் வழி நின்று சைவ சமயத்தைத் திருவாவடுதுறைத் திருமடத்து ஆசாரியர்கள் பரிபாலனம் செய்து வருதல் யாவரும் அறிவதே. இவ்வாறு சிவத்தாலும், சமயாசாரியர்களாலும், திருமடத் திருந்தருளும் பரமாசாரியர்களாலும் வழிவழியாகப் போற்றப் பட்டு உபதேய தீட்சை முறைகளால் பாதுகாக்கப் படுவது சித்தாந்த சைவசமயம்.

பரம்பரைச் சொத்தினை வேண்டாமென்பாரிலர். ஊனச் சொத்துக்கே இங்ஙனம் ஆசை உட்கிடந்து உந்துவது கண்கூடு. சமயமோ ஞானச் சொத்தாகும். பேரின்பப் பெருவாழ்வாம் பயனளிப்பது இது. ஆதலால், இதனை யாவரும் அடைதற்கு முந்துதல் நேர்மையாகும். ஆகலின், ஆன்ம ஈடேற்றத்தையே



ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்

நோக்கமாகக் கொண்ட தேசிகர்களின் உபதேச நெறியொழுகி ஒவ்வொருவரும் சைவநலம் துய்ப்பதே இச் சமயம் பேணும் நன்னெறியாகும். சிவஞான போதப் பன்னிரண்டாஞ் சூத்திரம் சைவம் போற்றும் திருநெறி கூறற்கெழுந்ததென்க. சிவம் போற்றி உலகு உய்யுமாக!

## இந்நூல்

இறைவன் அருளிய வேதாகமங்களும், சைவ சமயாசாரியர்களானோர் அருளிச் செய்த பன்னிரு திருமுறைகளும், ஸ்ரீ மெய்கண்ட தேவராதியோர் திருவாய் மலர்ந்தருளிய மெய்கண்ட சாத்திர நூல்களும் சித்தாந்த சைவம் இன்னதென உள்ளங்கை நெல்லியங் கனியொப்ப நமக்குரைப்பனவாகும். வேதம் பொது நூல். ஆகமங்கள் சிறப்பு நூல்கள். இவற்றில் முன்னதற்குப் பின்னதாக முரண்பாடுடையவை போல வாசகங்கள் காணப்படலாம். ஞானவான்களுக்கே அவ்வாசகங்களை முரணொழித்து ஒருமைப் படுத்திக் காண்டல் இயலும். சாமானியர்க்கு அங்ஙனம் காண்டல் அரியதொரு செயலாகும். மாதவச் சிவஞான யோகிகள் போன்றூர்க்கு இஃது எளியதொரு செய்கையாகலாம். இதனாலே தான் வேதாகமங்களின் ஒருமை முடிபினைச் சாமானியரும் எளிதின் உணரும் பொருட்டு ஆளுடைய பிள்ளையார் ஆதியவர்களால் தேவாரமாதிய நூல்கள் அருளிச் செய்யப்பட்டன. முழுமுதற் கடவுள் யாரென்பதும், அவரது இயல்பும், அவரது செயல்களும், அடியார்கள் இலக்கணமும், அவர்களது செயல்களும், சரியையாதி வழிபடு முறைகளும்,

இன்னோரன்ன சிவசமயச் செய்திகள் பன்னிரு திருமுறைகளில் பரக்கக் கூறப்படலாயிற்று. வேதாகமங்கட்கு விரோதமின்றி, வடமொழியறியாதாரும் உண்மையுணர்ந்து ஒழுகுமாறு இசைத் தமிழாலும் இயற்றமிழாலும் இத் திருமுறைகள் சைவ நலங்களை மக்கள் புலங்கொள இசைக்கலாயின. இவற்றால் தெளியாத மறை நிலங்களும் தெளிவுறுத்தப் பட்டன. இச் சிறப்புக் கருதியே திருத்தொண்டர் புராணத்தே நம் சேக்கிழார் பெருமான், பன்னிரு திருமுறைகளின் முதலாசிரியரான ஆளுடைய பிள்ளையாரின் திருவவதாரத்தினை உணர்த்துகையில் "வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத் துறை விளங்க" என மந்திர தந்திர விளக்கம் தமிழால் உரைக்கப்படுமாற்றை எடுத்துக் கூறலாயினர். இங்ஙனமே திருநாவுக்கரசர் திருவவதாரங் கூறுமிடத்தும், "அலகில் கலைத்துறை தழைப்ப அருந் தவத்தோர் நெறிவாழ" என்று காட்டியுள்ளார். இவ்வாறே சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவவதாரத்தை ஓதுமிடத்தும் "அருமறைச் சைவம் ஓங்க..... தீதகன்று உலகம் உய்ய" என இசைத்தருளுகின்றார். இவ்வாறெல்லாம் பன்னிரண்டாம் திருமுறையாசிரியர் பகருமாற்றால் தேவாரமாதிய திருமுறைகள் யாவும் திருமறையாகமங்களின் வழி நின்றே சைவ நன்னெறியினைச் சாங்கோபாங்கமாக உலகமுழுதுக்கும் உய்யுநெறி காட்டும் வண்ணம் ஓதுகின்றன என அறியலாகும். சுருங்கக் கூறின் பன்னிரு திருமுறைகளும் வேத சிவாகமங்களின் உண்மை விளக்கமேயாகும் எனத் தெரியலாம். வேதாகமங்கள் பிரணவத்தின் விரிவாகும் என்பர். அங்ஙனமே பன்னிரு திருமுறை

களும் அமைந்துள்ளன என்னலாம் முதல் திரு முறையின் முதல் எழுத்து ஓகாரமாம். பன்னிரண்டாம் திரு முறையின் இறுதியக்கரம் மகரமெய்யாம். இவ்விரண்டையும் இணைப்பதால் பிரணவம் ஒலிக்கின்றமை காணலாம். இதனுல் பன்னிரு திருமுறைக் கூற்றுகளும் பிரணவத்தின் விரிபொருளே யென்பதில் மாறுபாடில்லை. தமிழ் மறை என ஓதப்படும் நீதிப் பெருநூலும் அகரத்தால் தொடங்கப் படுதல் காணலாம். பிரணவத்துள்ளும் அகரம் முன்னிற்றல் யாவரும் அறிந்ததே. இறுதியில், போலியால் ஒன்றுபட லல்லதும், இனத்தால் ஒன்று பட்டதுமான னகரத்தால் குறள்நூல் முடிகிறது. மகர னகரங்களின் இசைவு செடுவாசியுடைத்தன்று. இதனுல் திருக்குறள் என்னும் தமிழ் மறைநூலும் ஒரு புடை பிரணவ விரிவாகவே அமைந்துளதென லும் ஏற்புடைத்தாகும். மற்றும், பன்னிரு திருமுறைகளின் ஆரம்பம் பதிநிச்சயம் கூறத் தொடங்கி இறுதியில் அடியார் மயக்கம் சொல்லி முடிக்கிறது. திருக்குறளும் முதற்கண் பதிநிச்சயமே கூறத் தொடங்கி இறுதிக்கண் மயக்கமே சொல்லி முடிக்கின்றது. இதுகாறும் புகன்றவாற்ருல், காலத்தால் பன்னிரு திருமுறைகட்கு முந்தியதான உத்தர வேத மெனப் புகழ்ந் துரைக்கப்படும் திருக்குறளும் மக்கள் யாவரையும் இன்பப் பெருநெறியாம் செந்நெறி செலுத்தும் நோக்கோடே சமைந்ததெனவும், அதன் சமைப்பும், "தீதகன்றுலகம் உய்ய" எனப்படு முறைமையால் பன்னிரு திருமுறையுட் பதிந்து கிடக்கின்றதெனவும் நாமறியலாம். மற்றும், திருமூல நாயனுர் மூவாயிரம் யாண்டளவும் ஈண்டிருந்து திருமந்திரத்தை ஓதியுள்ளாரெனக் கொள்ளின்,

திருக்குறட் கருத்துக்கள் மந்திரத்தின், கடைச்சல் பிடிக்கப்பெற்ற மணிகளாகும் எனவும் கூடும். இவ்வாறு வடமொழி தென்மொழி களாணியன்ற எல்லாத் திருமறைக் கருத்துக்களும் தன்னுள் அடங்கிக் கிடக்குமாறு தோன்றிய மாபெருங் கடலொப்பதே நம் சைவப் பன்னிரு திருமுறைகள் ஆகும்.

மேலும், கடவுளுண்மையைக் கூறுதலும், கடவுளுக்கும் நமக்கும் உள்ள தொடர்பினை அறிவுறுத்தலும், அத்தொடர்புக்குத் தடைகளை நீக்கு முறை நிகழ்த்தலும், இவையிற்றை அநாதியான தொன்மை வழியே இளத்தலும், திருக்கடைக் காப்பு தொட்டுத் திருத்தொண்டர் வரலாறு இறுதியாக உள்ள நூல்கள் நுவல்கின்றன. இவற்றோடு கேட்பார்க்கும், கற்பார்க்கும், ஓதுவார்க்கும் உள்ளத்தே பக்தியையும் உண்டாக்குகின்றன. பக்தியை மேலிட வைத்து அம்முறையில் ஞானத்தை இந்நூல்கள் விளைத்து வளர்க்கின்றன என்னலாம். இவ்வாறுய சிறப்புக்கள் யாவும் இவை கொண்டிருத்தலின் திருமுறைகள் என வழங்கப்பட்டனபோலும்! நீதி, உறவு, ஒழுக்கம், பழமை, வரிசை, முதலிய பல் பொருள்கொண்டது முறை என்னும் சொல். "முறை எனும் நாமம் தமக்கே உரிய முந்நான்கு மறைகள்" என்பதும் ஒரு வழக்காம் முடித்துக் கூறலும், பதி பசு பாசத் தொடர்பு சொல்லலும், நியதி நிகழ்த்தலும், நெறிகாட்டலும், கிரமம் கிளத்தலும், ஆன்மவகை அறிவித்தலும், தரம் தெரிவித்தலும், பழமை பகரலும், வேதாகமக் கொள்கைகட்கு இடமாயிருத்தலும், காலமுறை கழறுதலும், விண்ணப்ப நெறி விளம்பலும், இறையடியார் புகழ்

இசைத்தலும், ஆகிய இவ்வெல்லாம் பண்ணும் பணு வலே பன்னிரு திருமுறையாகப் பாற்பட அமைந் துள்ளன எனவும் அமையும். ஒரு திருமுறைக் கொன்றாகவேனும் தேர்ந்து நாடோறும் பன்னிரு பாடல்களையாவது நாவாரப் பாடுவோமாயின் நமது வினைகள் யாவும் விலகும். பத்தியும் ஞானமும் இல கும். இதனால் பன்னிரு திருமுறைகளையும் நாம் பத்திநீர் நிறைந்த ஞானசாகரம் எனலாம்.

நம் ஆன்மாவுக்கு ஈடேற்றம் நாமே தேடவேண் டும். இதற்கு இறைவனருள் ஆசாரிய வடிவுமுகமாக வரும். இதற்குமுன், நாம் ஏற்ற அறிவு பெற்றிருக்க வேண்டும். அறிவு, நூலால் வருவது. இதற்கான இயற்கை யறிவு நமக்குக் கேவலநிலை நீக்க காலமுந் லாக இறைவனு லருளப்பட்டுள்ளது. குருவருளால் வருவது அநுபவ அறிவு. எனவே இயற்கையறிவு கொண்டு நாம் ஞான நூல்களை ஓதியுணர்ந்து, செயற்கையறிவு பெற்றுப் பின்னர்க் குருமுகமாக அனுபவ ஞானமுதிர்தல் வேண்டுமென்பது தெளி வாம். இதுவே முத்திக்குரிய அறிவுப் பாதை. ஞானமே முத்திக்கு ஏது என்று நூல்கள் இதனை எடுத்துரைக்கும். இனிச் செயற்கையறிவு அல்லது விஷயஞானத்தை நாம் அடைதற்கு வேதாகமங்களை ஓதியுணரவேண்டும். இதற்கு வடமொழி யறிவு தேவை. மற்றும் பல துணைகளும் வேண்டும். இவ்வழி யில் ஏகி அறிவு பெறுதல் பெரும்பாலார்க்கு இய லாது. ஆதலால், தெரிந்துள்ள தமிழ் மொழி கொண்டே வேதாகம விஷயங்களை நாமறிதல் வேண் டும். இவ்வழியில் நம்மனோர்க்குப் பேருதவி புரிவ னவே பன்னிரு திருமுறைகள். இதனை ஓதுதற்கண்

மொழியிடர்ப்பாடு நமக்கில்லை. எனினும் நூல்கள்பல வாக உள்ளன. கடல்போல் ஆழ்ந்தகன்று கண்ணுக் கெட்டாப்பரப்புடையன. ஆதலால், பன்னிரு திருமுறைகளும் பகருமவையெல்லாம் ஒரே நூலில் சுருக்கமாக இருந்தால் நல்லதென்ற எண்ணம் யாவர்க்கும் எழுதல் இயல்பே. இங்ஙனம் எண்ணித் தவங்கிடந்தாரும் பண்டு இருந்திருப்பர். இன்னோர் தவப்பயனாலும், இறையருளாலும், நம்மனோர் நல்வினைப் பயனாலும், சைவநெறியின் சத்தியத்தாலும் ஒரு விழுமிய சாஸ்திரம் எழுந்தது. இதுவே சிவ ஞான போதம் எனப்படுவது. கதிரோனுதயத்துக்கு முன் வெள்ளி முளைத்தலும், கீழ்வானம் வெளுத்தலும் போல இந்த ஞான சாஸ்திரம் தோன்று முன்னர் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்னும் இரு ஞானப்பனுவல்கள் காணப்பட்டன. இவை, சிவஞான போத உதயத்தைக் காணுமாறு திறக்கப்பெற்ற இரு நயனங்களை நிகர்ப்பன என்னலாம்.

ஒவ்வொருவரும் மேற்கொள்ள வேண்டுவதும், உலக முழுதும் கைக்கொள்ளத் தக்கதுமான சிவ சமயத்தைச் சுருங்கிய முறையில் விளங்கக் கூறவல்ல தமிழ்ப்பனுவல் (சாத்திரம்) சிவஞான போதமேயாம். இதனிற் சிறந்ததொன்றில்லை. பிற சாத்திர நூல்களெல்லாம் இந்த நூலின் வழிநூல் சார்பு நூல்களாகியும் ஓரொரு பகுதியை வித்தரிப்பனவாகவும் விளங்குவனவாம். சித்தாந்த சைவ சாத்திர நூல்கள் தமிழாலமைந்தவை பதினான்காம். அவை, திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் சிவஞான போதம் – சிவஞான சித்தியார் – இருபா இருபது –

உண்மை விளக்கம் – சிவப்பிரகாசம் - திருவருட்பயன் – வினா வெண்பா – போற்றிப் பஃறொடை – கொடிக் கவி – நெஞ்சுவிடு தூது - உண்மை நெறி விளக்கம் – சங்கற்ப நிராகரணம் என்பன. இவற்றுள் சிவ ஞான போதத்தை அவயவிபோல நாம் கொள்ள லாம். ஏனைய பதின்மூன்றும் இருகண்கள், இரு செவிகள், நாசி, வாய், கண்டம், இரு கரங்கள், மார்பு, உந்தி, இரு கால்கள் போன்ற அவயவங்க ளென நிற்கும். எண் சாண் உடம்பிற் சிரசே பிரதா னம் போலத் தலைமை சான்றது சிவஞான போதம்.

வாழ்க்கைக்குத் தாரகம், போஷகம், போக்கியம் எனப்படும் பல்வகைப் பொருட்கள் வேண்டியுள் ளன. இப் பொருட்களைப் பல்வேறு பண்ட சாலை களிலும் கடைகளிலுமிருந்து பெறுகிறோம். இவற் றிற்காம் பொருட் செலவும், அலைச்சலும், அகப் படாமையாலெழும் வருத்தமும்கண்டு இவ்வெல்லாப் பொருட்களும் ஓரே இடத்தில் தட்டாமல் வேண்டுங் காலத்தெல்லாம், வேண்டுமவர் யாவர்க்கும், வேண்டு மளவுக்கெல்லாங் கிடைக்கும் ஓரே பண்ட விற்ப னைக் சமூகம் இருத்தலாகாதா என்ற ஏக்கம் எழுகின் றது இயல்வு. இங்ஙனமே ஆன்மீக ஈடேற்ற வாழ் வுத் துறையிலும் ஏழென்றும், ஆறென்றும், ஐந் தென்றும், நான்கென்றும், மூன்றென்றும் பல்வேறு வகையாகப் பகரப்படும் சுவாயம்புவம் முதலிய நூற் கூற்றுகள் யாவற்றையும் ஒருங்கே அறிதற்கும் ஆய் தற்கும் நிர்ணயித்தற்கும் உரிய நூல் ஓரே நூலாக இருந்தால் நல்லது என்ற எண்ணம் விளைதல் இயல்பே. ஆதலால் இந்நூல் எழுந்தமைந்த தன்மை இயல்புடையதேயாகும். பொருட்களைப் பிண்டமாய்க்

காண்டல், பிரித்துக் காண்டல் என்னும் இருவகைக் காட்சிக்கும் ஞாயிறு முக்கியமாயிருத்தல் போன்றே மலவிருள் துடைத்தற்கான ஆராய்ச்சி அநுபூதி என்னும் இரு திறத்து உணர்வுகட்கும் இந்நூல் இன்றியமையாததே.

ஆகமத்தால் உண்டாகற்பாலதாய ஞானத்தை இன்னதெனத் தெரிவித்து, அவற்றின் பொருள் மாறுபாடின்மையை இந்நூல் அறுதியிட்டுரைக்கும் பெருமை சான்றது. எல்லா ஆன்மாக்களும் (மக்களும்) இறைவனாகிய (சிவமாகிய) பொருளைத் தேர்ந்து தெளியவேண்டும். சிவத்தைத் தேரும் போதே சிவத்தை விட்டுத் தனித்திருக்கமாட்டாத அடிமையாகிய பசுவையும், உடைமையாகிய பாசத்தையும் தேர்ந்து தெளிதல் வேண்டும். தெளிதலாவது மலவு நீங்கப் பெறுதலாகும். இம் முப் பொருளுண்மைகளையும் இந்நூல் ஐயமறத் தெளிவித்தலால் சிவஞானபோதம் என்ற சிறந்த பெயர் எய்தப் பெற்றது என்னலாம். சிவஞானமென்பது ஆகமத்தையும் போதமென்பது உணர்த்துதலையும் குறிக்கும் என்பர். எனவே ஆபரஞானமாகிய சிவஞானப் பகுதியை இது முடித்துரைப்பதென்பது போதரும்.

பரந்த சைவசமய நோக்கினை. அடிக்கடி பல் வேறு சூழ்நிலைகள் காரணமாகப் பற்பல பகுதிகளில் தோன்றி, வளர்ந்து, பற்பல வகைக் கொள்கைகளைக் கொண்ட சமயங்கள் மறைத்தெழ முயன்றுள்ளன. நீர்ப்பரப்பில் தோன்றும் குமிழிகள், நீர் முழுதும் மூடிப்பான் எழுந்தாலொப்பது இச்செயல். இம் முறையில், புத்த சமயம் சிலகால மளவும் முயன்

றது. திருவாதவூரர் பெருவாதம் இதனை அடங்கச் செய்தது என வரலாறு கூறும். வடமொழி ஆகமங்கள் பல திறப்பட்ட கொள்கைகளைக் காட்டித் தம்முள் ஒன்றுபட இயலாது மயல் விளைத்து மலைவாற்றின சில காலமளவும். இந்த மலைவுகளைத் திருமூலர் திருமந்திரம் ஏற்பட்டு ஒருவாறு சைவப் பொதுநெறியைத் தெளிவித்துத் தீர்த்தது என்னலாம். தென்னாட்டில் சமணம் விரைந்து பரவி அரசுகளையும் அகப்படச் செய்துகொண்டு ஆதிக்கம் பூண்டு சைவ நெறியினை மறைக்கத் தலைப்பட்ட காலத்தே இறையருளால் தேவார முதல்வர்கள் அவதரித்துச் சிவநெறியினை இசைநெறியால் உணர்த்திப் பரவச் செய்தனர். ஆயினும் இக் காலத்தே திருமாலடியார்களெனப்படும் ஆழ்வார்களும் தோன்றி உடனுழைத்தனர். எனினும் முதற் பொருள்பற்றிய கருத்து வேறுபாட்டினை எழுப்பி விட்டனர் என்னலாம். இந்த மயக்கத்தை மீளவும் திருமாளிகைத் தேவர் முதலான அருட்புலமை வாய்ந்தோர் தோன்றி இசை தெரியப் பாடிச் சைவ ஒளி பரப்பிப் போக்கலாயினர். இங்ஙனமாகக் கி-பி பத்தாம் நூற்றாண்டளவும் நடைபெற்று வந்தது.

பின்னர், பிரம சூத்திர உரைநெறிகள் சமய வளர்ச்சிக்காக எழலாயின. இவையும் தம்முள் மாறுபாடுகள் பூண்டு மக்கட்கு மயக்கம் விளைத்தலில் குறைபடவில்லை. இக் காலத்தே சிற்சில திருமுறைகள் தோன்றி உண்மை நெறியின்னதென உணர்த்தும் தொண்டினை ஆற்றி வந்தன. மக்களைக் கடவுளெண்ணத்தில் எவ்வாற்றானும் நிலைபெறச் செய்தாற் போதுமென்ற சூழ்நிலை ஏற்பட்டமையால்

கதைகள் காவியங்கள் தோன்றி இப்பணியாற்ற லாயின. பெரிய புராணம், கம்பராமாயணம் ஆகியவை இம் முறையில் ஏற்பட்டவை. எல்ருலும், பதிப்பொருள் பற்றி ஒரேவித முடிவினை மக்கள் அடைய இயலவில்லை. ஆதலால், மக்களுள்ளத்தில் தருக்கரீதியில் பதிநிச்சயம் முதலிய செய்திகளை நாட்டவேண்டிய நிலை கி-பி பதின்மூன்ரும் நூற் ருண்டின் ஆரம்பகாலத்தே எழுந்தது.

கி-பி. பதின்மூன்ரும் நூற்ருண்டுக்கு முன் னரே தென்ளுட்டகத்தே அதிலும் சிறப்பாகத் தமிழகத்தே அறிவுநூற் கருத்துக்கள் முரண்பட்டுக் கிடந்தன. கடவுளில்லை என்பாரும் உலகாயதக் கொள்கைகளை நிலைநாட்ட முயன்றனர். கடவு ளல்லாதாரைக் கடவுளெனக் கொள்ளுமாறு தூண்டுவோரும் இருந்தனர். உயிரென ஒரு முத லில்லையென்போரும் ஒருபுறம் நிலவினர். உலகம், மாயை முதலன இல்பொருள்களே என இசைப்பா ரும் இருந்தனர். மறுமை என்பதே கிடையாதென் பாரும் வாழ்ந்தனர். உருவ வழிபாடு முதலியன மடமையாளர் கருத்தென்பாரும் கிளர்ந்தனர். உண்மைச் சமயநெறி நிற்பார் சிலரும் ஆராய்ச்சி யறிவுமட்டில் உடையராய் அநுபவ அறிவு தலைப் படாதாராக ஆகிவந்தனர். எனவே மிகவும் குழப்ப மான சமய நிலையே நாட்டில் நிலவியது. இதனுல் மக்களாவார், ஒரு நெறிபற்றி ஒன்றுபடாது பன் னெறியினும் படர்ந்து வேற்றுமையுணர்வு மிக்கா ராய்ப் பிரிவுபட்டு வாழ்ந்தனர். இவ்வளவு சிக்கலை யும் நேர்மையான அளவை முறைகளால் வாதித்து அறுத்து உண்மைச் சமயநெறியை நிலைநாட்டும்

பேருதவியைச் செய்து தீரவேண்டியிருந்தது. இந்த அரும்பணியைச் சிவஞானபோத நூல் செய்துதவியுள்ளது. வேதாகம நெறியையும் ஒருமைப்படுத்தி, பன்னிரு திருமுறைக் கருத்துக்களையும் வடித்தெடுத்து, நாத்திகர்முதல் யாவகையினரும் ஏற்கும் வண்ணம் தருக்க ரீதியாகச் சமயஸ்தாபனம் செய்யலுற்றது இவ்விழுமிய நூல். எக்காலத்தும் எவரும் அசைக்க இயலாவண்ணம் பிரமாணங்களால் முப்பொருளுண்மை சாதித்து, இலக்கண வகையால் அவற்றினியல்புகளை எடுத்துரைத்து, உண்மையின்புக்குரிய சாதன வகைகளைச் சாற்றி, இம்மைப் பயனையும் மறுமைப்பயனையும் தெள்ளெனத்தெரித்து நல்ல தமிழில் சுருங்கிய விதிகளாலும் உரைகளாலும் விரிந்த விளக்கமான பொருள் பயக்குமாறு இந்நூல் அமைவுண்டமை யாவரும் போற்றிக்கொள்ளத் தக்கதாகும். தற்போது உலகிலுள்ள எந்தக் கொள்கையும் மதமும் தம்மை நிலைநாட்டிக் கொள்ள நயந்தால் இப்பெரு நூலை வழிபட்டே தீரவேண்டும் என்பது உண்மை. புதுச் சமயமொன்று நாட்ட நாட்டங்கொள்ளினும் அவரும் இப்பெரு நூலைப் புறக்கணித்தொழுக இயலாது. எத்துணை வகையாக இந்தச் சாத்திர நூலைப் புகழினும் மிகையாகாது. இவ்வளவு தலைசிறந்த சாத்திர அமுதை நமக்கெல்லாம் பயன்படுமாறு வற்றா அமுத ஊற்றென வழங்கிய பெருமான் பொய்கண்டகன்ற மெய்கண்டதேவ நாயனார் ஆவர். இவரது திருவடிகள் வாழ்க! வெல்க!

இந்தத் திவ்விய சாத்திரம் பன்னிரண்டு சூத்திரங்களைக் கொண்டது. தமிழில், இந்த நூலுக்கு

றூன்னர், சித்தாந்த சைவக் கருத்துக்களைச் சொல்ல வல்லவைகளாகப் பன்னிரு திருமுறை நூல்கள் உள்ளன. இப் பன்னிரு திருமுறை நூல்கள் கி. மு. 3100 முதல் கி. பி. பன்னிரண்டாம் நூற்றூண்டளவும் உருவாகி வந்துள்ளன. இந்த வரிசை நூல்களில் தலைமை வகிப்பது திருஞானசம்பந்தர் தேவாரத் திருமுறை. பன்னிரண்டாவதாக விளங்குவது ஸ்ரீ சேக்கிழார் பெருமான் அருளிச் செய்த திருத்தொண்டர் புராணமாகும். இப் பன்னிரு திருமுறை நூல்கள் அவ்வவை ஏற்பட்ட காலவரிசைப்படி அடுக்குண்டில என்பது தேற்றம். தெய்வத் தன்மைவாய்ந்த புலவர்களும் சிவபத்தி செறிந்த அரசர்களும் பெரியோர்களும் கூடியே இத் திருமுறை அடுக்கு வரிசையை அமைத்துள்ளார்கள். பாடல்களையும் அவற்றின் பொருள்களையும் பரிசீலனை செய்து இந்த ஒழுங்கு முறையை அச் சான்றோர்கள் அமைத்திருக்கக் கூடும் என்பதில் ஐயமில்லை. பதி, பசு, பாசப் பொருட்களை உளத்தமைத்துக் கொண்டு, உண்மை, இலக்கணம், சாதிக்குமுறை, பயன் என்ற உணர்த்து முறை வரிசையில் இவைகள் கோவை செய்யப்பட்டிருத்தல் கூடும். பதி நிச்சயம் முதல் அடியார் கூட்டுறவு வரையில் படிப்படியாக யாவரும் உணர வேண்டும் என்னுங் கருத்துட்கொண்டே இவ்வடைவு முறை சமைந்துள்ளதென்னலாம். எனினும், இவ்வடைவு முறையின் காரணங்கள் விளக்கமாகத் தெரியவராமலே இருந்து வந்திருக்கிறதெனப் புலப்படுகின்றது. திருமுறைகள் பன்னிரண்டென அமைந்து அவை ஓதப்படும் முறைகளும் ஏற்பட்டதன் பின் ஏறக்குறைய ஒரு நூற்றூண்டுக் கால அளவில் சிவஞானபோத சாத்திர நூல்

சமைந்துள்ளது. இந்நூற் சூத்திரங்களின் அடுக்குமுறைக் காரணங்கள் ஆங்காங்கு தெள்ளத் தெளியத் தெரிவிக்கப்பட்டுள. இந்நூலும் பதி நிச்சயம் முதல் அடியார் கூட்டுறவு வரை ஓதுகின்றமை தேற்றம். ஆதலால், மேற்கூறிய பெரும் பாலும் தோத்திர நூல்களாகவுள்ள பன்னிரு திருமுறை அடுக்கு வரிசைக்கும், அவற்றின் பின்னர் எழுந்த சாத்திர நூலாகிய சிவஞானபோதச் சூத்திர அடுக்கு வரிசைக்கும் இயைபு இருத்தல் கூடுமென்ற எண்ணம் எழுகின்றது இயல்பே. இவ் வியைபு எவ்வளவு தூரம் பொருந்துகின்றதென ஆய்தற்கே இந்தக் கட்டுரை நூல் விழைகின்றது.

இனி, இந்நூன் முகத்தே தரப்பட்ட திருவாவடுதுறைப் பரம்பரை முறைமையினைக் காண்போமாக!

---

# பரம்பரைக் கண்ணாடி

உ

**ஸ்ரீகண்ட பரமசிவம்**

|

1. திருநந்தி தேவர்

|

2. சனற்குமாரர்

|

3. சத்திய ஞான தரிசனிகள் [முதலாம் மெய்கண்டார்]

|

4. பரஞ்சோதி முனிவர்

(1–4: அகச்சந்தான குரவர்கள்)

|

**1. ஸ்ரீ மெய்கண்டார் II**
[சிவஞானபோத நூலாசிரியர்]

|

2. ஸ்ரீ அருணந்திசிவம் — மனவாசகம் கடந்தார் — 47 மாணவர்கள்

|

3. ஸ்ரீ மறைஞான சம்பந்தர்

|

4. ஸ்ரீ உமாபதிசிவம்

(1–4: புறச்சந்தான குரவர்கள்)

|

ஸ்ரீ அருள் நமச்சிவாயர்

|

ஸ்ரீ சித்தர்சிவப்பிரகாசர்

|

**ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள்**
[திருவாவடுதுறை ஆதீன முதல்வர்]

உ
சிவமயம்

# திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து

## ஞானதேசிகர்கள்

1. ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள்
2. ,, மறைஞான தேசிகர்
3. ,, அம்பலவாண தேசிகர்
4. ,, உருத்திரகோடி தேசிகர்
5. ,, வேலப்ப தேசிகர்
6. ,, குமாரசுவாமி தேசிகர்
7. ,, பிற்குமாரசுவாமி தேசிகர்
8. ,, மாசிலாமணி தேசிகர்
9. ,, இராமலிங்க தேசிகர்
10. ,, வேலப்ப தேசிகர்
11. ,, பின் வேலப்ப தேசிகர்
12. ,, திருச்சிற்றம்பல தேசிகர்
13. ,, அம்பலவாண தேசிகர்
14. ,, சுப்பிரமணிய தேசிகர்
15. ,, அம்பலவாண தேசிகர்
16. ,, சுப்பிரமணிய தேசிகர்
17. ,, அம்பலவாண தேசிகர்
18. ,, சுப்பிரமணிய தேசிகர்
19. ,, வைத்தியலிங்க தேசிகர்
20. ,, அம்பலவாண தேசிகர்
21. ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரியர்

[தற்போது எழுந்தருளியிருக்கும் குருமஹா சந்நிதானம்]

## பன்னிரு திருமுறை ஆசிரியர்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருஞானசம்பந்த நாயனார் | | 1,2,3, திருமுறைகள் |
| 2. | திருநாவுக்கரசு நாயனார் | | 4,5 6. ,, |
| 3. | ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் | | 7-ஆம் திருமுறை |
| 4. | ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் | | 8-ஆம் ,, |
| 5 | திருமாளிகைத் தேவர் | 1 | |
| 6. | சேந்தனார் | 2 | |
| 7. | கருவூர்த் தேவர் | 3 | |
| 8. | பூந்துருத்தி நம்பிகாட நம்பி | 4 | |
| 9. | கண்டராதித்தர் | 5 | 9-ஆம் ,, |
| 10. | வேணாட்டடிகள் | 6 | |
| 11. | திருவாலியமுதனார் | 7 | |
| 12. | புருடோத்தம நம்பி | 8 | |
| 13. | சேதிராயர் | 9 | |
| 14. | திருமூலர் | | 10-ஆம் ,, |
| 15. | திருவாலவாயுடையார் (இறைவர்) | 1 | |
| 16. | காரைக்காலம்மையார் | 2 | |
| 17. | ஐயடிகள் காடவர்கோன் நாயனார் | 3 | |
| 18. | சேரமான் பெருமாள் நாயனார் | 4 | |
| 19. | நக்கீரதேவ நாயனார் | 5 | |
| 20. | கல்லாடதேவ நாயனார் | 6 | |
| 21. | கபிலதேவ நாயனார் | 7 | 11-ஆம் ,, |
| 22. | பரணதேவ நாயனார் | 8 | |
| 23. | இளம்பெருமானடிகள் | 9 | |
| 24. | அதிரா அடிகள் | 10 | |
| 25. | பட்டினத்துப் பிள்ளையார் | 11 | |
| 26. | நம்பியாண்டார் நம்பி | 12 | |
| 27. | சேக்கிழார் சுவாமிகள் | | 12-ஆம் ,, |

[இவர்கள் வரலாறுகள் நூல்கள் வாயிலாக அறிதற்பாலன.]

# ஸ்ரீ மெய்கண்ட தேவர் வரலாறு

கி-பி. 1225—1245

சிவசமய சாத்திர சிகரமாக விளங்கும் சிவ ஞானபோத நூலின் ஆசிரியராவார் ஸ்ரீ மெய்கண்ட தேவர் ஆவர் இந்த நூற் பெயர் இந்நூற் பெய ருள் ஒன்ருகலின் இவர் வரலாறு சுருக்கமாக ஈண்டுத் தரப்படலாயிற்று

## நாடு

பண்டைத் தொண்டை மண்டலத்திற்கும் சோழ மண்டலத்திற்கும் இடைப்பட்டது நடு நாடு என்பது. இந்த நாட்டில் திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டது சேதி நாடு. ஆறை நகரைத் தலைநகராகக் கொண்டது மகத நாடு. திருவெண்ணெய்நல்லூரைத் தலைநகராகக் கொண் டது திருமுனைப்பாடி நாடு. இந்நாடு அந்நாளில் வடக்கே கெடில நதியையும், தெற்கில் திருவரத்துறை -வதிட்டகுடித் தலங்களையும் வெள்ளாறு என்னும் நதியையும், கிழக்கே கடற்கரையையும், மேற்கில் கொல்லி மலையையும் எல்லையாகக் கொண்டிருந்தது. பிரஞ்சுப் பிரதேசமாகும் புதுச்சேரியும் இதனில் அடங்கியதே. தேவார ஆசிரியர்களில் இருவர்களும், சந்தானுசாரியர்களில் இருவரும் அவதரித்த பெருஞ் சிறப்புடையது இந் நாடு.

## நகரம்

திருமுனைப்பாடி நாட்டில் விளங்கும் தெய்வீக நகரங்களுள் பெண்ணுகடம் ஒன்ருகும். உயர்திணை

உயிரும் அஃறிணை உயிர்களும் தெய்வம் பூசிக்கும் திருநெறி நின்றொழுகிய தலம் இது. திருத்தூங்கானை மாடம் என்பது கோவிலின் பெயர். உடற்பிணி, பவப்பிணி ஆதிய போக்கும் இயல்புடையவர் இத் தலத்திறைவர்.

## மரபு

தொண்டை நாட்டில் பண்டு இருபத்து நான்கு கோட்டங்கள் இருந்தன. எழுபத்தொன்பது நாடுகள் இருந்தன. ஓராயிரத்துத் தொள்ளாயிரம் நத்தங்களிருந்தன. பரம்பரைச் சைவ வேளாளர்க் கான பன்னீராயிரம் கோத்திரங்கள் இருந்தன. எனவே இந்நாட்டினைச் சைவமணக்கும் திருநா டென்னலாம். இந்த நாடு இரண்டாம் கரிகாலன் காலத்தே மேற்சொல்லப்பட்ட பன்னீராயிரம் கோத்திரத்தாருக்கும் பங்கிடப்பட்டது. இக் கோத்திரத்தாருள் ஒரு பிரிவினரே களப்பாளர் என்பார். வேளாளர் என்ற சொற்போலவே இச் சொல்லும் அமைந்திருத்தல் ஆய்வுக்குரியது. இவர்கள் சோழப் பேரரசரின் கீழிருந்தாட்சி செய்த சிற்றரசர்களாவர். வரலாற்று நூல்களில் களப் பிரர் என்று குறிக்கப்படுவார் வேறு வகையினர் ஆவர். இவர்கள் சமணக் கொள்கையினர். முன் சொல்லப்பட்ட சைவத் திருச்சான்ற களப்பாளர் குடியிலே அச்சுதர் என்பார் கி.பி. 13-ம் நூற்றாண் டின் முற்பகுதியில் வாழ்ந்திருந்தார்.

இதே காலத்தில் திருவெண்ணெய் நல்லூரில் சிற்றரசராகவும் பெருஞ் செல்வராகவும் வாழ்ந்து வந்தவர் கம்பரை ஆதரித்த சடையப்ப முதலியார்

ஆவர். பல்லவர்களை வெல்லும் பணியில் சோழர் கட்கு இவர்கள் மூதாதையர்கள் துணைபுரிந்தமை யால் முதலாம் பராந்தகசோழன் காலத்திலே நாடு களில் அரசுபுரியும் பதவி இவர்கட்கு வழங்கப்பட் டது. எனவே சடையப்பவள்ளல் குடும்பமும் சுமார் 400 ஆண்டுகளாக அரசுபுரியும் அறநெறிக்குடும்ப மாக விளங்கிவந்தது என்னலாம். தமிழ் மூவேந்தர் களுடனும் சடையப்ப முதலியாருக்கு நெருங்கிய நட்புண்டு. இச்சடையப்பவள்ளல் மகனார் காங்கேய பூபதியாரின் அருமைத் தங்கையார் மங்களாம்பிகை ஆவர். இம்மங்களாம்பிகையாரே முன்னம் கூறப் பட்ட கடந்தை அச்சுத களப்பாளரின் மனைவியார் ஆவர். ஆதலின் நம் மெய்கண்ட தேவர் அவதரித்த குடி. "இருவர்ச்சுட்டியதொல்குடி" ஆகும். சைவ நன்நெறியும், அறநெறியும், வள்ளன்மையும், கல்விச் செல்வமும் ஒருங்கே அமைந்தது நம் மெய்கண்டார் பிறந்தருளிய குலம்.

## திருவவதாரம்

அச்சுதர் களப்பாளர்க்குப் பிள்ளைப்பேறின்றிப் பல்லாண்டுகள் சென்றன. திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பரும் காலமாயினர். அச்சுதர் குலகுரு திருத்துறையூர் ஸ்ரீ சதாசிவ சிவாசாரியர். இவர் ஆதிசைவ அந்தணர். கல்வி, ஒழுக்கம், சிவ பூசை நியமம், திருமுறைப் பாராயணம் யாவும் பெரிதுடையவர். சகலாகம பண்டிதர் என்னும் சிறப்புப்பெயர் பூண்டவர். இவரிடம் அச்சுதர் தமக்கு மகப் பேறின்மைபற்றிக்கூறி வருந்தினர். பண்டிதர், திருமுறைகளை அருச்சித்துக் கயிறு

சார்த்திப் பார்த்தனர், "பேயடையா பிரிவெய்தும்" என்ற திருவெண்காட்டுக்கான திருஞானசம்பந்தர் பாடல் உதயமாயிற்று. அதன்கண், திருவெண்காடு சென்று முக்குள நீராடிப்பரமனை வழிபட்டுப் பாவம் நீக்கமடைந்து பிள்ளையினோடுள்ள நினைவாயின வரம்பெறலாமென்றிருந்த வாசகம் காணப்பட்டது. அங்ஙனமே இறையருளைநம்பி அச்சுதர் தமது இல்லக்கிழத்தியாருடன் திருவெண்காடு சென்று நீராடி வழிபட்டனர். சிவபெருமானும் இவர்கள் வழிபாட்டினுக்கு இரங்கி அருள் புரிந்தார். மங்களாம்பிகையார் கருப்பவதியாயினர். பத்துத் திங்களும் சென்றபின் ஆண்மகவினை ஈன்றார். இங்ஙனம் ஈன்ற இடம்பற்றியும் விதம்பற்றியும் பலவகையாகக் கூறுவர். திருவவதாரம் கி.பி. 1225 ஆம் ஆண்டில் நிகழ்ந்ததென்பர்.

**வளர்ச்சி**

குழந்தைக்குத் திருவெண்காட்டுப் பெருமான் (சுவேதவனப்பெருமாள்) என்னும் திருநாமம் சூட்டப்பட்டது. திருபெண்ணாகடத்தே மீண்டு மகிழ்வுடன் பெற்றோர்கள் எல்லா நல்வினைகளும் ஆற்றிவந்தனர். இரண்டாம் ஆண்டு முடியு மட்டும் திருவெண்காட்டுப் பெருமாள் திருப்பெண்ணாகடத்தே சிலகாலமும், தாய்மாமனூரான திருவெண்ணெய் நல்லூரில் சிலகாலமுமாக வளர்மதியெனவளர்ந்து வரலானார். இவர் சாமுசித்தராக அவதரித்தமையால் இளம்பிராயத்திலேயே நிட்டாபரராகவும் ஞானமூர்த்தியாகவும் விளங்கலுற்றார். இரண்டாம் வயது முடியுங்காலை இவர்

திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்துவரலானார். அது கி. பி. 1227-ஆம் ஆண்டு என்பர். திருவெண்ணெய் நல்லூர் பொல்லாப் பிள்ளையார் கோயில் முன் மண்டபத்தே இவர் நிட்டைகூடி வந்தனர் என்பர்.

## ஞானதீக்ஷை

ஸ்ரீசுவேதவனப் பெருமான் இங்ஙனம் திருவெண்ணெய் நல்லூரில் திருவருட்டுறையில் பொல்லாப்பிள்ளையார் திருமுன்னர் வீற்றிருக்கையில் அகச்சந்தான குரவர்களில் நான்காமவரான பரஞ்சோதி முனிவரால் ஆட்கொள்ளப்பட்டார். ஞான தீக்கை நிகழ்ந்தது. மெய்கண்டார் என்னும் திருநாமம் சூட்டப்பட்டது. பரஞ்சோதியார், சிவஞான போதச் செம்பொருளுபதேசம் புரிந்து உலகுக்குபதேசிக்கும் அதிகாரமீந்து பொதிகை சென்றார்.

## மாணவபரம்பரை

ஸ்ரீ மெய்கண்ட தேவர், திருவருட்டுறை ஆலயத்தே அமர்ந்திருந்து நிட்டைகூடியும், சீடர்கட்கு ஆகம வேதசாரமான சிவஞான போத உபதேசம் செய்தும் வாழ்ந்துவரலானார். இவரது மகிமை நாடெங்கும் பரவியது. அச்சுத களப்பாளர் குலகுருவாகிய சதாசிவ சிவாசாரியரும் இதனை அறிந்து தேவரைக்கண்டு ஆணவம் அடங்கப்பெற்று, ஞான தீக்கைபெற்றுச் சீடராயினர். அருள்நந்தி என்ற தீக்ஷாநாமம் இவர்க்கிடப்பட்டது. இவரே மெய்கண்ட தேவரது முதல் மாணவர் ஆவர். இவர் பின் திருவதிகை மனவாசகங் கடந்தார் சீடராயினர்.

மற்றும் நாற்பான் எழுவர் நாளடைவில் சீடரானார்கள். இங்ஙனம் ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனார், திருவெண்ணெய் நல்லூரில் வீற்றிருந்து வேதாகம தோத்திரசார ரூபமான சித்தாந்த சைவநெறி கூறும் சிவஞான உபதேசத்தை அருளிச்செய்து சைவ நன்னெறியினை யாவரும் ஏற்குமாறு புலப்படுத்திவந்தார். மதுரை மாநகரில் பாண்டியவேந்தன் தலைமையில் நக்கீரதேவரை உள்ளிட்ட நாற்பத்தொன்பது புலவர்கள் பண்டு தமிழ் வளர்த்த தன்மை போலவே சைவம் திருவெண்ணெய் நல்லூரில் மெய்கண்ட தேவரைத் தலைமையாகக் கொண்டு அருணந்திசிவாசாரியரை உள்ளிட்ட நாற்பத்தொன்பதின்மரால் ஓம்பப்படலாயிற்று.

இந்த ஞானபோதகத்தைச் செவிமடுத்துண்டமையால் உணர்ச்சியின்மை, திரிபுணர்ச்சி முதலிய அஞ்ஞானப் பசி அடங்கியது. “அத்துவிதம்” என்னும் சொற்பொருள் தெளிவாயது. பரம்பொருளின் தடத்த சொரூப இலக்கணங்கள் விளங்கின. தருக்க முறையில் எவரும் ஏற்கும் வண்ணம் சைவ நலம் சமைப்புண்டது. திருஞான சம்பந்தர் எங்ஙனம் குழந்தைப் பருவத்திலே சிவஞானச் செல்வமுடையராய் யாவர்க்கும் அச்செல்வத்தினை வழங்கியருளினார்களோ அங்ஙனமே அவர் காலத்துக்கு ஆறு நூற்றாண்டுகளின் பின்னர் ஸ்ரீ மெய்கண்ட தேவரும் குழந்தைப்பருவத்தராகவே விளங்கி வழி வழி வந்த சிவஞானத்தை வையத்தார்க்கு வழங்கியருளினார். குழந்தையுள்ளம் குழைந்தவுள்ளமாகும். வஞ்சமில்லாதது. ஆதலின் யாவரும் ஏற்றுக்கோடற் கியைந்தது என்பது

தேற்றம். இவரது பொருள் சேர் புகழ் நாடெங்கும் பரவலுற்றது. ஆங்காங்கும் திருமடங்கள் ஏற்பட்டன. சமய போதனை நடந்தேறியது. செவிக்குணவும் வாய்க்குணவும் ஆங்காங்கு செல்வர்களாலும் ஞானியர்களாலும் வழங்கப்பட்டன. இவ்விதம் ஸ்ரீ மெய்கண்ட தேவர் ஞானச்செங்கோல் நடாத்தி சைவ ராஜதானியாக நாடெங்கும் விளங்கச்செய்து பரிபாலனம் புரிந்து வந்தனர். இவரது இச்செயல், "மும்மையால் உலகாண்ட மூர்த்தியார் செயல்" போன்று, கீர்த்தி பொருந்திய தென்னல் உயர்வுரையாகாது. அச்சுதர், காங்கேயர் ஆதியோர் அரனடி பொருந்திய பின்னர் நம் தேவர் சிவநெறி யாட்சியே துலங்கியது. தேவர் பெயரால் பல்லிடங்களிலும் பல அறங்கள் நிறுவப்பட்டன. இங்ஙனம் ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனர் கி. பி. 1245 ஆம் ஆண்டளவும் சைவ பரிபாலன ஞானபோதக செங்நெறி யாட்சி ஓச்சிச் சுத்தாத்துவித நித்தியானந்தப் பேறெய்தினர். இவர் பின் அருணந்தி சிவாசாரியர் இத்திருப்பணி தலைமேற் கொண்டனர். ஸ்ரீ மெய்கண்ட தேவர் திருவடிகள் வாழ்க! சிவஞான போத நன்னீழலில் வதிக உலகெலாம்!

தே. ஆ. ஸ்ரீநிவாசன்.

உ

சிவமயம்

## காப்பு

கண்கொண்டு காமற் காய்ந்து
காலனைக் காலால் வீழ்த்தி
மண்கொண்ட மாந்தர்க் காக
மறைமுதல் ஆக மங்கள்
எண்கொண்ட தோளான் ஈசன்
இயற்றிய தன்மை எங்கள்
பண்கொண்ட ஞான போதம்
பகருமெய் கண்டான் போற்றி!

மன்னிரு ணீங்கி ஞாலம்
மகிழ்ந்திட மரபின் வந்து
பன்னிரு கிரணங் காட்டும்
பரிதிவா னவனை யொப்பப்
பன்னரு பரமன் தூண்டப்
பாருளோர் பதம்பெற் றுய்வான்
பன்னிரு திருமு றைகள்
பகர்ந்தவர் பதங்கள் போற்றி!



ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனர்

உ
சிவமயம்

# நூல்

# சிவஞானபோதமும் — பன்னிரு திருமுறையும்

ஸ்ரீ மெய்கண்ட தேவர் அருளிச்செய்த சிவஞான போதம் என்னும் சாத்திர நூலையும், திருஞான சம்பந்தராதியோர் அருளிய பன்னிரு திருமுறைகளை யும் ஒப்புக்கண்டு மகிழ்தலே இந் நூலின் குறிக் கோள் ஆகும். சிவஞானபோதம் பன்னிரு சூத்திரங்கள் கொண்டது. திருமுறைகள் பன்னி ரண்டாகப் பகுக்கப்பட்டுள்ளன. இவ்விரண்டின் எண்ணிக்கைகளின் ஒருமையுண்மையால் ஏதேனும் இயைபு இருத்தல் கூடுமா என்பதே சிந்தனை. இச் சிந்தனையின் விளைவுதான் இந்நூல். ஒவ்வொரு சூத்திரத்தின் செய்திக்கும் ஒவ்வொரு திருமுறையின் செய்திக்கும் ஒற்றுமை இருத்தல் கூடுமென்பது நம்பிக்கை. இந்த நம்பிக்கையின் எழுச்சியால் ஒரு திருமுறைக்குள் அடங்கியுள்ள பற்பல பாடல் களுள் எவையேனும் ஒரு சில அந்தந்த எண்ணிக்கை யுள்ள சூத்திரக் கருத்துக்கு முரண்படாதிருத்தலும், பெருவாரியாக ஒத்தே இருத்தலும் இயல்புடையதே. அவ்வாறு ஒவ்வொரு திருமுறையிலும் உள்ள பல பாடல்களில் ஏற்ற ஒன்றை எடுத்துச் சூத்திரச்

செய்தியொடு பிணைத்துப்பார்த்தல் இந் நூலின் கருத்தன்று. 'ஒருபானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்ற முறைப்படி ஒரு சூத்திரக் கருத்துகள் பெரும்பாலும் ஒவ்வொரு திருமுறையின் ஒரு செய்யுட் கண்ணே அமைந்திருக்குமா என்பதும், அதிலும் அந்தந்தத் திருமுறையின் முதற் பாடலி லேயே அடங்கியிருக்குமா என்பதும் நாடுவதே இந்த நூலின் நோக்கமாகும். அங்ஙனம் பெரும்பான்மை யளவில் ஒத்திருக்குமாயின் திருமுறைப் பகுப்புக் குரிய சீரிய காரணமும் ஒரு சிறிது புலப்படல் கூடும் என்பது கருத்தாம். ஆதலால், சிவஞானபோத சாத்திரத்தின் முதற் சூத்திரத்துக்கும் பன்னிரு திரு முறைகளில் முதல் திருமுறையின் முதற் பாடலுக் கும் இங்ஙனமே வரிசையாக எல்லாச் சூத்திரங்கட் கும் பாடல்கட்கும் கருத்தொற்றுமை காணும் முயற்சியில் இந் நூல் தலைப்படுகின்றது எனலாம்.

எல்லா நூலாசிரியர்களும் நூல் முகப்பின் மங்கல வாழ்த்துக் கூறுதல் மரபு. அங்ஙனமே ஸ்ரீ மெய்கண்ட தேவரும் மங்கல வாழ்த்துக் கூறி யுள்ளார். இவ் வாழ்த்து, சுயம்பு மூர்த்தியாம் விநாயகர் மேலது. தொடங்கும் செயல் முட்டின்றி முடிதற்கு முதற்கண் விநாயகரைப் போற்றுதல் சைவ சம்பிரதாயமாகும். இந்நெறியினின்று எவரும் தவறார். இதனாலேயே, தேவாரத் திருமுறைகளை ஓதற்கண்ணும் சம்பிரதாய நெறி நிற்கும் ஓதுவார் மூர்த்திகள் திருஞானசம்பந்தர் தேவாரத்துள் முதல் திருமுறையில் உள்ள திருவலிவலத் திருப்பதிகத் தில் ஐந்தாம் பாட்டினை விநாயகர் வணக்கமாக ஓதுதல் மரபென்பர். இப்பாட்டு "பிடியதன்"

எனத் தொடங்குவதாகும். இதன்கண் இடர் கடியும் கணபதி திறம் புகலப்படுகின்றமை காணலாம். சிவஞானபோத நூல் "கல்லால் நிழல்" எனக் கணபதி வணக்கம் உரைக்கின்றது. இந்த நூலும் இவ்விரு பாடல்களையும் முதற்கண் ஒப்புக் காண்டலையே மங்கல வாழ்த்தாகக் கொள்கின்றதென்க.

முதலில் சிவஞான போத நூலின் மங்கல வாழ்த்துச் செய்யுளைக்கூறி, அதன் திரண்ட பொருளைத் தந்து, பின்னர் மேலே கூறப்பட்ட திருஞான சம்பந்தர் தேவாரப் பாட்டைக் கூறி அதன் திரள் பொருளுரைத்துப் பின்னர், இவ்விரு செய்யுள்கட்கும் உள்ள ஒற்றுமை ஆய்ந்து செல்லுதல் இந்நூலின் துவக்கமாகும். இங்ஙனமே ஒவ்வொரு சூத்திரத்திற்கும் ஒவ்வொரு திருமுறையின் முதற் பாட்டுக்கும் இயைபு காணப்படும். இங்ஙனம் ஒரு நியதிபற்றிச் செல்லுதலால் இடையிடையே பொருத்தங் காண்டலில் குறைகள் நிகழலாம். சைவமதிநலம் சான்ற பெரியோர்கள் குறை பொறுப்பாராக!



உ

சிவமயம்

# சிவஞானபோதம்

---

மங்கல வாழ்த்து

*வஞ்சித்துறை*

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

இதன் பொழிப்பு வருமாறு —

*(அருள்வடிவாகிய) கல்லால் நிழலின் கண்ணே (எழுந்தருளி யிருந்து) (நந்திபெருமானுக்கு இந்த நூலால்) மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர், மேன் மேற்கருணை கூர்ந்தருளுதற் பொருட்டுப் பொள்ளாத பிள்ளையாருடைய இரண்டு திருவடித்தாமரைகளை மெய்யன்பர் தலைமேற்கொள்ளுவர்.*

## திருஞானசம்பந்தர் தேவாரம்

திருவலிவலம் – திருவிராகம் – பண் : வியாழக்குறிஞ்சி.

பிடியதன் உருவுமை கொள மிகுகரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடி கண பதி வர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலம்உறை இறையே.

பொழிப்புரை

*மிகுந்த கொடையாளர்களாகிய அன்பர்கள் வணங்கி வாழ்த்தி நிலவுகின்ற வலிவலம் என்னும்*

திருப்பதியிலே வீற்றிருந்தருளும் தலைவனாகிய சிவ பெருமான், தன்னுடைய திருவடியை வழிபடுகின்ற அடியார்களுடைய துன்பத்தைப் போக்கவல்ல கணபதிப் பெயரமைந்த கடவுளை வன்மை மிகுந்த யானையினது வடிவுகொண்டு வருமாறு தமது நினைப்பு மாத்திரையாற் படைத்து, பெண்யானை போன்ற நடையும் நிறமுங்கொண்ட உமாதேவியார், மைந்தனென்னும் முறையில் ஏற்றுக்கொள்ளுமாறு தந்தருளினன்.

## பொருத்தங் காண்டல்

சாத்திரச் செய்யுளாகிய "கல்லால்" என்பதும், தோத்திரச் செய்யுளாகிய "பிடியதன் உரு" என்பதும் விநாயகர் மகத்துவம் உரைக்கின்றன இரண்டும் பொருளியல்பே பற்றிக்கூறுகின்றன. விநாயகர் திருவவதாரத்தைப்பற்றி இரு செய்யுட்களும் ஒரே கருத்துடையன. மக்களாவார் மகப்பேறு போல்வ தன்று விநாயகரின் தோற்றம். விநாயகமூர்த்தியைச் சிவபெருமானே சிருட்டித்து அளித்தனன். அன்பர் கள் இடர்கடிதற் பொருட்டே அளித்தனன். சிவசங்கற்பத்தால் சுயம்புவாக உதித்தவர் விநாயகர் என்பதை "இறை, கணபதிவர அருளினன்" என்ற சொற்றொடரும் "பொல்லார்" என்ற சொல்லும் உணர்த்துகின்றன என்லலாம். கருவியால் போழ்க் கப்படாத சுயம்புமூர்த்தி என்பது பொல்லார்' என் னும் சொற்பொருளாம். "அருளிய" என்ற சொல்லை வினை எச்சமாகக் கொள்வதேயன்றிப் பெயரெச்ச மாகக் கொள்ளலும் ஒரு வகை. அம் முறையில் "மலவில்லார் அருளிய பொல்லார்" என முடிந்து பொருள்படும். மலவு இல்லார் எனப் பிரிக்காமல்

மலைவில்லார் எனப் பிரித்துப் பொருள் கொள்ளு தலும் கூடும் என்பர். மகாமேருவை வில்லாக வளைத்துத் திரிபுரமெரித்துத் தேவர்களைக் காத்தவர் என்பது இத்தொடரின் பொருளாம். வலிவலத்துப் பெருமானை நாவுக்கரையர் துதிக்கும் பாடலில், "நணுகாதார் புரமூன்றெய்த வில்லான்காண்" என்று கூறியுள்ளார். எனவே, மலைமேலிப்பவரும், மலைவு இல்லாதவரும், மலையை வளைத்தவருமாகிய சிவ பெருமானே விநாயகரைத் தந்தருளினார் எனச் சிவ ஞானபோதம் கூறுவதுபோலவே, வலிவலத்து மலை மேலிருப்பவரும், இறையவரும், மலையை வளைத்தவரு மாகிய சிவபெருமானே விநாயகரைச் சங்கற்பத்தா லளித்தாரெனத் தேவாரப்பாடலும் கூறுதல் காணலாம். பிள்ளையாரை வழிபடுபவர் இடர் கடியப்பெறுவர் எனத்தேவாரமும், தாடலைபோல் அடங்கி நிற்பரெனச் சிவஞானபோத வாழ்த்தும் கூறுவன ஒருகருத்தே உடையனவாம். மற்றும் இவ்விரு செய்யுட்களின் தொடக்கச் சொற்களாகிய கல் என்பதும் பிடி என்பதும் நாம் கேவலநிலையில் ஆணவமலத்தின் பிடிக்குளகப்பட்டு அறிவிச்சை செயல்களற்றுக் கல்லாய்க் கிடந்த நிலையினை நன்கு நினைவூட்டுதலும் செய்வதைக் காணலாம். "கொள அருளினன்" என்பது போன்றே "அருளிய புனைவர்" எனப் பிறவினை முதல்வினைகொண்டு முடிதலும் பொருந்தியுள்ளது. போத நூலில் ' இணைமலர்" என்றாங்குத் தேவாரத்தே தனது "அடி" எனக்கூறப் பட்டுள்ளது.

இங்ஙனமாக, இவ்விருதிறத்துப் பாக்களும், விநாயகரைச் சிவபெருமானே தந்தருளினர் என்பதி

லும், அவரை இடர்கெட வழிபட வேண்டுமென்பதி லும், அங்ஙனம் வழிபடுவார் இறைவனருளுக்கு இலக்காவர் என்பதிலும் கருத்தொருமைப்பட நடத் தல் காணலாம். இதனால் தோத்திரமும், சாத்திர மும் ஒரே கருத்துடன் நடப்பன என்பது தேற்றம். மற்றுள்ள பொருட் சிறப்புக்களைப் பேருரை சிற் றுரைகளில் ஓதிக்காண்டல் தக்கதாகும். இனிச் சூத்திரவாரியாகப் பொருத்தங் காண்டற் பணிக் கண் இடர்வாராமை யருளுதலே இவ்விரு செய்யுட் கருத்தொருமை புரிவதாகுக!



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞான போதம்

## பொது இயல்பு அதிகாரம்

### பிரமாண இயல்

### பதிப் பிரமாணம்

### முதலாம் சூத்திரம்

அவன் அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

**பொழிப்புரை**

அவனென்றும், அவளென்றும், அதுவென்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டி உணரப்படும் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத் தொகுதி,

தோற்றம், நிலை, இறுதி என்னும் முத்தொழில் உடைமையால் ஒருவனால் தோற்றப்பட்டதாகிய உள்பொருளேயாம்.

அது தோன்றுங்கால் தான் ஒடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும் சகசமலம் நீங்காமையால் அது நீங்குதற்பொருட்டு மீளத்தோன்றுவதாம்.

இவ்வாறாகலின், சங்காரத் தொழிலைச் செய்யுங் கடவுளே உலகிற்கு முதற்கடவுள். ஏனையோர் அன்னரல்லர் எனக் கூறுவர் அளவை நூலுணர்ந்தோர்.

### கருத்துரை

சங்கார காரணராயுள்ள முதல்வரையே கருத்தாவாக உடைத்து இவ்வுலகம்.

### சூர்ணிகை

1. சகம் பிறப்பு இருப்பு இறப்பு ஆகிய முத்தொழிலை உடையது.
2. அது அரனாலே உடையது.
3. மற்றிருவரும் முத்தொழிற் படுவர்கள்.

### பொழிப்பு விளக்கம்

அவன் அவள் அது என்று கூறும்சொல், சொற்பிரபஞ்சம். அச்சொற்கட்குரிய பொருளாய் உரைக்கப்படும் பொருள்கள். பொருட் பிரபஞ்சம். இங்ஙனம் பிரபஞ்சம் இரண்டு வகைப்படும்.

இந்த இரண்டுவகைப் பிரபஞ்சங்களும் தோன்றுகின்றன; நிலைத்திருக்கின்றன; அழிகின்றன. இம் முத்தொழிற்படுதலை நாம் காண்கிறோம். ஆனல்

இப்பிரபஞ்சங்கள் அறிவில்லாதன; சடம். இவற்றைத் தொழிற் படுத்துதற்கு ஒரு கருத்தா வேண்டப் படும். இக்கருத்தாவினாலேயே பிரபஞ்சம் ஒடுக்கப் படுவது. மீளத் தோற்றுவிக்கப்படுவது. ஆதலால் பிரபஞ்சம் என்றும் உள்பொருளாம்.

இக்கருத்தா, ஒடுக்கின பிரபஞ்சத்தை மீளத் தோற்றுவிப்பன். அங்ஙனம் தோன்றச்செய்வது ஆன்மாக்களின் மலநிவிர்த்திக்காகவேயாம். ஆகையால், யாவற்றையும் தன்னுள் ஒடுக்கி வைத்திருக்கும் சுதந்தர முடையவனே திரும்பத் தோற்றுவித்தலும் செய்யும். இதனால் சங்காரக் கடவுளே உலகிற்கு முதற்கடவுள் ஆகும். இக்கடவுளல்லாத மற்ற பிரமா, விஷ்ணு முதலியோர் தத்தம் அதிகார எல்லையளவும் கடவுளாவரே யல்லாமல் முதற் கடவுளாக மாட்டார்கள். மகாசங்காரக்கடவுளே முதற்கடவுள் என்பது பிரமாண நூல் உணர்ந்தோர் துணிபாம்.

## திருஞான சம்பந்தர் தேவாரம்

### முதலாம் திருமுறை

### முதற்பாட்டு

[பதியுண்மை]

திருப்பிரமபுரம் – பண் – நட்டபாடை

தோடுடைய செவியன் விடை ஏறி ஓர், தூவெண் மதிசூடிக்
காடுடைய சுட, லைப்பொடி பூசி என், உள்ளங்கவர் கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்த அருள்செய்த
பீடுடையபிர மாபுரம் மேவிய பெம்மானிவனன்றே.

## பொழிப்புரை

தோடணிந்த செவியுடையானும். இடபத்தினை ஊர்ந்து ஒற்றையான மிகவும் வெண்மையான பிறைச் சந்திரனை முடியின் மீதணிந்து காட்டின்கண் உள்ள சுடுதலால் ஆன நீற்றினைப்பூசி, உலகியலில் அழுந்தா வண்ணம் அடியேனுடைய சித்தத்தினைத்தன் மாட்டுக் கவர்ந்துகொண்ட கள்வனும், இதழ்களைக் கொண்ட தாமரையாதனத்தை உடைய பிரமன் முன்னம் வழிபட்டுத் துதித்தலும் அவற்கு அருளைச் செய்த (அல்லது) இதழ்களையுடைய மலர்களால் முன் பிறவியிலே அருச்சித்து அடியேன் வழிபட அருள் புரிந்த பெருமை பொருந்திய பிரமாபுரத்தே என்றும் விரும்பி எழுந்தருளியவனுமான முதல்வன் இவனே ஆவான்.

## கருத்துரை

இப்பிரமாபுரத் திருப்பவனே படைத்துக் காத்தழிக்கும் முழுமுதல் பரமன் ஆவான்.

## பொருத்த விளக்கம்

முதற்சூத்திரம், இவ்வுலகம் ஒரு கருத்தாவை உடையது என்கிறது. இத்தேவாரத்திலும் 'அன்றே' என்ற தேற்றச்சொற்பெய்து கருத்தாவின் முதன்மை கூறப்படுகின்றது. சிவஞானபோதம் சாத்திர நூலாகலின் தருக்கமுறையில் காட்சிப் பொருளாகிய உலகினைக்காட்டிப் படிப்படியாக அநுமான முறையில் கடவுளுண்மை கூறலுற்றது. எக்காலத்தும், எவ்விடத்தும், எவ்வகை மக்கட்கும் பொருந்தச் செய்தற்கு இதுவே சிறந்த முறை யாயிற்று. திருக்குறள் நூலும், "ஆதிபகவன்



திருஞானசம்பந்தர்

முதற்றே உலகு" என உலகின்மேல் வைத்தே உண்மை நிறுவலுற்றது. இத் திருமுறைப் பாடல் தாதையார் முனிவுற ஆண்டவனைக் காட்டிச் சொல்வது. ஆதலால் உலகிற்கு முதல் கடவுள் என்ற முறையில் தலைமைப் பொருளில் கடவுளை அமைத்துக் கூறியுள்ளது. எனவே கடவுளை உடைமைப் பொருளில் கூறுகிறது சிவஞானபோத முதல் சூத்திரம். அங்ஙனமன்றிக் கடவுளைத் தலைமைப் பொருளிற் கூறுகின்றது முதல் திருமுறையின் முதற்பாடல் என்பது தெளியலாம். இரண்டு கூற்றின் கருத்தும் ஒன்றே. எவ்வாறெனில், செம்மையை உடையது தாமரை என்பதில் செம்மை விசேடணம்; தாமரை விசேடியம். செந்தாமரை எனில், விசிட்டமாம். செம்மை தாமரையை உடையது என்பது போல்வது உலகம் கடவுளை உடைத்து என்று கூறுதல். செம்மைக்குத் தாமரை முதல் என்பது போல்வது உலகிற்குக் கடவுள் முதல் என்றல். செம்மை தாமரையை உடையது என்றாலும் செம்மைக்குத் தாமரை முதல் என்பதே பொருளாம். விசேடணம் விசேடியத்திலிருக்குமேயல்லாமல் விசேடியம் விசேடணத்தில் இராது. ஆதலால் முதற் சூத்திரத்தில் கருத்தாவை விசேடணமாகவும் உலகை விசேடியமாகவும், கூறியிருப்பது, முதல் திருமுறை முதற் பாட்டில் கருத்தாவை விசேடியமாகக் கொண்டு கூறியிருப்பதையே உணர்த்துவது என நாமறியலாம். ஏனையவற்றிற்கெல்லாம் அந்தத்தைச் செய்தலின் அந்தமில்லாத கடவுளை அந்தம் என்று உபசாரனையாகக் கூறிக் கடவுளின் பெருமை புலப்படுத்துகின்றது சூத்திரம். இதன் கருத்து, கடவுள் அழிவில்லாப் பெருமையுடையவன் என்பதாகும். பாடலிலும்

யாவரினும் பெருமையுடையோன் கடவுள் என்பது 'பெம்மான்' என்ற சொற்பெய்து காட்டப்பட்டுள்ளது. அன்றியும், "ஒருவ ரிவ்வுலகில் வாழ்கிலா வண்ணம் ஒலிபுனல் வெள்ளமுன் பரப்பக் கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்கும் கழுமல நகர்' என நகரின் அழிவின்மை மூலமாக இறைவனின் அழிவின்மை தெரிவிக்கப்படுதல் காணலாம். இதனையே 'பீடுடைய பிரமாபுரமேவிய' என்ற தொடரின் அறியலாம். பீடு என்ற சொல் இங்கு அழிவிலாப் பெருமை உணர்த்துவதாம். மேவிய என்னும் சொல்லும் இக் கருத்துத் தரும். எனவே, "பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் அன்றே" என்ற வாக்கியம், கருத்தா ஒருவன் உலகுக்கு முதல்வன் எனவும்; அவனே எத்தேவர்க்கும் முதலாம் பெரியோன் எனவும், அவன் யாவர்க்கும் யாவற்றிற்கும் அந்தம் செய்வதேயன்றித்தான் அழிவிலான் எனவும் தெரிவிப்பதை நாம் அறிதல் கூடும். இதனால் சூத்திரத்தின் முடிந்த கருத்தும் இப் பாடலின் முடிந்த முடிபும் ஒன்றென்பது தெளிவாம். இது காறும் சூத்திரத்தின் பொதுக் கருத்தினை இப் பாடலும் பகர்தலைப் பார்த்தோம். மற்றும், சங்கார காரணனாகிய கருத்தன் அநாதியான பொருள் என்பதையும் இப் பாசுர இறுதிச் சொல்லான 'அன்றே' என்பது குறிக்கின்றது. அன்றே என்ற சொல் அநாதியே எனவும் பொருள் தருவதனை 'நொடித்தன்றே' என்பதன்கண் பெரியோர் காட்டுவர். ஆகவே, 'இவன் அன்றே பெம்மான்' என நின்று இருதிறப் பொருள் படுதல் கண்கூடாம். அடுத்த சூத்திரத்தும் அன்றே என்பது இங்ஙனம் பொருள்படும்.

இனிச் சகம் முத்தொழிலுடையதென்பது இம் முதற் சூத்திரம் புகல்வதொரு கருத்தாகும். இக் கருத்தினையும் இப் பாசுரம் தன்னகத்தே கொண்டுள்ளது. "ஏடுடைய மலரான்" தொழில் படைத்தலே ஆகும். அவன் பணிந்தடையும் பயனும் அதுவே. உலகு படைப்புண்ணுங்கால் பிரமற்கு அவசியமில்லை. இங்கு "ஏடுடைய மலரான் முன நாள் பணிந்தேத்த அருள் செய்தவன்" என்பதனால் சகம் முத்தொழிலுள் ஒன்றான படைத்தற்றொழிற் குரியதென்பது பெறலாகும். மற்று, "என் உள்ளம் கவர் கள்வன்" என்னும் சொற்றொடர் காத்தல் தொழிலைச் சகம் உடையதென்பதை உணர்த்தும். நிலைபெறுதோடு மியற்கைத் தாய உள்ளத்தினை நிலை பெறச் செய்தலே கவர்தற்சொல் குறிப்பது. ஞானப் பாலூட்டிக் காத்தவன் இறைவனாதலின் காத்தல் தொழிற்குரியான் இறைவன் என்பதும், உலகு காத்தற்றொழிலுடையது என்பதும் அறிதல் கூடும். பின்னும், "காடுடைய சுடலைப் பொடிபூசி" என்னும் தொடர் சங்காரத் தொழிலுடையான் இறைவனென்பதைக் காட்டும். சுடலை அழிவுக் குறிப் புடைச் சொல்லாம். இதனால் உலகம் அழிதற்றொழிற் குரிய தென்பது தெளியலாகும். உலகம் படைக்கப் படுதலைப் பிரமன் முகமாகவும், காக்கப்படுதலைத் தன் முகமாகவும், அழிக்கப்படுதலைப் பரமன் மூல மாகவும் இச்செய்யுளில் சம்பந்தர் சாற்றியுள்ளனர் என்னலாம். இவ்வாறன்றிப் பாசுரத்தே உள்ள ஏறி-சூடி - பூசி என்னும் மூவினைகள் அல்லது பெயர்கள் மேற்கூறப்பட்ட படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூவினைகளை உலகு பெறுதலைக் காட்டு மெனவும் கொள்ளலாம். ஏற்றம் ஒன்றன் எழுச்சி

அல்லது தோற்றத்தையும், சூடுதல் ஒன்றைத் தாங்குதல் அல்லது ஆதரித்தலையும், பூசுதல் ஒன்றை அழித்தலையும் உணர்த்தும் குறிப்புடைய சொற்களாம். ஆதலின், இடபத்தினை ஊர்தலும், பிறையினைத் தாங்கலும், பொடியினைப் பூசுதலும் கூறுமுகமாக முத்தொழில்கள் முறையே கூறப்பட்டுள்ளன எனக் கொள்வலாகும். ஆணவமலபரிபாகத்தின் பொருட்டு நிகழ்வது படைப்பாம். அநாதி கேவலத்தில் ஆன்மாக்கள் தம் அறிவு இச்சை செயல்கள் தொழிற்படாது தடுக்கப்பட்டுக் கிடக்கின்றன. இறைவன் தாமாகவே கருணைகாட்டினலன்றி ஆன்மாக்கட்கு வேறுகதி இல்லை. அந்த நிலையில் அவற்றின் விளக்கத்துக்காகச் செய்யப்படும் உதவியே அறம் எனப்படும். இவ்வறத்தினை மேற்கொள்ளலே இறைமையாம். இக்குறிப்புடையதே அறவடிவாகிய இடபத்தினை இறைவன் ஊர்தல். இஃது இறைவற்கே உரியதொரு கருணைச்செயல். இதுபற்றியே "ஊர்தியால் வெள் ஏறே; சீர்கெழு கொடியும் அவ்வேறென்ப" எனப் புறநானூறும் புகல்கின்றது. எனவே ஆணவமல பரிபாக முறைமையே சிருட்டியாமென்க. இதனை "விடை ஏறி" என்ற தொடர் காட்டும்.

மாயாமல பரிபாகத்துக்கென நிகழ்வதே திதி. மாயை என்பது மயக்கம். விபரீத உணர்ச்சி என்பதும் இதுவே. சந்திரன் விபரீத உணர்வினல் கலை குறையலானுன். அவனை வளர்தற்குக் கருணைகூர்ந்தான் பரமன். இச்செயல் காத்தற் குறிப்புடையது. ஆதலால் "பிறை சூடி" என்பது காத்தலைத் தெரிவிப்பதென்னலாம்.

கருமமல பரிபாகத்துக்காகச் செய்யப்படுவதே ஒடுக்கம். கருமமலமென்பது நல்வினை தீவினை எனப் படும் இருவினையாம். இவற்றின் பரிபாக மென்பது இன்பதுன்பங்களில் சமபுத்தி தோன்றுதலாம். இவ்வறிவு கைப்புணர்ச்சியால் வருவது. இக் கைப் புணர்ச்சிக்கு உடல் முதலியன ஏற்றவாறு மாற்றி யமைக்கப்பட வேண்டியுள்ளது. இம்மாற்றியமைக் கும் உதவி இறை செயலாம். இதுவே சங்காரம். இதனைப் "பொடிபூசி" என்பது உணர்த்தும். எனவே முத்தொழிற்படுவது உலகு என்பதற்கான குறிப்புக்கள் இப்பாசுரத்திலிருத்தல் இதுகாறும் காட்டப்பட்டன.

ஏறுதலும், சூடுதலும், பூசுதலும், கவர்தலும், அருளுதலும் ஆகிய எத்தொழிலும் அரன் செயலே என்பதனை இப்பாடல் செவியன், கள்வன், பெம்மான், அருள் செய்த, என்ற சொற்களால் உணர்த்துகின்றது

விடை திருமால் எனப்படுதல் கொள்கையாம். இதனால் பிரமனும் திருமாலும் இறைவனால் முத் தொழிற்படுவர் என்பதும் தேறலாகும். மகா சங்காரத்தைக் குறிப்பது "காடுடைய சுடலைப் பொடி" யாகலின் "மற்றிருவரும் முத்தொழிற் படுவ" ரென்னும் சூர்ணிகைக் குறிப்பும் இப்பாசுரத் துக் கிடத்தல் தெரியலாம்.

மற்றும் உலகு, அவன் அவள் அது எனவும், உயர்திணை அஃறிணை எனவும் பகுப்புடையதென்பது சூத்திரம். பாடலிலே "என்" என்பது திருஞான சம்பந்தரைக் குறித்தலால் ஆண் பகுப்பை உணர்த் தும். "தோடு" எனுஞ் சொல் பெண் பகுப்பை

உணர்த்தும். விடை, மதி எனும் சொற்கள் அஃறிணை உயிருள்ளன உயிரில்லன என்னும் பகுப்பினைக் காட்டும். எனவே, "அவன் அவள் அது எனும் அவை" என்ற சூத்திர வாசகத்துக்கான குறிப்பும் பாடலகத்தே கிடத்தல் கொள்ளலாம். இவ்வாறன்றி, செவியன் என்னும் சொற்கண் உள்ள 'அன்' விகுதியால் அவன் எல்ப துணர்த்தப்படும் குறிப்புக் கோடலும் கூடும். விடை திருமாலை உணர்த்துமெனல் ஒரு மரபு. திருமாலாகிய அரி பரமனின் தேவியாம். "அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாற னார்க்கே" என்பது தேவாரம். ஆதலால் விடைச்சொல் அவள் என்பதனை உணர்த்தும் குறிப்புடைத்தெனலும் கொள்ளலாம். 'மதி' சொல்லால் அஃறிணையது. அது என்பதனை இச்சொல் உணர்த்தி நிற்கின்றதென்னலாம். இங்ஙனமன்றித் 'தோடு' என்பதனைப் பெண் பகுப்புக்குரிய "அவள்" என்பதனைக் காட்டுமெனக் கோடலும் கூடும். பாடலகத்தே சிவத்தை நேருக்கு நேராகச் சம்பந்த சுவாமிகள் காட்டிக் கூறுகின்றாராதலின் "என்மனார் புலவர்" என்பதற்கான குறிப்பிலது. அளவை முறையில் சூத்திரத்தே உணர்த்துகின்றார் ஸ்ரீ மெய்கண்டாராதலின் "என்மனார் புலவர்" என்றார். இதனால் இக் கருத்துக்கள் யாவும் சைவத்துக்குரிய தொன்று முதிர் கருத்துக்கள் என யாவரும் தெரிந்துகொள்ளல் தக்கதாம்.

இதுகாறும் சொல்லிய முறையில் சிவஞானபோத நூலின் முதற் சூத்திரத்தே காட்டப்பட்டுள்ள பிரமாணங்கள் யாவும் முதல் திருமுறையின் முதற் பாடலகத்தேயும் அடங்கிக்கிடத்தல் காண

லாம். அதிக விரிவு அயர்வுதர வேதுவாமாகலின் இதனோடு முடித்துக்கொள்ளப்படுகின்றது.

ஆகவே, முதற் சூத்திரத்தாலும் முதற் பாடலாலும் உலகுக்கு மூல காரணனாக உள்ளவன் சங்கார கருத்தாவாகிய சிவன் என்பது தெளிவாம். இதனால் பதியுண்மை புலப்படுத்தப்பட்டது. இப் பதி உண்மை கூறுவது முதல்திருமுறையின் சிறப் பென்பதை இத் திருமுறையின் இறுதிப் பதிகமான திருத்தருமபுரம் – பண் – யாழ் முரிப் பதிகத்துப் பாடல்கள் பதினொன்றன்கண்ணும் பதியே என்னும் சொல் பதிந்து கிடந்து குறிப்பா லுணர்த்தல் கண்டு களிக்கலும் ஆகும்.



## இரண்டாஞ் சூத்திரம்

### பாசவுண்மை

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

### தொடர்புரை

முதற் சூத்திரத்தே உலகத்தைக் கொண்டு கடவுள் உண்டு என்று கூறப்பட்டது. இனி உலகம் தோன்றுதற்கு முதற் காரணம் மாயை என்பதும், துணைக்காரணம் சத்தி வழியாய் வரும் கன்மம் என்பதும் முன்பு போலவே அனுமானப் பிரமாணத்தால் இச் சூத்திரத்தே கூறப்படுகின்றன.

### பொழிப்புரை

மேலைச் சூத்திரத்தாற் கொண்ட சங்கார காரணனாகிய முதல்வன், கலப்பினால் உடலின் உயிர் போல் அவ்வுயிர்களேயாய்,

பொருள் தன்மையால் கண்ணின் அருக்கன்போல் அவற்றின் வேறுமாய்,

உயிருக்கு உயிராதல் தன்மையால் கண்ணொளியின் ஆன்மபோதம்போல் உடனுமாய் நின்று,

ஆணை என்னும் பரியாயப் பெயருடைய தனது சிற்சத்தியால் வரும் இருவினைகளால்—

அவை இறத்தல் பிறத்தல்களைப் புரியும் வண்ணம்—அவ்வாணையின் பிறப்பின்றிச் சம வேதமாய் நிற்பன்.

## கருத்துரை

புநருற்பவம் வருமாறு உணர்த்துகின்றது இச் சூத்திரம்.

## சூர்ணிகை

1. அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்
2. உயிர்களுக்குக் கன்ம பலனை அரனே கொடுப்பன்.
3. உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்.
4. அரன் சருவ வியாபகன்.

## விளக்கம்

சங்கார காரணனே முதல்வன் என்பது முதற் சூத்திரத்தால் பெறப்பட்டது. அவனே உயிர்களின் பொருட்டு உலகத்தைத் தோற்றுவிக்கிறான். தோற்றுவித்தலாவது உயிர்கள் நிலைத்தற்கும், அறிதற்கும், இயங்குதல் அல்லது அநுபவித்தற்கும் துணைபுரிதலாம், உடம்பு நிலைத்தற்கு உயிர் அவ்வுடலினிடத்தே கலந்து உடல்வேறு தான்வேறாய் அறியவொண்ணாதபடி ஒன்றாய் நிற்கிறது. இவ்வாறே உயிர்கள் நிலைத்தற்கு உயிர்களிடத்தில் இறைவன் கலந்து நிற்கிறான். அதாவது அவ்வுயிர்களேயாய் (ஒன்றாய்) நிற்கிறான்.

உயிர்கட்கு அறிதல் தொழில் நிகழவேண்டியுள்ளது. இதற்கும் இறைவன் துணைபுரிகிறான். கண்ணுக்கு இருப்பது பார்க்கும் தொழில். இத் தொழில் நிகழ்வதற்குச் சூரியன் துணை வேண்டியுள்ளது. ஆனால் சூரியன் கண்ணுக்கு வேறாய் நின்று இவ்வுதவி யாற்றுகின்றான். அவ்வாறே உயிருக்கு அறிவு வேண்டியுள்ளது. இதற்கு இறைவன் அவ்வுயிர்களின் வேறாய் நின்று துணைபுரிகின்றான். இறைவன் இது செய்யாக்கால் அறிதல் தொழில் உயிர்கட்கு நிகழாது.

மூன்றாவதாக, உயிர்கட்கு வேண்டுவது செலவு எனப்படும் அனுபவம். கண் ஒருபொருளைப் பார்த்துக்கொண்டிருப்பினும் ஆன்மபோதம் உடன் கூடினாலன்றி அப்பொருளைக் காணாது. ஆன்ம போதம் உடன் கூடினால் பொருளைக்கண்டு அதன் அழகு விகாரங்களைக் கண் தெளிகிறது. இவ்வாறே, உயிர்கள் இன்ப துன்பங்களை அனுபவித்தற்கு அவ் வின்ப துன்ப விடயங்கட்கு முன்னிலையாகிய விஷயங்களில் உயிரோடு இறைவன் (ஆன்மபோதம் பொருளிற் செல்லுதல் போல) தானும் செல்லுகின்றான். இதனை உடனாய் நிற்றல் என்பர். இவ்வாறு இறைவன் துணைபுரியாவிடில் உயிர்கட்குப் பயன்விளைதல் இன்றாம், இதனையே, "ஈறாய் முதல் ஒன்றாய் இரு பெண் ஆண் குணம் மூன்றாய் — மாறா மறை நான்காய்வரு பூதம்மவை ஐந்தாய் — ஆறார்சுவை ஏழோசையொ டெட்டுத்திசை தானாய், வேறாய் உடனானிடம் வீழிம்மிழலையே." என அருளிய திருஞான சம்பந்தர் தேவாரமும் காட்டும்.

மற்றும், இறைவன் ஆணையாகிய சிற்சத்தியிற் பிரிப்பில்லாது சமவேதமாகிய திரோதான சத்தியே வடிவாய் நிற்பன். இச்சிற்சத்தியால் செலுத்தப் பட்டு வருவதே இருவினை. இவ்விருவினைகளால் உயிர்கள் இறத்தல் பிறத்தல்களை மேற்கொள்ளும். ஆதலால், அக்கினியிற் சூடுபோல் இறைவனிற் சிற் சத்தி சமவேதமாயிருப்பள். குணத்துக்குக்குணி ஆதாரமாயிருப்பது சமவேதமாம்.

இதனால், இறைவன் ஒன்றினும் தோய்வின்றிச் சொயம்பிரகாசமாய் நிற்கும் தன்னுண்மையில் சிவம் எனப்படுவான். உயிர்களோடு ஒன்ருய், வேருய், உடனாய் மன்னும் தன்மையில் சத்தி எனப்படுவான். படைத்தலாதி ஐந்தொழிலை ஆற்றும் தன்மையில் பதி எனப்படுவான்.

முதல்வன் கரணத்தால் இவை செய்வானல்லன். சங்கற்பத்தால் செய்வன். உடலின் வேருனதொரு பொருளை அசைப்பிக்க உயிர்க்குக் கரணம் வேண் டும். ஆனல் உடலை அசைத்தற்குச் சங்கற்பமே போதுமானது. ஆதலால், உயிர்களோடு பிரிப் பின்றி நிற்கும் இறைவற்கு அவ்வுயிர்கட்கு வேண் டுவ ஆற்றுதற்குச் சங்கற்பமே சாலும் என்ப.

இத்துணையும் கூறியவாற்ருல், இறைவனுக்கு உயிர்களோடு ஒன்ருயும் வேருயும் உடனாயும் நிற் றலும், உயிர்கள் போக்கு வரவு புரியச் சத்தியுடன் பிரிப்பின்றி நிற்றலும் இலக்கணமாயிற்று. இந்த இலக்கணம் தடத்த இலக்கணம் எனப்படும் பொது இயல்பாம். சிறப்பியல்பு ஆரும் சூத்திரத்திற் கூறப்படுவது.

உலகத் தோற்றத்திற்கு முதற் காரணம் மாயை. இதுவே இருவினையின் சூக்குமத் தன்மைக்குப் பற்றுக்கோடு. துணைக் காரணம் சத்தியும் இருவினையுமாம். [இறைவன் நிமித்த காரணன்]. குடத்தின் விளைவுக்குக் குலாலன் நிமித்த காரணன். மண் முதற்காரணம். தண்ட சக்கரமாதிய துணைக் காரணங்கள். துணைக்காரணங்கள் பலவாயிருக்கும். முதலும் நிமித்தமும் ஒவ்வொன்றாய் இருக்கும்.

## இரண்டாந் திருமுறை

## முதற் பாடல்

### திருப்பூந்தராய் – பண் – இந்தளம்

*வினவுரை*

செந்நெ லங்கழ னிப்பழ னத்தய லேசெழும்
புன்னை வெண்கிழி யிற்பவ ளம்புரை பூந்தராய்
துன்னி நல்லிமை யோர்முடி தோய்கழ லீர்சொலீர்
பின்னு செஞ்சடை யிற்பிறை பாம்புடன் வைத்ததே.

### பொழிப்புரை

பக்கங்களிலெல்லாம் வெள்ளிய மலர்கள் மிகப் பூத்து விளங்கும் புன்னையின் இடையிலே செந்நெல் முதிர்ந்து விளங்கும் பழனம், வெள்ளைத் துணியின் நடுவிலே பவளம் விளங்குவதுபோலக் காணப்படும் சீகாழிப் பதியகத்தே இடைவிடா தெழுந்தருளிப் புண்ணிய முடைய தேவர்களின் முடிகள் படிந் துள்ள வீரக் கழலணிந்த திருவடிகளையுடைய சிவபெருமானே! பின்னியும் விரிந்துமுள்ள செஞ் சடையிற் சந்திரனுடைய பிறையையும் பாம்பினையும்

ஒன்றாக வைத்துள்ள காரணத்தைச் சொல்லி யருளுவீராக!

### பொருத்தங் காண்டல்

இவ்விரண்டாம் சூத்திரம் பொதுவாக நோக்கின் பாசம் உண்டு என்னும் செய்தியை உணர்த்துவதாகும். இத்திருமுறைப் பாடலிலும் பொதுப் படக் கூறின் பாசப் பொருட்களே தரப்பட்டுள்ளமை காணலாம். செந்நெல், கழனி, பழனம், புன்னை, வெண்கிழி, பவளம், பாம்பு, முதலியன நன்மையும் தீமையுமாகிய வகையுட்பட்ட பாசப் பொருட்களாக அமைந்திருத்தல் அறிதற்பாலதாம். மேலும் இப்பதிகத்தின் இறுதிச் செய்யுளின்கண் வெளிப்படையாக "அகல்வர் தீவினை நல்வினை யோடுடனாவரே" எனப் பாசம் பகுத்துரைக் கப்பட்டிருத்தலும் காணலாம். மேலும் இவ்விரண் டாம் திருமுறையின் இறுதிப் பாடலிலும் பாசத் தேய்வு புலப்படுத்துவார் போன்று "கைதவமில்லாக் கவுணியன்" என்று தன்னை உணர்த்தியும், நல்வினையும் தீரப்பெற்றார் பாசமற்றவரெனத் தக்கவரெனத் தெரிவித்தற்கு, "நல்ல இமையோர்கள் ஏத்த சிவலோகத்தில் எய்தி இருப்பார்களே" எனப் புகன்று பாச நீக்கப் பயனும் காட்டலுற்றனர் திருஞானசம்பந்தப் பெருமான் என்னலாம்.

அன்றியும், முதற் சூத்திரத்துக்கும் இரண்டாஞ் சூத்திரத்துக்கும் வைப்புமுறைக் காரணம் கூறப்பட் டிருப்பது போலவே, முதற்றிருமுறையின் இறுதிக் கும் இரண்டாம் திருமுறையின் தொடக்கத்துக்கும்

இயைபிருத்தல் நாம் உணருமாறு, "பின்னெடு வார் சடையிற் பிறையும் அரவும் முடையவன்" எனவும், "இன்னெடு நன்னுலகெய்துவ ரெய்திய போகமும் உறுவர்கள் இடர்பிணி துயர்அணைவ் விலரே" என முதல் திருமுறையின் ஈற்றிலேயே இரண்டாம் திருமுறைக்குத் தோற்றுவாய் கூறப்பட்டுள்ளமையும் காணலாம். மேற்கூறியவாறே இரண்டாம் திருமுறை ஆரம்பத்தில் முதற் பாடலிலே, "பின்னு செஞ்சடையிற் பிறை பாம்புடன் வைத்ததே" எனவும், "அகல்வர் தீவினை நல்வினையோ டுடனுவரே" எனவும், "சிவலோகத்தில் எய்திநல்ல இமையோர்கள் ஏத்த இருப்பார்களே" எனவும் கூறப்பட்டிருத்தல் இவ்வியைபினை வலியுறுத்தல் செய்யும்.

## அரன் உயிர்களின் இரண்டற நிற்பன் என்பது

கழனி, பழனம், கோயில், முதலிய பல பகுதிகளைக் கொண்டது பூந்தராய்ப் பதி. செந்நெல், புன்னை முதலியவும் அப் பதியின் பகுதிகளேயாம். மக்கள் வாழிடம், திருக்கோயிலாதியவும் இப்பதியின் உறுப்புக்களே. இவ்வெல்லாப் பகுதிகட்கும் சேர்த்தே பூந்தராய் என்பது பெயராக இடப்பட்டுள்ளது. எனவே, மேற்கூறிய எல்லா உறுப்புகளுடனும் கூடிய பிரதேசத்துக்கும் இப் பெயர் பொருந்தி நிற்றலால் இப் பெயரும் அப் பதியும் அபேதமாகக் கலந்துள்ளன என்னலாம். மனிதர்கள் நரம்பு முதலிய உறுப்புக்களாலான உடம்பினை உடையர். இவ்வுடம்புக்கே பெயரிடப்படுகிறது. எனினும், இவ்வுடம்பினுள்ள உயிருக்கும் இப் பெயர் பொருந்தி நடக்கின்றமை யாவரும் அறிவர். உடம்பு வேறு,

தான்வேறு என்று வேற்றுமையின்றிக் கலந்து நிற்றலால் இப்பெயர் உயிரும் அடைகின்றது. உடம்போடு உயிர் கலந்து நிற்பினும் உயிர் வேறுதான்; உடம்பு வேறுதான். உயிர் உடம்பாகாது. உடம்பு உயிராகாது. 'நான்' என்று பேசும்போது உடம்பும் உயிரும் அபேதமாய்க் கலந்திருத்தல் காட்டப்படுகின்றது. "என் உடம்பு" என்னும்போது உடம்பும் உயிரும் வேறுனவை என்பது உணர்த்தப்படுகின்றது. இவ்வாறே முதல்வன் உயிரோடு கலந்துள்ளான். இக் கலப்பினைப் பொன்னும் பணியும் போல்வதென மாயாவாதிகள் அபேதப் பெயரிட்டுக் கூறுவர். இருளும் வெளியும் போல்வதென மத்துவர் பேதப் பெயரால் வழங்குவர். சொல்லும் பொருளும் போல்வதெனப் பேதா பேதப் பெயரிட்டுப் பேசுவர் பாஞ்சராத்திரிகள். இம் மூன்றும் கலப்பினை முழுமையாகத் தெரிவிப்பனவாகா. உடம்பும் உயிரும்போல் என ஒன்ருயிருத்தற்கும், கண்ணொளியும் ஆதித்தனும் போல என வேருதற்கும், கண்ணொளியும் ஆன்மபோதமும் போல் என உடனுதற்கும் சித்தாந்தம் உவமைகளைக் காட்டுகின்றது. சிவபெருமான் மீளச் சிருட்டிங்குங்கால் ஆன்மாக்களோடு உடனாய் நின்றே செய்வரென்பது பெறப்படும். இவ்விதமான கலப்பினை உணர்த்தும் பொருட்டே பாடலில் துன்னி என்ற சொல் அமைந்துள்ளது. பூந்தராய்ப் பதிவேறு தாம் வேறு என்னவொட்டாமல் இறைவன், உடம்புள் உயிர்போல் ஆலயத்துள் உறைகின்ருன். மற்றும், ஞானசம்பந்தப் பெருமானுக்கு வான வெளியில் வேருய் இருந்தும் காட்சி தந்து ஆதித்தனும் கண்ணொளியும் போலவும் எழுந்தருளியுள்ளான். கண்ணொளியும்

ஆன்மபோதமும் போல ஞானசம்பந்த சுவாமிகளுக்கு உடனாயிருந்து ஞானக் காட்சியும் நல்கியருளினன் பெருமான். இப்பதியின்கண் பெருமான் இங்ஙனம் முந்நிலைமையான முறையில் நின்று அருள் புரிதலின், "பூந்தராய் துன்னி" எனக் கூறப்பட்டுள்ளமை காணலாம். மற்றும், வெண்கிழியிற் பவளம் என்ற உவமையும் இது குறிக்கும். மெல்லிய வெண்கிழியுள் பவளம் பொதிந்து ஒரு முடிப்பாக இருத்தலால் ஒன்றாகவும் உள்ளது. இருந்தபோதிலும், பவளம் வேறு; வெண்கிழி வேறுதான். பவளம், மெல்லிய வெண்கிழிக்குள்ளிருந்து அந்த முடிப்புக்கு மதிப்பை உடனாயிருத்தலால் தருகின்றது. இங்ஙனம் பூந்தராய்க்குத் தரப்பட்டுள்ள உவமையும் பவள முகத்தால் பெருமானையும், பெருமான் அத்துவிதமாய் நின்றருள் புரிதலையும் நன்கு உணர்த்தும் வண்ணம் பாடலிலே திருவாய் மலரப்பட்டுள்ளமை நனி மகிழ்தற்குரியதாம். "அரக்கொடு சேர்த்திய ணைத்த கல்" சாத்திரத்திற் கூறப்படுவதாம். இவ்வாறு, "பூந்தராய் துன்னி" என்ற பிரயோகத்தாலும், "வெண்கிழியிற் பவளம்" என்ற உவமையாலும், உயிர்களோடு முதல்வன் உடங்கியைந்தும், தானேயாகியும், பிரிப்பின்றியும் நிற்றல் காட்டப்பட்டுள்ளது. சூத்திரத்தே, "அவையேயாய், தானே ஆய், அவையே தானே ஆய்" என்று முதல்வன் நின்றருளுதல் கூறப்பட்டுள்ளமையோடு பாடற்பகுதியும் பொருந்தி நடத்தலை ஒருவாறு நாம் துணிதல் கூடும். இதுவே "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத்திறன்" என்பது நம் சிவப்பிரகாசம்.

## ஆன்மாக்களுக்குக் கன்ம பலனை —
## அரனே கொடுப்பன் என்றல்

ஆன்மாக்களுக்கு இரு கன்மங்களையும் சிவ பெருமான் தமது ஆஞ்ஞையால் அருளுவர். ஒரு பட்டணத்தைக் காக்கும் அரசன் தொழில் நடத்து வது போல்வதாகும் இச் செயல். இந்த அரசு ஞாபகத்தை நினைவூட்டும்வகையில் தேவாரத்தின் கண் "நல் இமையோர் முடிதோய் கழலீர்" என்ற சொல் தொடர் அமைந்துள்ளது. தேவர்கள் முடியால் வணங்குவது கூறப்பட்டுள்ளமையால் சிவபெருமான் தலைவர் என்பது தோன்றும். தவிர வும் சாதாரண நூல்களில் அரசற்குக் கூறுவது போல இங்குக் கழலீர் என்ற சொல் அமைந்திருத் தலும் இக் கருத்துக்கு உறுதுணையாம். தேவர்கள் ஆணைவழி நிற்றற்குரியர். இறைவன் ஆணையிடுதற் குரியன் என்பது முடிதோய் கழல் என்பதால் புலப் படும். அரசன் போல முதல்வன். மந்திரி முதலி யோர்போலச் சிருட்டியாதி செய்யும் தெய்வங்கள். குடிகள் போல உயிர்கள். சட்டம் போல வேதா கங்கள். மறியற்கூடம் போல நரகம். மந்திரியாதி யோர் பதவிபோலத் தேவலோகம். குடிகள் பதவி போல்வது மண்ணுலகு. "கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை" என்பது குறள். அடியின்கண் முடிதோயப் பெறுதார் பாசறை போன்ற உடம்பிற் கட்டுப் பட்டுக் கிடப்பர். "கோடி காவனைக் கூறுத நாளெல் லாம் பாடி காவலிற் பட்டுக் கழியுமே" என்பது திருநாவுக்கரசர் திருப்பாட்டு. இவ்வளவும் "நல்

இமையோர் முடிதோய் கழலீர்" என்ற திரு வாக்கிற் பொதிந்து கிடத்தல் காணலாகும்.

வித்து விதைத்தவனிடத்தே கட்டுப்பட்டுப் பலன் தருவதில்லை. மண்ணினிடத்தே கட்டுப்பட்டுக் கிடந்து தண்ணீர் கூடினபொழுது பலன் தரும். இருவினையும் இங்ஙனமே மாயை பற்றுக் கோடாகக் கிடக்கும். உழவர் செய்யும் தொழிலுக்குத் தக்க பயனை விளை நிலம் தரும். தொழில் தாராது. வினைப் பயன்களை முதல்வனே உயிர்கட்குக் கூட்டுவன். வினை சடம். ஆதலின் தானே வந்து பொருந்தாது. உழவர் செய்யும் தொழிற்கு விளை நிலம் பயன் கொடுப்பது என்னும் செய்தியை நினைப்பூட்டுவது புலப்படுமாறு தேவாரத்தே "செந்நெலங் கழனிப் பழனம்" என்ற சொற்றொடர் அமைந்துள்ளது காணலாம்.

மற்றும் வினை, உயிர்கட்கு எவ்வாறு வந்தது? இது ஆதியோ? அநாதியோ? என்ற ஐயமறுத்தற்கு நெல்லின்கண் உமி என்ற உவமை காட்டப்படுகின்றது. இதனை நமக்கு இப் பாடலில் அமைந்துள்ள செந்நெல் என்ற சொல் காட்டுகின்றது. ஆதலால் மலம், மாயை, கன்மம் என்பன அநாதியே உள்ளன என்ற உண்மை பெறப்படுகின்றது.

## உயிர்கள் அச்சுமாறிப் பிறக்கும் என்பது

உயிர்கள் வினைக்கீடாக மாறிப் பிறக்கும். அங்ஙனம் மாறிமாறிப் பிறக்கையில் படைப்புக் காலந் தொடங்கி மகா சங்கார காலமளவும் நிலை பெற்றிருக்கும் சூக்கும தேகம். சூக்கும தேகமும் அழிந்

தால் முத்திப் பேறும். ஆல உடலங்கள் கெட்ட விடத்தும் சூக்குமதேகம் வினையறவு காறும் நிலைத்திருப்பதாகும். ஒரு சூக்கும உடம்பிலிருந்துதான் பல ஆல உடம்புகள் தோன்றுகின்றன. இதனைச் சந்திரனுடைய ஒற்றைப்பிறைக் கீற்று இருந்துதான் மற்றைக் கலைகள் தோன்றித் தோன்றி அழிகின்றன என்பதனால் விளக்குவர். "மதிக்கெழு கலைகள் போல வருவது போவதாமே" என்பது இதனை உணர்த்தும். இதனை நமக்கு நினைவூட்டும் முறையிலேயே, "பின்னு செஞ்சடையிற் பிறை. வைத்தது" என்ற பாடலின் பகுதி அமைந்துள்ளது. மற்றும் பாசம் பகையாயது என்பதனைப் பாம்பு என்ற சொல் உணர்த்தும். சிவப்பிரகாசத்து மங்கல வாழ்த்தின் கண்ணும், "தேங்கமழு மலரிதழித் திங்கள் கங்கை திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்து" எனத் திங்களும் அரவும் கூறப்பட்டிருத்தல் காணலாம். 'பாம்பும் சந்திரனும் தம்மிற் பகையாயிருக்கவும் அவையிற்றைப் பகையற வைத்து' என உரையின்கண் இப்பகைமை காட்டியுள்ளனர். தேவாரத்திலும், "பாம்பொடு திங்கட் பகை தீர்த்தாண்டாய்" எனக் கூறப்பட்டுள்ளமை தெரியலாகும். இதனால் உயிரும், உயிருக்கு அநாதியே பாசமிருத்தலும் பாச உண்மை கூறும் இச் சூத்திரத்தில் கூறப்பட்டிருப்பது போலவே இத் திருமுறைப் பாடலிலும் பிறையும் பாம்பும் கூறப்பட்டிருத்தலால் தெளிதல் கூடும்.

மற்றும் பிறை என்னும் சொல்லே பிற என்னும் பகுதியுடைமையால் பிறத்தல் என்னும் பொருள் தரும். இதனாலும் அச்சுமாறிப் பிறத்தல் என்ற

கருத்திருத்தலை நாம் காணலாம். பின்னும், ஆன்மா தூல சரீரம் விட்டுப் போதற்குப் பாம்பு தோலை உரித்துப் பிறிதொரு தோலைப் போர்த்துச் செல்லுதல் உவமையாகத் தரப்படும். அதனைப் பாடலில் "பாம்பு" என்ற சொல் உணர்த்தி நின்றதெனக் கொள்ளினும் பொருந்தும்.

இன்னம், உயிர்கள் அச்சு மாறும் செய்தியைப் பாடலில் உள்ள பூந்தராய் என்ற சொல்லும் தெரிவிக்கும் குறிப்புடையதே. இப் பெயர் சீகாழிப் பதியின் பன்னிரு பெயர்களுள் ஒன்றெனப் பலரும் அறிவர். இரணியாக்கனைக் கீழுலகிற் சென்று கொன்று மீளுதற்பொருட்டுத் திருமால் சுவேதவராக மாக மாறினன். பூமியைப் பிளந்து சென்று அசுரனைக் கொன்று மீண்டான். வெள்ளைக் கோல மாக மாறிய திருமால் வெற்றிக் களிப்பால் தன்னை மறந்து குதுகலித்தான். பின்னர் திரு முருகப் பிரானால் உண்மையுணர்ந்து சிவத்தை வழிபட்டுத் திருமாலாயினன். இங்ஙனம் விண்டு மூர்த்தி அச்சு மாறிய செய்தியைப் பூந்தராய் என்ற சொல் உணர்த்தி நிற்றலும் நாம் காணலாம்.

## இறைவன் தன் சத்தியில்
## பிரிப்பின்றி நிற்பன் என்பது

உயிர்கள் மாறிப் பிறத்தலை வினைக்கீடாக உயிருக்கு ஊட்டுவது சத்தியாம். அச்சத்தி இறைவனின் வேறன்று. "ஆணையின் நீக்கம் இன்றி நிற்கும் அன்றே" என்ற பகுதி இஃதுணர்த்துவதாகும். இதன் பொருள் முதல்வன், தனது ஆணையாகிய

சிற்சத்தியோடு பிரிப்பின்றிச் சமவேதமாகிய திரோதான சத்தி வடிவாய் நிற்பன் என்பதாம். உயிர்களோடு கலந்து நிற்கும் இறைவன் நிலையே திரோதான சத்தி எனப்படும். சிவமும் சீவனுங் கலந்திருக்கும் தாதான்மியம் அத்துவிதம் என்று கூறப்படும். எவ்விடத்தும் வியாபித்தல் சத்தியின் காரியம். ஆதலால், சத்தியில் நீக்கமின்றி நிற்பன் என்பது கருத்தாம். சூரியனும் அதன் ஒளியும் ஒன்றென்றுவது இரண்டென்றுவது பிரித்தறிய வாராது. அதுபோலவே முதல்வனும், சிவம் சத்தி என ஒன்றுதற்கும் இரண்டாதற்கும் பொதுவான தாதான்மிய சம்பந்தம் பொருந்திச் சருவ வியாபியாய் நிற்பன். பாசங்கள் முதல்வனுக்கு உடைமை. பசுக்களாகிய நாம் அடிமை. ஆதலால், பசு பாச வியாபகம் இறை வியாபகத்துட்பட்ட வியாப்பியமாம். இவ்வாருன சத்தி சிவ ஒருமைப்பாடு நமக்கு இத் தேவாரப் பாடலில் "பின்னு செஞ்சடை" என்ற குறிப்பாற் புலப்படுவதாம். பின்னுதல் சத்தியையும், செஞ்சடை சிவத்தையும் உணர்த்தும். இடையில் உள்ள செம்மை என்ற சொல் சூரியனும் ஒளியும்போல என்ற உவமையை நினைப்பூட்டும். தன்னை விளக்கும்போது சூரியன் எனப்படும். விடயங்களை விளக்கும்போது ஒளி எனப்படும். இங்ஙனமே புறப்பொருளை நோக்குகையில் சத்தி எனப்படும். இது பின்னு என்ற சொல் தெரிவிக்கும். புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய் நிற்கு நிலையில் சிவம் எனப்படும். அது செம் சடை என்ற சொற்றொடரால் தெரிவிக்கப்படுவது. எனவே முதல்வனும் சத்தியும் பொருளால் ஒன்றுயும் தன்மையால் இரண்டாயும் நிற்றல், "பின்னு செஞ்

சடையில் பிறை பாம்புடன் வைத்ததே” என்பதால் பாடலிலே பகரப்பட்டுள்ளதென்னலாம். பிறை பாம்பு வியாப்பியம். சடை வியாபகம் என அறிதரற்பாலது.

இவ்வாறு இரண்டாம் திருமுறையின் முதற் பாடல் எவ்வகையாலும் இரண்டாம் சூத்திரத்தின் கருத்து விளக்கத்துக்கான சொற்களும் குறிப்புமே கொண்டு அமைந்திருத்தல் ஆய்ந்து மகிழ்தற்குரியதாம். எனவே திருஞானசம்பந்தர் இசையால் தமிழ் பரப்பித் தமிழால் ஞானம் பரப்பியுள்ளமை நம்மனோர் தவப்பேறும்.



# மூன்றுஞ் சூத்திரம்

### பசு உண்மை

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

## தொடர்புரை

*மேலைச் சூத்திரத்தில் உலகத் தோற்றத்திற்குத் துணைக் காரணமான வினை முதலியன உண்டு என்று கூறப்பட்டது. இம் மூன்றாம் சூத்திரத்தில் உலகப் பயனை அனுபவிக்கும் உயிர் உண்டு என்பது அனு மானப் பிரமாணத்தாற் கூறப்படுகிறது.*

## பொழிப்புரை

*இலது என்றலினாலும், எனது உடல் என்றலி னாலும், ஐம்புலன்களை அறிதலினாலும், ஐம்புலன் களும் ஒடுங்கின சொப்பனத்தை அறிதலினாலும். சுழுத்தியில் இன்பத் துன்ப அனுபவமும் உடம்பு சேட்டித்தலும் இல்லாமையாலும், அறிவிக்க அறித லானும், மாயா காரியமாகிய உடல் முதலியவற் றிற்குக் குறிப்பேதுவால் வேறு வேறு பெயர் இருத்தலானும், சூனியம்—உடல்—ஐம்புலன்—சொப் பனம்—சுழுத்தி—பிரமம்—சமுதாயம் ஆகிய இவற் றின் வேறாய் உடம்பினுள் உயிர் உண்டு.*

**கருத்துரை**

ஆன்மாவின் உண்மை உணர்த்துகின்றது இச் சூத்திரம்.

**சூர்ணிகை**

1. இல்லையென்கின்ற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு.

2. எனது உடல் என்று பொருட் பிறிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிர் உண்டு.

3. ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு.

4. கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே அக் கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

5. நித்திரையினும் பிராணவாயுத் தொழில் பண்ணவும் சரீரத்துக்குப் புசிப்புத் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராண வாயுக்கு வேறாய் உயிர் உண்டு.

6. மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

7. எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

**விளக்கம்**

பொருள்கள் பதி, பசு, பாசம் என மூன்றும். பதிப்பொருளே இவற்றுள் முதன்மை உடையது. இப் பொருள் உலகிற்கு நிமித்த காரணமாவது. ஆதலால், பதிப்பொருள் உண்டென்பது முதற் சூத்திரத்தால் கூறப்பட்டது.

நிமித்த காரணம் என்பதனோடு காரணம் என்னும் பொதுத் தன்மையால் தொடர்புடையவை துணைக் காரணமாகிய வினையும் முதற் காரணமாகிய மாயையுமாம். இவ்விரண்டும் பாசம் என்பதில் அடங்கும். இவற்றால் உலகம் தோன்றுகின்றது. இச் செய்தி இரண்டாம் சூத்திரத்தால் கூறப்படுகின்றது.

இனி, இம் மூன்றும் சூத்திரத்தால் முற் கூறப்பட்ட பாசங்களாலும், அவற்றின் காரியத்தாலும் வினையும் பயனைப் பொருந்துதற்குரிய பசுக்கள் உண்டு என்பது கூறப்படுகின்றது. உலகப் பயனை அனுபவிப்பதற்குரியது உயிரேயாம். குயவன்போல் இறைவனைக் கொள்க. குடம் போல்வது பாசம். குடம் குயவனால் கொள்வோர் பொருட்டே செய்யப் படுவது. அதுபோல, உலகப் பயனைக் கொள்ள இருப்பவை உயிர்களேயாம். உயிர்கள் பல. ஆன்மா உளது என்பதே இச் சூத்திரம் அனுமான அளவை யாற் சாதிப்பது. முன்பு, உலகின்மேல் வைத்துப் பதியுண்மை கூறப்பட்டது. உயிர், கண்ணாற் காணப்படும் பொருளன்று. காணப்படாத பொருளை உண்டென்று சாதிப்பதானால் அனுமானப் பிரமா ணத்தாலேயே சாதிக்க வேண்டும். காரியத்தைக்

கொண்டு காரணம் உண்டென்று நிச்சயிப்பதுதான் அனுமானப் பிரமாணம் எனப்படும். ஆகையால், காணப்படுகிற உடம்பினுடைய போக்குவரவாகிய காரணத்தைக் கொண்டு, இக் காரியங்களை உடல் தானே செய்யாமையால் உடல் காரணமன்று; இதற்குக் காரணமாகிய உயிர் ஒன்றை இவ்வுடம்பு பெற்றிருக்க வேண்டுமென்று அனுமானிக்கவேண்டி யுள்ளது. இதனால் உடம்பின்மேல் வைத்து உயிர் சாதிக்கப்படுவதாயிற்று.

## மூன்றாந் திருமுறை

### முதற் பாடல்

கோயில் – பண் – காந்தார பஞ்சமம்

ஆடினாய் நெய்யொடு பால்தயிர்
அந்தணர் பிரியாத சிற்றம்பலம்
நாடினாயிடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல் கீதமும் பல்சடைப்பனி
கால்கதிர் வெண்திங்கள்
சூடினாயருளாய் சுருங்கஎம் தொல்வினையே.

### பொழிப்புரை

நன்மணமுள்ள கொன்றை எனப்படும் பிரணவ புட்பத்தை விரும்பியணிந்துள்ள பெருமானே! நெய், பால், தயிர் எனப்படும் இப் பொருளால் அபிடேக மாடியருளினீர். அந்தணர் (மூவாயிரவர்) எப் போதும் விட்டு நீங்காத பொன்னம்பலத்தையே தாம் எழுந்தருளியிருக்கும் நிலையான இடமாக அடைந்துள் ளீர். வேதங்களையும் கீதங்களையும் பாடியருளினீர்;

விரிந்த சடையின்மீதே குளிர்ச்சியை வெளிவிடுகின்ற கிரணங்களை உடைய வெண்மையான சந்திரனைத் தாங்கியருளினீர். இத்தகைய தேவரீர் எங்களுடைய அறுதியான வினை சுருங்குமாறு திருவருள் புரிவீராக!

## பொருத்தம்

பொதுப்படநோக்கின் இம் மூன்றாஞ் சூத்திரம், "மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது" எனக் கூறி உயிரின் உண்மையை உபதேசிக்கின்றது. அங்ஙனமே, இப் பாடலும் பசு உண்மை கூறுவான் தொடங்கி அதனை நமக்கு நினைவூட்டுவான் கருதிப் பசுவின் தொடர்புடைய பொருட்களாய நெய், பால், தயிர் இவற்றை முதற்கண் இயம்பலுற்றதென்னலாம். அன்றியும் பசுக்கள் பல என்பதும் அப் பசுவர்க்கப் பாகுபாடுகளுங்கூட நமக்கு ஒருவாறு புலனும் வண்ணம் அந்தணர் – திங்கள்–எம் என்றிப் பாடலகத்தே அமைந்து கிடத்தல் காணலாம். மற்றும் இப் பதிகத்துள்ளும் உயிர்கட்கு அமுதானாய் எனவும் கூறியிருத்தல் காணத் தக்கதே. மேலும் இப் பதிகத் திறுதிப் பாடலும் "இவை கூறுமாறு வல்லார் உயர்ந் தாரொடுங் கூடுவரே" எனப் பசு உண்மை காட்டி முடிகின்றது, அன்றியும், இத் திருமுறை இறுதியும் "அவலம் இலரே" எனப் பசுவுக்குரிய சொல் பெற்றே நிற்றல் காணலாகும். மற்றும் இம் மூன்றாம் திருமுறை இறுதிப் பாடல், அடுத்த நான்காம் திருமுறையும் உயிர் பற்றியே உரைத்தலைக் காட்டுவது போன்று "அவலம் இலர்" என்று இறுதிச் சொற்றொடர் பெற்றுள்ளது. ஈண்டுக்

கூறப்படும் அவலம் நான்காந் திருமுறை முதற் பாடலிலே விவரிக்கப்படுதல் கண்டு இயைபு கோடற்குரியதாம்.

அறிவே உயிர். இவ்வறிவு, உடல் பொறி விடயம் முதலியவற்றோடு கூடி அது அது தானாக நின்று பிறகு அவற்றை நீக்கிய விடத்து அப்படி நீக்கியதாயும், அகரம் முதலிய சூக்கும பஞ்சாக்கர ரூபமாய் நின்று அறிந்துவந்த ஒன்றும் ஆகும். மாயா காரியங்கள் கண்ணுக்குக் கண்ணாடி போல்வன. கண்ணாடி பொருளைக் கண்ணுக்குக் காட்டினும் தானறியாது. மாயா காரியமும் அஞ்ஞான காலத்தில் அறிவை விளக்கி நிற்றல் மாத்திரையே அன்றித் தானொன்றையும் அறியாது. ஆகையால் ஆன்மா என்பது மாயா காரியத்தால் அறிவு விளங்கப் பெற்று அறிவதாகும். அஃது அவ்வறிவுக்கு அதீதமான சிவம் அன்று. இதனால் ஆன்மா, மாயை சிவம் என்ற இரண்டின் வேறும். உடலை இடமாகக் கொண்டது பொறி; இப் பொறியால் வருவது விடயம். இச் செய்தியைக் குறிப்பாலுணர்த்துவதே பாடலிலுள்ள பால், தயிர், நெய் என்ற சொற்றொடர். ஆடினாய் என முன்னிலைப் படுத்திக் கூறுதலால் அங்ஙனம் கூறும் ஆன்மா இறைவனின் வேறுயுள்ளமை பெறப்படும். சூக்கும பஞ்சாக்கர ரூபமாய் நின்று அறிந்துவந்ததோரறிவே ஆன்மா. இதனைப் பிரணவச் சின்னமான "நறுங்கொன்றை" என்பது புலப்படுத்தும். இனி, உடம்பின் குண விசேடங்கள் உபசாரத்தால் உயிருக்கேற்றிக் கூறப் படும். என்றாலும் உடம்பின் வேறாய் உயிர் எனப் படுவதுண்டு எனப்படுமிதனை 'அந்தணர்' என்ற

சொல்காட்டும் தன்மை உடையது என்னலாம். உலகாயத நூற்கொள்கை கொள்ளத் தக்கதன்றென்பதை, "பாடினாய் மறையோடு பல்கீதமும்" என்பதுணர்த்தும். துரியாதீதமாகிய கேவலத்தில் அறியாமலும், சகலத்தில் கலை முதலிய கருவிகளைக் கொண்டு அறிவதுமாய் நிற்பது உயிர். இது என்றும் ஒருபடித்தாய்த் தானே அறியும் பிரமமாகாது. இதனைப் "பல்சடைப் பனிகால் கதிர்வெண் திங்கள் சூடினாய்" என்ற இடம புலனுறுத்தும். குடத்துக்குக் கொள்வோர் இருத்தல்போல வினைக்கு உயிர்கள் என்பதனை, 'எம் தொல்வினை சுருங்க அருளாய்' என்பது தெரிவிக்கும். எம் என்றமையும், அந்தணர் என்றமையும் உயிர்கள் பல என்பதைத் தெரிக்கும். இதனை இப் பதிகத்து எட்டாம் பாடலிலே, "உயிர்கட்கு அமுதாயினாய்" என்பதும் உணர்த்தும். ஆடினாய், முதலிய சொற்களால் அங்ஙனம் சொல்லும் பொருள் உயிர் என்பது தெரியலாகும். பாசம் அடைவதும், பாசம் அறுவதும் உயிர்கள்தாம் என்பதை இத் திருமுறை இறுதிப் பாடலில் வரும் "அறும் பழி பாவம் அவலம் இலரே" என்பதும் உணர்த்தும். பாசம் உண்டென்பதை இரண்டாம் திருமுறை முதற் பாடலினால் கூறி இப் பாடலினால் பாசம் ஒருவுவது உயிர்தான் என்பதால் இயைபு புலப்படுதல் காணலாம்.

இதுகாறும் கூறியவாற்றால், ஆளுடைய பிள்ளையார், காட்சிப் பிரமாணமாகத் தாம் கண்ட பதியாதியுண்மையினைத் தமது தேவாரத் திருமறையாகிய சுருதிப்பிரமாணத்தால் வெளிப்படுத்தி நம்மை அனுமானித்துக் கொள்ளுமாறு முதல் மூன்று

திருமுறைகளால் உபகரித்துள்ளனர் என்பது போதரும். எனவே ஸ்ரீ மெய்கண்ட பரமாசாரியரின் பிரமாண இயலின் மூன்று சூத்திர உண்மைகளும் ஓராங்கு முதல் மூன்று திருமுறைகளின் முதற் பாடல்களில் அங்குரம்போ லடங்கிக்கிடத்தலை அறிந்து நாம் மகிழ வாய்ப்புள்ளமை காணலாகும்.

பிரமாண இயல் முற்றிற்று.



பொதுவதிகாரம்

# இலக்கண இயல்

பசு இலக்கணம்

## நான்காம் சூத்திரம்

அந்தக் கரண மவற்றி னொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

## தொடர்புரை

இதன் முற்பட்ட பிரமாண இயலில் முதலாஞ் சூத்திரத்தாற் பதி உண்டென்றும், இரண்டாஞ் சூத்திரத்திறாற் பாசம் உண்டென்றும், மூன்றாஞ் சூத்திரத்திறாற் பசு உண்டென்றும் இவற்றினது உண்மை நிறுவப்பட்டது. இனி, மேற்கூறப்பட்ட வற்றின் இலக்கணங்கள் கூறப்படும். அவற்றுள் உயிரிலக்கணம் முதலினும், பாச இலக்கணம் இரண்டாவதாகவும், பதியிலக்கணம் மூன்றுவதாகவும் மொழியப்படும். ஒரு பொருளின் உண்மையை ஐயந்திர அறிதற்கு வழிகள் இரண்டாம். ஒன்று அனுமானத்தால் அறிவதாகும். இரண்டாவது இலக்கணத்தால் அறிவதாம். புகையால் தீயை அறிவது அனுமானம் எனப்படும் இது பிரமாண நெறி. வெப்பத்தால் தீயை அறிவது இலக்கணத் தால் அறிவதாகும். இஃது இலக்கண நெறி. இவ் விருவகையாலும் அறியப்பட்டபின் பொருளின் மீது ஐயம் எழுதற்கு இடனில்லை. அறிவு உறுதிப்

படுகின்றது. இதுவே இந்நெறிகளின் பயன். இம் முறையில், மூன்றும் சூத்திரத்தால் உண்டெனக் கூறப்பட்ட உயிருக்கு இலக்கணம் இந்த நான்காம் சூத்திரம் சொல்லுகின்றதென்க. ஆன்மா எனும் சொல் வியாபகமுடையது எனப்பொருள்படும். இயல்பாகவே மலத்தோடு இயைந்துள்ள தன்மை யால் ஜீவன் என்றும் பெயர் உடையது.

இவ்வாறே முதல் மூன்று திருமுறைகளின் முத லில் நிற்கும் மூன்று தேவாரங்களும் பதி, பாச, பசு உண்மைகளைக் கூறின. இனிநிற்கும் திருநாவுக்கரசு சுவாமிகளின் தேவாரப் பாடல்களாகிய நான்கு, ஐந்து, ஆறுந்திருமுறைகள் பசு, பாச, பதி இலக் கணங்களை உரைப்பனவாகும். "மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா" என்று மூன்றுஞ் சூத்திரம் சொல்லி, நான்காஞ்சூத்திரத்து 'அவ்வான்மாவின் இலக்கணம் தொடங்கப்படுவது போலவே, மூன்றுந் திருமுறை முதற்பாடல் வல்வினைக்குட்பட்ட உயிரை உணர்த்திவிட்டு நிற்க, நான்காந்திருமுறை முதற் பாடல் அவ்வுயிரின் அறிவின்மை அவத்தையாதிய இலக்கணங்களைச் சொல்லலுறுகின்றதென்னலாம். இதுவே இயைபாகும்.

## பொழிப்புரை

ஆன்மாவானது, அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கனுள் ஒன்று அன்று.

ஆயினும் நுண்ணுணர்வு இல்லாமையால் ஓரரசன் சூழ்ச்சித் துணைவராகிய அமைச்சரோடு

கூடிநின்று தன்தொழிலை நடத்துவதுபோல, ஆன்மா வானது ஆணவ மலமறைப்பினால் அறிவு இன்றிச் சட்டைபோன்ற கலாதிகளால் பொதுவகையால் அறிவு நிகழினும் சிறப்புவகையால் உணரும் பொருட்டுத் தன்னுடைய ஆலோசனைத் துணைவர் களான அந்தக் கரணங்களோடு கூடிநின்று, நனவு, கனவு, துயில், பேருறக்கம், உயிர்ப்படக்கம், என்னும் ஐந்து அவத்தையைப் பொருந்தும்.

## கருத்து

அந்தக் கரணங்களோடு ஆன்மா நின்று விழிப்பு நிலை முதலிய ஐந்தவத்தைப் படுதல் ஆன்மாவின் பொதுவியல்பு எனப்படும் தடத்த இலக்கணமாம்.

## சூர்ணிகை :–

1. அந்தக் கரணங்கட்கு உயிர் உட்கூடினாலன்றித் தொழிலில்லாத படியினால், அந்தக்கரணங் கட்கு வேறாய் உயிர் உண்டு.

2. மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

3. உயிர் மூன்றவத்தைப்படும்.

## விளக்கம்

பொறிகள் ஐந்து. அந்தக்கரணங்கள் நான்கு. சித்தம் ஒன்றைச் சிந்தித்து அறியும்; யான் சிந்தித் தேன் என்று அறியமாட்டாது. மனம் அதனை ஆமோ அன்றோ எனச் சங்கற்ப விகற்பம் செய்யும்; சங்கற்பம் செய்தேன் என அறியமாட்டாது. அகங்காரம் அதனைத்துணிவேன்யான் என ஒருப்பட்

டெழுந்து அறியும்; தான் ஒருபட்டெழுந்ததை அறியமாட்டாது. புத்தி அதனை இன்னதெனை நிச்சயித்தறியும்; தான் நிச்சயித்தறிந்ததை அறியமாட்டாது. ஐம்பொறிகள் உணர்த்தவருவன சப்தாதி விஷயங்கள். இது வாயிற்காட்சி எனப்படும். ஐம்பொறிகளால் உணரப்படும் விஷயங்கள் மனம் முதலிய புற அந்தக்கரணங்களால் அறியப்படுவன. இது மானதக்காட்சி எனப்படும். அந்தக்கரணங்களுள் மனத்துக்கு மேலாய்ப் புத்தியில் தோன்றியவைகளே ஆன்மாவினால் உணரப்படும். இது தன்வேதனைக்காட்சி எனப்படும். கடலில் எழுந்து கரையை அடையும் அலைபோன்று இவை ஆன்மாவை வந்தடையும். சப்தாதி விஷயங்கட்கு மன முதலிய அந்தக் கரணங்கள் வேறுபட்டவை. அவ்வாறே மன முதலியவற்றிற்கு வேறுபட்டது ஆன்மா. ஆன்மா கடலுக்கு நிகரெனக் கொள்க. நித்திரையினின்று நீங்கி விழிக்கும் போதுள்ள அறிவு போலும் சிறிது விளக்கம் பெற்றுப் பகுத்தறிவின்றி நிற்கும் நிலை பொதுவகையுணர்வு எனப்படும். தொழிலைச் செய்யும்போதுள்ள பகுத்தறிவோடு கூடி நிற்கும் நிலை சிறப்புணர்வு எனப்படும். ஆன்மா சித்தொடுகூடில் சித்தாயும், அசித்தொடுகூடில் அசித்தாயும் நிற்கும் உரிமையுடையது. ஆதலால் சித்தசித் எனப்படும்.

ஆன்மா அரசன் போல்வது. அந்தக் கரணங்கள் மந்திரியாம். ஞானேந்திரியங்கள் ஐந்தும் வாயில் காப்போர், ஒற்றர், தூதுவர், அத்தானிகர், புரோகிதர் ஆம். கன்மேந்திரியங்கள் ஐந்தும் நால்வகைப் படைகளும் சேனாதிபதியுமாம்.

விஷயங்கள் பத்தும் ஏவலாட்களாம். பிராணவ்வாயு முதலிய வாயுக்கள் உறுதிச் சுற்றமாம். எனவே இக் கருவிகளின் வழி ஆன்மா உலகை நோக்குமேல் ஞானம் குறைபடுகிறது. தலைவனை நோக்குமேல் ஞானம் மிகைபடுகிறது. புறநானூற்றிலும், அரசனைக் கூறுமிடத்தே "அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே கோடியாத்து நாடு பெரிது நந்தும்" எனவும், "வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்...தானும் உண்ணான் உலகமும் கெடுமே" எனவும் கூறியிருத்தல் காணலாம்.

ஆன்மா சிற்றறிவுடையது. முதல்வனும் ஆன்மாவும் சித்துப் பொருளே. முதல்வனுக்கு அநாதியே மலமில்லை. ஆதலால் அந்தக் கரணங்களோடு கூடாதே முதல்வனுக்கு அறிவு நிகழும். உயிருக்கு அநாதியே மலம் உளது. ஆதலால், கருவிகளோடு கூடியவிடத்து அறிவு நிகழும், ஆதலால் ஆன்மாச் சிற்றறிவுடையதாம். ஆணவ மலம் உயிரை பந்திப்பது. மாயா கன்ம மலங்கள் சிறிது விளக்கம் செய்வன. ஆணவம் சகசமலம் எனப்படும். மாயா கன்ம மலங்கள் ஆகந்துக மலம் எனப்படும். இவையும் அநாதியே. எனினும் இறைவனுக்கு உடைமைப் பொருளாய் இறைவனுக்குள் அடங்கியிருந்து ஆணவ மல நிவிர்த்தியின் பொருட்டு இறைவன் கூட்ட உயிரைக் கூடும். ஆதலால் இடையே வந்து கூடின எனப்படும் மாயா கன்மங்கள் இறைவனைப் பந்திக்க மாட்டா. பாம்பினிடத்து அடங்கியுள்ள விடம் அப் பாம்பைக் கொல்லாது. ஆணவ மலம் கேவலத்தில் உயிருக்கு அறியாமையைச் செய்வது. இது

சிறப்பிலக்கணம். சகலத்தில் விபரீத உணர்வைச் செய்யும். இது பொது இலக்கணம். இவ்வாற்ருல் நிகழ்வனவே அறியாமையும் விபரீத ஞானமும். அறிவு அறியாமை நிகழுமாறு இதனுல் உணர்த்தப் படுவதாம்.

நான்காந் திருமுறை

## திருநாவுக்கரசர் தேவாரம்

திரு அதிகை வீரட்டானம்

பண் — கொல்லி

கூற்ருயினவாறு விலக்ககிலீர்
    கொடுமைபல செய்தன நான்றியேன்
ஏற்ருயடிக் கேயிரவும் பகலும்
    பிரியாது வணங்குவ னெப்பொழுதும்
தோற்ருதென் வயிற்றி னகம்படியே
    குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேனடி யேனதி கைக்கெடில
    வீரட் டானத்துறை யம்மானே.

## பொழிப்புரை

திருக்கெடிலஞ்சார்ந்த திருவதிகை என்னும் வீரட்டானத்தே திரிபுரங்களையும் சுட்டெரித்துத் தங்கியுள்ள எமது பெருமானே! இயமனுக வந்துள்ள இத்துயரினை நீக்கமாட்டீரோ! செய்யப் பட்ட கொடுமைகள் பல எனினும் அவற்றை மலக் கலப்பால் அறிந்திலேன். இதுபோது என்னை ஏற்றுக்கொண்டாய், (அ) விடையினை உடையவரே! தேவரீரது திருவடிக்கண்ணே எப்போதும் பிரியா திருந்து வணங்குவேன். வந்தவாறு தோற்றுதபடி



திருநாவுக்கரசர்

என் உதரத்துள்ளே நின்று குடரைச் சுருட்டி வலிக்கின்ற துயரத்தினை அடியேன் பொறுக்கும் ஆற்றலற்றேன். ஏற்றருள்வீராக!

## பொருத்தம்

பொதுப்பட நோக்கின், உயிர் அந்தக்கரணங்களின் வழியொழுகி அந்தக் கரணங்களையே தானாக எண்ணித் தடுமாறும் இயல்புடையதென்பதும், அங்ஙனமுள்ள ஆன்மா அந்தக்கரண முதலவற்றின் வேறு என்பதும், ஆணவமல மறைப்பால் உண்மையறியாதே விபரீத உணர்வு பெற்றிருப்பது எனவும், சாக்கிர முதலிய ஐந்தவத்தை அல்லது மேலாலவத்தையாதி மூன்றவத்தை யுற்றுச் சிறிதறிவு விளக்கம் பெறலுறுகின்றதெனவும் இங்ஙனம் அறியாமையும் அவத்தையுமுடையது ஜீவன் என்பதும் நான்காம் சூத்திரத்திற்போலவே இத்தேவாரப் பாடலிலும் கூறப்படுதல் காணலாகும்.

அந்தக் கரணங்கட்கு வேறாய் உயிருண்டு என்பதைக் "கொடுமை பல செய்தன நான் அறியேன்" என்ற இடம் உணர்த்தும். மல மறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை என்பதனை "அறியேன்" என்ற சொல் தெரிவிக்கும். 'கொடுமை' என உணர்த்துதல் மாயையின் செயலாகும். 'அறியாமை' மலத்தின் செயலாகும். ஆணவம் இருளும், கலையாதி மாயேயம் ஒளியுமாம். இதுவே ஈண்டு "இரவும் பகலும்" எனக் குறிக்கப்படுவது. மூவகைச் சாக்கிரத்தும் அவத்தையிருத்தலைத் "தோற்றாதென் வயிற்றினகம்படியே குடரோடு துடக்கி முடக்கியிட

ஆற்றேன்" என்பது தெரியப்படுத்தும். சிவன் அநாதி முத்தரென்பதனை "வீரட்டானத் துறை அம்மான்" என்ற இடம் விளக்கும். மும்மல நீக்கமே முப்புரமெரிசெய்தல் எனவும் பெரியோர் கூறுவர். "அறியேன் — வணங்குவன் — ஆற்றேன்" என்பன மூவகை அவத்தை குறிப்பிக்கும் இயல்பினவாம். இங்ஙனம் கூறியவாற்றால், உயிர்கட்கு அறியாமை யிருத்தலும், அவத்தையுண்மையும் இப் பாடலினு லறியலாமென்பது பெறப்படும். இதனால் "ஆன்மாச் சகசமலத்துணராது — நின்றஞ் சவத்தைத்தே" என்ற சூத்திரக் கருத்துக் கொத்து இப் பாடல் கிடத்தல் காணலாம் என்க. மேலும், இப் பதிகத் திறுதியிலும், "வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தால் என் வேதனையான விலக்கியிடாய்" என்று அவத்தை நினைப்பூட்டப் பட்டிருத்தல் கண் கூடாம். அறியாமையுண்மையை இத் திருமுறை இறுதிப் பாடல், "மேலுமறிந்திலன் நான்முகன் மேற்சென்று, கீழிடந்து மாலுமறிந்திலன்............ காலன் அறிந்தான் அறிதற்கரியான் கழலடியே" என்று கூறுமாற்றாலும் அறியலாகும். இங்ஙனமாக இந்த நான்காந் திருமுறை நான்காஞ் சூத்திரக் கருத்தோடு ஒன்றுபட நடந்து ஆன்ம இலக்கணம் உணர்த்திச் செல்கின்றமை கருதிக் களித்தற் பாலதாகும். மற்றும் இத்திருமுறை இறுதிப் பாடலிலே "பாசம் விசிறி" என்ற சொல்லமைப் பால் அடுத்துப் பாச இலக்கணம் பேசப்படு மென்றுந் தோன்றச் செய்துள்ளமை தேறலாகும்.

இப் பாடலிலுள்ள "அறியேன் — வணங்குவன் — ஆற்றேன்" என்ற சொற்கள் தாம் கிடந்தவாறே

நான்காஞ் சூத்திரத்தின் திரள்பொருளாகிய (1) கேவல நிலையிலே உயிர்கள் ஆணவ மல மறைப்பால் யாதும் உணரா என்பதனையும், (2) சகல நிலையிலே உயிர்கள் உலகத்தை அறியுமென்பதனையும், (3) சுத்த நிலையிலே அவை கடவுளையும் தம்மையும் அறியும் என்பதனையும் புலப்படுத்துதல் தெரிதல் ஆகும்.



## ஐந்தாம் சூத்திரம்

### பாச இலக்கணம்

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்தம் உணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

## தொடர்புரை

இரண்டாம் சூத்திரத்தே பாசம் உண்டு என்பது பிரமாண இயலிலே கூறப்பட்டது. அந்தப் பாசத்துக்கு இலக்கணம் இவ்வைந்தாஞ் சூத்திரத்தில் இலக்கண இயலாதல் பற்றிக் கூறப்படுவது. நான்காம் சூத்திரத்தே உயிர் ஐந்தவத்தையடையும் எனவும், அங்ஙனம் அடைகையில் அமைச்சும் அரசும் போன்று அந்தக் கரணமும் தானுமாய் நின்றடையும் எனவும் கூறப்பட்டது. அப்படி அடையும்போது முதல்வனுடைய உபகாரம் இருந்தே தீரும் என்பதும், அவ்வுபகாரம் யாதென அறிவிக்கு முகத்தால் இரண்டாம் சூத்திரத்திற் கூறப்பட்ட துணைக் காரணமான சிற்சத்தி வழியாய் வரும் கன்மம், முதற்காரணமான மாயை இவற்றின் இலக்கணம் கூறுதலும் இச் சூத்திரத்துப் போதருவதாம். ஐந்தவத்தைப் படும்போதும் முதல்வனுதவி வேண்டுமென்பது கூறுதலால் இவ்வைந்தாம் சூத்திரம் நான்காம் சூத்திரத்தோடு இயைபுடையதென்க.

## பொழிப்புரை

கருவிகளின் வேறுயும், கருவிகளோடு கூடியும் அவத்தைப் படுமெனக் கூறி முடிக்கப்பட்ட உயிரினுல், மெய்வாய் கண் மூக்குச் செவி என்று கூறப் படும் இந்திரியங்கள் தத்தமக்குரிய விடயங்களை இது இன்னது என்று அளவிட்டு அறியும். அங்ஙனமறிந்தும் விடயங்களை அறியும் தம்மையும், தம்மை இடமாகக் கொண்டு நின்று விடயங்களில் தம்மைச் செலுத்துகின்ற அவ்வுயிரையும் அறியமாட்டாவாம். அப்படி அறியமாட்டாத அவ்விந்திரியங்கள் போல, உயிர்களும் தமது அறிவிற்குத் துணையாகிய முதல்வனுடைய சிற் சத்தியால் முன் சூத்திரத்திற் கூறியவாறு கீழாலவத்தையிற்படும் ஐந்தவத்தை, புருவ நடுவிற்படும் அஞ்சவத்தைகளில் நின்று வினைப் பயன்களை அறிந்து அனுபவிக்கும். அனுபவிப்பினும், அனுபவிக்கும் தம்மையும், தம்மை விஷயங்களிற் செலுத்துகின்ற திருவருளையும் அறியமாட்டாவாம்; இந்திரியங்களைச் செலுத்தும் உயிர், அவ்விந்திரியங்களால் அறியப்படும் விடயங்களால் வேற்றுமைப்படுமாறு போல, உயிரைச் செலுத்தும் முதல்வன் திருவருளும் அவ்வுயிரால் அறியப்படும் விடயங்களால் வேற்றுமைப் படுமோவெனின் படாது. ஏதனுலெனின், இரும்பு காந்தத்தின் சந்நிதி மாத்திரையில் இழுத்துக் கொள்ளப்படுமாறு போல, கரணத்தாலன்றிச் சங்கற்ப மாத்திரத்தால் உயிரை அதிட்டித்து நிற்கும் முதல்வன் சந்நிதி மாத்திரையால் அவ்வுயிர்கள் செலுத்தப்படுதலினுல் என்க.

**சூர்ணிகை**

1. உயிராலே தத்துவங்களெல்லாம் தொழிற் படும்.

2. அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.

**விளக்கம்**

அதிட்டித்தல் என்பது கருத்தா ஒன்றினிடமாக நிற்றல் ஆம். அது இருவகைப்படும். சரீரத்தோடு கூடி நிற்றல், சங்கற்ப மாத்திரையாக நிற்றல் என்பனவாம். சரீரத்தோடு கூடி நிற்பின் பொருளசையும்போது தானுமசையவரும். சங்கற்ப மாத்திரையாய் நிற்பின் பொருள் அசையினும் தானசைய வேண்டுவதில்லை. ஓரரசன் ஒரு காரியத்தைத் தானே செய்யின் விகாரியாவான். மந்திரியாதியோரைக் கொண்டு செய்யின் விகாரியாகான். முதல்வன் சங்கற்ப கருத்தாவாதலால் விகாரியாகான். முதல்வன் அறிவிக்கும் உபகாரத்தைச் செய்பவனாவன்.

அருட்சத்தி என்பது ஐவகைப்படும். அவை, பராசத்தி, திரோதானசக்தி, இச்சாசத்தி, ஞான சத்தி, கிரியாசத்தி என்பன. இந்த ஐந்து சத்திகளும் இறைவனுக்குப் பிரிப்பில்லாதவை. அவற்றுள் பராசத்தி ஒன்றே சொரூபம்; ஏனைய நான்கும் தடத்தம். அக்கினியிடம் உள்ள சுடுதல் சத்தி சொரூபம். அது வியாபார பேதத்தால் நீறு செய்தல், பாகம் செய்தல், வற்றச்செய்தல், முதலியன தடத்தம். ஐந்து சத்தியும் அருட்சத்தியே. எனினும் இச் சூத்திரத்தில் வினைப் பயன்களை அனு

பவிக்கச் செய்வது எனப்படுவது திரோதானசத்தியைக் குறிக்கும்.

கருவிகளே விடயங்களை அறிதல் இல்லை. ஆன்மாவால் கருவிகள் விடயங்களை அறியும். அதாவது, உயிரே புத்தியைக் கருவியாகக் கொண்டு இந்திரியங்களின் வழியாக விடயங்களை அறியும் என்பதாம். கண் ஒளியுடைப் பொருளாயினும், தானே காணுமாறின்றி, சூரியன் முதலிய பிற ஒளிகளின் துணைகொண்டே காணும். உயிரையின்றி ஐம்பொறிகள் விடயங்களை அறியமாட்டா. ஐம்பொறியையின்றி உயிர் விடயங்களை அறியமாட்டாது. உயிர் முதல்வனாலேயே அறியும். இதனால் தத்துவங்கட்கு உயிர் முதல் எனவும், உயிருக்கு இறைவன் முதல் எனவும், இறைவனுக்கு வேறு முதல் இல்லை என்பதும் அறியலாம். இறைவன் காட்ட உயிர் பொருள்களைக் கண்டுவினையினளவுக்கு நுகரும். வினைப் பயன் உயிரினுடையதே. இறைவனுக்கில்லை. சிவன் என்பது பேரின்பத்தையும், முற்றறிவையும், தூய தன்மையையும் உடைய முதல்வன் எனப் பொருள்படும் சொல்லாம். கதிரவன் ஒளியில் விண்மீன் போன்று, ஆன்மா ஒன்றை உணருங்கால், முதல்வனின் வேறாய் விளங்குதலுமின்றி, அவனேயாதலுமின்றி, உடனாயடங்கி நின்றுணரும் என்ப. கதிரவனும் கதிரும் போலச் சிவமும் சத்தியும், இலிங்க உருவும், அர்த்தநாரீச மூர்த்தமும் இஃதுணர்த்தும். இது சித்தாந்த சைவச் சிறப்புடை அறிவாகும். "அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்று ஸ்ரீ மணிவாசகப் பெருமான் அருளியது, சூரியனையும் ஒளியையும் அவ்

வொளியால் அறிவது போலச் சிவசத்தியினாலேயே அச் சத்தியையும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் சிவனையும் அறிதல் கூடுமென்பதான சித்தாந்த சைவ நெறி புலப்படுத்துமாறும்.

ஐந்தாம் திருமுறை

கோயில் - திருக்குறுந்தொகை

அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலும்இப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே.

## தொடர்பு

முன்பு இரண்டாம் திருமுறையின் முதற் பாடலாலே பாசம் உண்டு என்பது கூறப்பட்டது. அதனை அப் பாசுரத்துத் தொடக்கச் சொல்லான 'செந்நெல்' என்பது தெரிவித்து நின்றமை கண்டோம். இங்கு இப் பாடல் மேற்சொல்லப்பட்ட பாசத்தின் இலக்கண முணர்த்தா நிற்பதாகலின், 'அன்னம்' என்று தொடங்குதல் காணலாம். பாசம் பசுவினது புசிப்பாய் நிற்பதாகலின் இச் சொல்லால் இப் பாடல் தொடங்குகின்றமை தெரியலாம். மேலும் பாசம் இறைவனைச் சாராதென்பதும், பசுவுக்குப் புசிப்பிக்கும் உதவி முதல்வனாலே நிகழ்கின்றதென்பதும் ஈண்டைக்குக் கூறப்பட வேண்டுதலால் சூத்திரக் கருத்தோடு இப் பாடலின் கருத்தும் ஒத்து நடத்தல் காணலாம். நான்காம் பாடலிலே கேவல சகல அவத்தைகள் கூறப்பட்டன. எந்தச் செயலையும் முதல்வன் சத்தியால் செய்வித்தருளுவ

ஞுதலின் அம் முதல்வன் செயலையே இப் பாடலும் கூறுதல் இயைபாம்.

## பொழிப்புரை

தில்லைச் சிதாகாசத்தே நடித்தருளுபவன் உயிர்களின் புசிப்புக்கான அன்னமும் பாலித்தருளுவன். மற்றும் அவற்றின் யோகத்துக்கான பொன்னுதியவும் பாலிப்பன். மற்றும் இவ்வுலகிலே அவன் என்னென்ன பொருள்கள் உயிர்கட்கு வேண்டுமோ அவற்றையெல்லாம் பாலித்து இப் பிறவியிலேயே சுத்த நிலைப் படுத்தி (அநுபவ ஞானம் வரப் பண்ணி) இன்பப் பெருவாழ்வினை அளித்தல் காணுமாறு இப் பிறவியை இன்னமும் தந்தருள் செய்வனே?

## பொருத்தம்

இரக்கமே முதல்வனுக்கு அநாதியாம் தன்மை. இவ்விரக்கமே உயிர்கட்குப் பசுத் தன்மையை நீக்கிச் சிவமாந் தன்மையை விளக்குவது. இவ்விரக்கம் வல்லமை அல்லது சத்தியேயாம். இக் காரணம் பற்றியே இரக்கத்தை உணர்த்துதற் பொருட்டுப் "பாலிக்கும்" என்றார். இறைவனைத் "தில்லைச் சிற்றம்பலம்" என்றார். இதனால் சத்தி சங்கற்ப மாத்திரையால் முதல்வன் அனைத்தையும் செய்வன் என்பது பெறப்படும். பாசபக்குவம் உயிர்கட்கு இறைவனாலாவது என்பதனை "அன்னம்" என்ற சொல் உணர்த்தும். மற்றும் உயிர்கட்கு வேண்டும் ஈடேற்றத்துக்கான எல்லா வகையாலும் பாசம் பக்குவப் படுத்தப்படுவது சத்தி செயலேயாம். இச் சத்தி சிவனையின்றியில்லை. இதனால், "தில்லைச்

சிற்றம்பலம் பொன்னம் பாலிக்கும்" எனப்பட்டது. இறைவனின் நடத்தம் எனப்படும் திரோதனசத்தி உயிர்கட்கு அறிவு சிறிது விளங்கவைத்து ஈடேற்று வதேயாதலின் "இன்னம் பாலிக்குமோ இப் பிறவியே" என்றார். உயிருக்குச் சுதந்தரமின்மை யாற் "பாலிக்குமோ" எனப் பட்டது. "இப் பூமிசை" என்றதால் ஏனைப் புவனங்களும், இப் பூமியின் தீவுகளும் உயிர்களின் அறிவு நுகர்வுக் கேற்ப இறையருளால் படைக்கப்படுவதும் தெரித லாகும். இதுகாறும் கூறப்பட்ட கருத்துக்களால் எல்லாத் தத்துவங்களும் உயிரால் தொழிற்படும் எனவும், அவ்வுயிர்களெல்லாம் அரனாலே எதனையும் அறிதலுறும் எனவும் கொள்ளப்படும். எல்லாம் இறைசெயல் என்பதை உணர்த்துமாறு இப் பதிகத் திறுதிப் பாடலிலும் "சிற்றம்பலவன் சேவடி சென் றடைந்து உய்ம்மின்" என்று அருளியுள்ளார். மற் றும், இத் திருமுறை இறுதிப் பாடலிலும் அங்ஙனம் செய்யப்பெறாது பாசக் கடல் வீழ்வாரைக் "கருத் திலாக் கயவக் கணத்தோர் அருத்தி செய்து அறியப் பெறுகின்றிலர்" எனப் பாசவன்மை காட்டியும் கூறி யுள்ளார். மேலும், அடுத்த திருமுறை இறைவன் பெருமையைப் பேசுவதென்னும் முறைமை புலப்படு மாறு "பிரான் பெருந்தன்மையை" எனக் கூறியுள் ளார். இதனால், உயிர், இறைவழி நின்று பாச வன்மை போக்கிக்கொள்ளுமாறு உபதேசிக்கப்பட் டது. பொதுப்பட நோக்கின் இப் பாடல் "அன்னம்" எனத் தொடங்கிப் "பிறவியே" என முடிதலுற்றுப் பாச விளைவையே அறிவுறுத்த லாலும், இடையே "சிற்றம்பலம்" என்ற சொல்

நின்று அரன்புரியுதவி காட்டுதலாலும் இப் பாடலும், இதனை முதலாகக் கொண்ட இத் திருமுறையும் சிவஞானபோத நூலின் ஐந்தாம் சூத்திரக் கருத்தோடு பொருந்தி நடக்கின்றதென அறியலாம்.



# ஆறுஞ் சூத்திரம்

## பதி இலக்கணம்

உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

### தொடர்புரை

முதல் சூத்திரத்தில் உண்டு என்று கூறப்பட்ட பதிப்பொருளுக்கு இலக்கணம் இவ்வாறும் சூத்திரத்திற் கூறுகின்றார். இதற்கு முன் உள்ள ஐந்து சூத்திரங்களாலும் பதி, பசு, பாசம் எனப்படும் முப்பொருள்களுள் சத்துப் பொருளின் இலக்கணமும் அசத்துப் பொருளின் இலக்கணமும் மயங்கா முறையில் கூறப்பட்டன. இன்னமும் இலக்கண இயலுள் கூறவேண்டிய பதிப்பொருளின் இலக்கணம் இச் சூத்திரத்தில் கூறப்படுகின்றது. இனிக் கூறப்பட இருக்கும் உண்மையதிகாரத்துக்கு இச் சூத்திரம் ஒரு தோற்றுவாயாகவும் அமைக்கப்பட்டுள்ளது. இரண்டாஞ் சூத்திரத்தில் பதியின் பொது இயல்பு கூறப்பட்டது. அதற்குரிய செயலும் கூறப்பட்டது. இச் சூத்திரத்தில் பதிப்பொருளின் சித்துச் சத்தாய் நிற்கும் சிறப்பியல்பு கூறப்படுகின்றது. ஆனால் செயல் கூறப்பட்டிலது. செயல் எட்டாம் – பதினொன்றும் சூத்திரங்களிற் கூறப்படும். இச் சூத்திரம், முதல்வன் அறியப்படும் பொருளா? அறியப் படாப் பொருளா? என்னும் ஐயம் தவிர்க்க எழுந்

தமையால் முன்னைச் சூத்திரங்கட்குப் பின்னும், வருஞ் சூத்திரங்கட்கு முன்னும் நிற்கும் இயை புடையதாயிற்றென்க.

## பொழிப்புரை

ஐந்தாஞ் சூத்திரத்திற் கூறிய 'தம்முணர்வின் றமியாகிய' முதற் பொருள் பிரமாணங்களால் அறியப்படுமோ படாதோ என ஐயம் நிகழும். பிர மாணங்களால் அறியப்படும் தன்மை யுடையதா யின், அதனால் அறியப்படுகின்ற பிரபஞ்சத்தைப் போல அழிந்துவிடும் பொருளாகிய அசத்தாகிவிடும். எவ்விதத்தாலும் அறியப்படாத பொருள் எனின், அது முயற்கோடு போன்று சூனியமாகும். ஆதலால், அறியப்படுதல், அறியப்படாமை என்ற இரண்டில் ஒன்றில் கட்டுப்படாமல் ஒருவகையால் அறியப் படுதலும் ஒரு வகையால் அறியப் படாமையும் என்ற இருவகைத் தன்மையும் உடைய சிவசத்து முதற் பொருளாகும் என்று உண்மையறி வுடையோர் கூறுவர்.

## கருத்துரை

முதல்வன், பாசஞான பசு ஞானங்களால் அறி யப் படாதவன் ; பதி ஞான மொன்றினால் அறியப் படுபவன்.

## சூர்ணிகை :-

1. உயிர் அறிவினாலே அறியப்பட்ட எல்லாம் அழியும்.

2. அப் பிரமேயமாக அறியப் பட்டவனே அரன்.

**விளக்கம்**

ஞானம் மூவ்வகைப்படும். பாசஞானம் – பசுஞானம் – பதிஞானம் என்பன அவை. பாச ஞானத்தாலும், பசு ஞானத்தாலும் அறியப்படுவது சடப் பொருளாம். அவ்விரண்டினுலும் அறியப் படாமையின் சிவம் எனப்பட்டது. பதிஞானத்தால் அறியப்படும் பொருள் அநித்தமாகாது. ஆதலால், சத்து எனப்பட்டது இதனுல் முதல்வனது சிறப் பியல்பு சிவ சத்தெனப்பட்டது. சிவசத்து என்பது இரு பெயரொட்டுப் பண்புத்தொகையாம்.

பதி, பசு, பாசம் என்ற மூன்றுமே நித்தப் பொருள்களாம், ஆகையின் மூன்றும் சத்தெனவே படும். இவற்றுள் பதியும் பசுவும் சித்துப் பொருள் கள். பாசம் சடப்பொருள். பசு தனித்து நில்லாது, பாசத்தையாவது பதியையாவது சார்ந்தே நிற்கும். ஆகவே பாசம் சடசத்து எனப்படும். பதி சிவசத் தெனப்படும். பசு சிற்சடசத் தெனப்படும். இம் மூன்றும் சடசத்து சிவசத்து என்ற இரண்டு வகை யுளடங்கும். இவற்றுள் சடசத்தன்றென்பதற் காகச் சிவசத்தெனப்படும். சிவ என்ற சொல்லில் சிகரம் எவற்றையும் தன்னுள் அடக்கிக் கடந்து நிற்றலைக் குறிக்கும். வகரம் எவற்றுடனும் கலந்து நிற்றலைக் குறிக்கும். எனவே கடந்தும் கலந்தும் நிற்பதே வியாபகத் தன்மையாம். ஆகா யம், மலமாதியன வியாபகமுடையனவேனும் அவை சித்தல்ல. ஆதலால் சிவம் என்பது சித்து என்னும்

பொருளைக் குறிக்கும். எனவே சிவசத்தென்பது சித்துச்சத்து எனப் பொருள்தரும். உயிரும் சித்துச் சத்துத்தான். எனினும், தனித்து நிற்கமாட்டாக் குறையுடையது. ஆதலால் சிவசத்தெனும் பெயர் பசுவுக்குச் செல்லாது. சிவசத்தெனப்படும் சித்துச்சத்து இன்பப் பொருளாம். முடித்துக் கூறினால், பாசம் சத்துத்தன்மை மாத்திரம் உடைய பொருளாம். பசு சித்துச் சத்துத் தன்மை பொதுவாக வுடையது. பதி, சித்துச்சத்து ஆனந்தம் என்னும் மூன்றும் சிறப்பாகக் கொண்ட பொருளாம். ஆதலால், சித்துச்சத்தே முதல்வனின் சிறப்பியல்பாம்.

முதல்வனுக்குக் கூறப்படும் சிறப்பியல்புக் குணங்கள் எட்டுள. "எண்குணத்தான்" என்று திருக்குறள் கூறும். அவை, தன்வயத்தனுதல் முதல் எட்டுமாம். இந்த எட்டும் சத்துச் சித்து ஆனந்தம் என்ற மூன்றுள் அடங்கும். ஆனந்தம் சித்துப் பொருட்கே உளதாதலால் எல்லாக் குணங்களும் சத்து சித்து என்ற இரண்டில் அடங்கிவிடும். எக்காலத்தும் ஒரே தன்மையாயிருக்கும் சத்துக்கே தன்வயமாம் தன்மை கூடும். ஆதலால், தன் வயத்தன்மை சத்தில் அடங்கும். தூய உடம்பே சித்தெனப்படும். அந்தச் சித்தின் பேதந்தான் இயற்கையுணர்வு, முற்றுமுணர்வு, இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள், முடிவிலா ஆற்றல், வரம்பிலின்பம் என்று கூறப்படும் ஆறும். "ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே" என்னும் மணிவாசகர் திருவாசகம் இன்பம் சித்தில் அடங்குமென்பதை உணர்த்தும். இதனில் கடத்தல் என்ற

சொல், பாச ஞான பசு ஞானங்களைக் கடந்த சித்தென்பதை உணர்த்தும். எனவே, ஒன்ருய் வேருய் உடனுயிருத்தல் முதல்வனின் பொதுவியல்பாம். சித்துச் சத்தாய் நிற்றல் சிறப்பியல்பாம் எனத் தெளிதல் வேண்டும். காரியப் பிரபஞ்சம் இச் சூத்திரத்தே "உணருரு அசத்து" என்று எடுத்துக் கொள்ளப்பட்டது. அதாவது அறிவில்லாத சடம் எனப்படுவதாம். ஒரு மனிதனை மனிதன் எனக் காண்பது பொது இயல்பு. அவன் சாதியைக் காண்பது சிறப்பியல்பு, இவ்வாறே காரியப்பிரபஞ்சமும் பொது சிறப்பு எனும் இரு வகையாலும் கண்ணுற் காணப்படுதற்குற்ற விடயமாகும். காரியப் பிரபஞ்சம் நீர்மேலெழுத்தும் கனவும் நிகர்க்கும். சிவமாகிய பொருள், பாச பசு ஞானங்களைக் கடந்து சிவஞானத்திஞல் ஒற்றுமைப் பட்டு நின்று உணரும் அனுபவ ஞான மாத்திரைக்கே புலப்படுவதாகிய சத்துப் பொருளாம். பிரமம் அருளினுலே காணப்படுவது என்பது இப் பொருள் தருவதேயாம்.

# தேவாரம்

## ஆரும் திருமுறை

## முதற் பாடல்

### கோயில்–பெரிய திருத்தாண்டகம்

*[ திருநாவுக்கரசர் ]*

அரியானை அந்தணர்தம் சிந்தையானை அருமறையின்
 அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
 திகழொளியைத் தேவர்கள் தங்கோனை மற்றைக்

கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

## தொடர்பு

ஐந்தாம் திருமுறையின் முதற் பாடல் பாச இலக்கணம் கூறியதெனக் கண்டோம். இந்த ஐந் தாம் திருமுறையின் முதற் பதிகத்து இறுதிப் பாடலிலே "சதுரன் சிற்றம்பலவன்" என அடுத்த திருமுறையில் பதியின் சிறப்பிலக்கணம் கூறும் தன்மை புலப்படுத்தப்பட்டுள்ளது. மற்றும் ஐந்தாம் திருமுறையின் இறுதிப்பாடலிலே "ஆராருள் பெருக்கச் செய்த பிரான் பெருந்தன்மை .....அறியப் பெறுகின் றிலர்" என ஆறும் திருமுறைத் தொடக்கம் அருட் பரமன் சிறப்பியல்பு கூறப் புகுவது உணர்த்தப் பட்டுள்ளது. அங்ஙனமே இவ்வாறும் திருமுறை முதற் பாடல் முதல்வன் சொரூப இலக்கணம் புகல் கின்றது காணலாம். சூத்திரங்களின் இயைபு போன்றே திருமுறைப் பாடல்களின் இயைபும் அமைந்து கிடத்தல் உய்த்துணர்வார்க்குப் புலப் படாமற் போகாது.

## பொழிப்புரை

பாச ஞான பசு ஞானங்களால் அறிவதற்கு இயலாதவனை, அருட் பண்புடையார்க்குச் சித்தத்தே நின்று தெரிவிப்பவனை, உணர்தற்கரிய வேதத்தே இதயம்போல் விளங்குபவனை, மிகச் சிறு நுண்ணிய பொருளாயிருப்பவனை மாயாவாதியராதிய எவருக்

கும் தெரிய இயலாத சத்துப்பொருளானவனை, தேனும், பாலும்போல இனிப்பவனை, எல்லா ஒளிகட்கும் உள்ளொளியாக விளங்கும் பேரொளியாயிருப்பவனை, எல்லாத் தேவர்கட்கும் தலைவனை, மற்றும் திருமாலாகவும், பிரமனாகவும் இருப்பவனை, அக்கினி, காற்று, முழங்கும் கடல், உயர்ந்த மலை ஆகிய பஞ்ச பூதங்களையும் கலந்து நிற்பவனை, வியாபகமான பொருளாயிருப்பவனை, பெரும் பற்றப் புலியூரில் எழுந்தருளி ஐந்தொழில் புரிபவனைத் துதிக்காத நாட்களெல்லாம் பிறவாத நாட்களை நிகர்க்கும்.

## பொருத்தம்

சிவபரம் பொருள் பாசஞான, பசுஞானங்களால் அறியப்படாதவன். பதிஞானம் ஒன்றால் "அவனருளே கண்ணாகக்" கொண்டு காணத்தக்கவன். இதனையே "அரியானை" என்றசொல் உணர்த்தும். ஈண்டு அருமை ஒருவாற்றானும் அறியப்படாதெனு இன்மைப் பொருளைத்தாராது, அரிதின் உணரப் படுவதெனப் பொருள் தந்து நின்றது. இதனால் சத்துப்பொருள் என்பதுணர்த்தப்பட்டதாகும். அந்தணர், அருமறை என்ற சொற்பிரயோகங்கள் பசு, பாசங்களையும் அவற்றாலறிதற்கியலாமையையும் உணர்த்துவனவாம். சிந்தை, அகம் என்பன அறியப் படாமையைக்காட்டும், பிரபஞ்சம் காரியாவஸ்தை யில் தூலமாய்க் காணப்படினும், காரணாவஸ்தையில் புலப்படாது சூக்குமத்தன்மையாம் சத்தாதலை "அணுவை" என்ற சொல் காட்டும் தகையது. மாயாவாதி, நையாயிகராதியோருடைய ஞானங்கட்

கும் பாவனை முதலியவற்றிற்கும் எட்டாப்பொருள் இறைவன் என்பது, "யார்க்கும் தெரியாத தத்துவனை" என்ற இடத்தாற் புலப்படும். மற்றும் ஒளி என்பது சிற்சத்தியாமாதலினாலும், யாவற்றையும் தன்னுள்ளடக்கித் தான் கடந்து நிற்பது சிவமாதலினாலும், "தெரியாத" எனவும், "திகழ் ஒளியை" எனவும் இப்பாடல் குறிக்கின்றதென்னலாம். "தன்னருள் வெளிக்குளே அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும்படிக்கு இச்சைவைத்து உயிர்க்குயிராய்த் தழைத்ததெது" எனத் தாயுமானார் பாடல் முதற் பாடலும் இச்செய்திகளைத் தெரிவித்தல் காணலாம். இறைவன் எப்பொருளிலும் கலந்து நிற்பவன். நீரணைந்த உப்புப்போல ஆன்மாவின் கண்ணே பரவி வேற்றுமை தோன்றாது நிற்கும் சிவம் என்ற இந்த உண்மைகளைக் 'கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற பெரியானை" என்ற தொடர் புலப்படுத்துவதாகும் இறைவன் தன்வயமாம் சத்துத்தன்மை உடையானென்பதைத் "தத்துவனை" என்ற சொற்காட்டவல்லதாம். "பெரியானை" என்றமையால் தூய உடம்பாதிகொண்ட சித்துத் தன்மையினையுடையவன் என்பதை அறியலாகும். "தேனைப்பாலை" என்ற சொற்பிரயோகங்கள் அவன் இன்பம் (அல்லது) ஆனந்த மயமானவனென்பதை உணர்த்தும். எந்தையாகிய சிவபெருமானைத் திருவருளே தாரக மாகக்கொண்டு அறியவேண்டும் என்பதை நமக்குணர்த்தற் பொருட்டே, "பெரும் பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே" எனப்பட்டது. மற்றும், "பிறவாநாள்" கூறப்பட்டமையால் மருட் கேவலம் முதலியவும் காட்டப்

பட்டமை உய்த்துணரின் தெரிதரும். இனி அடுத்து வருவது சாதன இயலாமாகலின், "பற்றுக பற்றற்ருன் பற்றினை" என்றவாறு பாசப்பற்றை விடுதல் பரமுத்தி சாதனமென்பார் "பெரும்பற்றப் புலியூரானை" என்ருர். இங்ஙனம் இவ்வாரும் திருமுறை முதற் பாடல் ஆறுஞ் சூத்திரப் பொருளோடு பெரும்பான்மையும் ஒத்து நின்று உவகையூட்டல் அறிதக்கதொன்ரும். மற்றும் இப்பதிகத்திறுதிப் பாடலிலும் முதல்வன் கடந்து நிற்றலும், கலந்து நிற்றலும் காட்டுவான் சிந்தைதனை மயக்கந்தீர்க்கும் ஏரொளியை" எனவும், "இரு நிலனும் விசும்பும் விண்ணும் ஏழுலகும் கடந்து அண்டத்தப்பால் நின்ற பேரொளியை" எனவும் ஆளுடை அரசர் அறிவுறுத்தல் காணலாம். இன்னம் அடுத்து நிற்பது சாதன இயல் என்பதை இத்திருமுறையின் இறுதிப் பாடலிலே "உன்னடிக்கே போதுகின்றேன்" எனத் தெரிவுறுத்துதலும் காணத்தக்கதாம்.

இங்ஙனம், பதி, பசு, பாச உண்மையினைத் திருஞானசம்பந்தர் தேவாரத் திருமுறைகளும், அவற்றின் இலக்கணங்களைத் திருநாவுக்கரசர் தேவாரத் திருமுறைகளும், சிவஞானபோத சூத்திரங்கள் பொதுவதிகாரத்தே கூறிச் செல்லும் அடைவிலே தாமும் இசைத்துப் போதல் காணக் காண உள்ளம் பூரித்தல் ஒருதலையாம்.

பொது அதிகாரம் முற்றும்.

---

# II

# சிவஞான போதம்

## உண்மை யதிகாரம்

### சாதன இயல்

## ஏழாம் சூத்திரம்

### ஆன்ம சொரூபம்

யாவையும் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே அறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

### தொடர்புரை

இதற்கு முன் உள்ள ஆறு சூத்திரங்களிலும் சொல்லப்பட்ட முப்பொருள்களுள் பயன் அடைவதற்காகச் சாதித்தற்குரிமைப்பட்ட அதிகாரியின் இயல்பும், சாதனமும், சாதிக்கும் முறையும் என இம் மூன்றும் சாதன இயலில் மூன்று சூத்திரங்களாக ஓதப்படுகின்றன. அவற்றுள் முதலதான அதிகாரியின் இயல்பு இந்த ஏழாம் சூத்திரம் கூறுகிறது. பதிப்பொருளால் உண்டாம் பயன் பெறுவது பசுவேயாகும். இதற்கு முன் "உணர்உரு" அசத்தெனவும், "இருதிறனல்லது" சிவசத்து எனவும் வரையறை செய்யப்பட்டது. அவ்வாறு அசத்து என்றும் சிவசத்து என்றும் அறியும் பசுப்பொருள் இவ்விரண்டில் ஒன்றோ வேறோ என்ற ஐயம் நீங்குமாறு இச் சூத்தி

ரத்தே அவ்விரண்டின் வேறான உயிர் சதசத்து என்று கூறலுறுகின்றது. சத்தைச் சார்ந்து சத்தையும், அசத்தைச் சார்ந்து அசத்தையும் அறிதலே உயிரினியல்பு. இது பற்றியே உயிர் சதசத்து எனப் பட்டது. ஆகவே சத்தையடைவதற்கான அதிகார முடையது உயிர் எனல் வெளிப்படை. சத்தை அடை வதற்கான உரிமை தனக்குண்டெனஅறியும் அறி வுடைமையே சாதன வகையில் உயிருக்குச் சிறப்பிலக் கணமாம். "ஊனடைந்த உடம்பின் பிறவியே தானடைந்த உறுதியைச் சாருமால்" என்பது பெரிய புராணம். ஆறும் சூத்திரம் பொதுவதிகாரத்தது. இவ் வேழாம் சூத்திரம் உண்மையதிகாரத்தது. ஆறும் சூத்திரம் இலக்கண இயல்; இது சாதன இயல். இதுவே இயைபாம்.

## பொழிப்புரை

மேலைச் சூத்திரத்தே கூறிமுடித்த சிவசத்து, அசத்து என்ற இரண்டனுள் வாக்கு மனாதீத மான சிவசத்தியின் சந்நிதியில் பாசஞான பசு ஞானங்களால் உணரப்படும் பொருளாகிய அசத் தெல்லாம் பாழ்; ஆதலால், சத்தாகிய சிவம் அசத் தாகிய பிரபஞ்சத்தை அறிதல் செய்யாது. அசத் தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாகையால் சத்தாகிய சிவத்தை அறிதல் செய்யாது. ஆதலால், பாரிசேட அளவையால் சத்து அசத்து ஆகிய இரண் டனையும் அறியும் அறிவை உடையது ஒன்றுண்டு என்பது பெறப்படுதலால் அந்த அறிவுடைப் பொருளே சத்தாதல் தன்மையும், அசத்தாதல் தன் மையுமாகிய இரண்டுமின்றி அவ்விரண்டினையும் அறியும் உரிமையால் சத சத்தாயுள்ள உயிராம்.

## கருத்து

உயிருக்குத் தனித்த இலக்கணம் யாதெனில் சார்ந்த பொருளின் தன்மையாய் நிற்றலாம். சாரப் படும் பொருள் சத்தும் அசத்துமாம். ஆதலால் சத்தோடுகூடிச் சத்தாயும், அசத்தோடுகூடி அசத் தாயும் நிற்றல் பற்றி உயிர் சதசத்து எனப்படும். ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் உலகியலில் சாரும்போது மணமகனாகக் கூறப்படலானார். தம்பிரான் தடுத் தாட்கொண்ட பின்னர் தம்பிரான் தோழரானார். இங்ஙனம் இருதிறப்பட்ட தன்மையை அவர்தம் வாழ்க்கை வரலாறும் பொதுவகையில் உணர்த்துதல் காணலாம்.

## சூர்ணிகை

1. அரன் பாசத்தை அநுபவியான்.
2. பாசம் அரனை அநுபவியாது.
3. உயிர் அவ்விரண்டனையும் அநுபவிக்கும்.

## விளக்கம்

சத்தாகிய சிவம் வியாபக அறிவுடையது. ஆத லால் எவற்றையும் ஒருங்கே அறிந்து நிற்கும். ஏக தேசமாய்ப் பகுத்து ஒன்றை அறியுமாறில்லை. ஆகை யால் சிவம் பாசத்தை அநுபவியாது. சுட்டுணர்வு சிவத்திற் கியல்பன்று. ஆகையால் சிவம் அசத்தை அறியாதிருத்தல் பற்றி அவரது முற்றுணர்வுக்கு இழுக்கில்லை. சூரியனுக்கு முன் இருள் நில்லாது. அதுபோன்று சிவத்துக்கு எதிராகச் சடமாகிய பிரபஞ்சம் முனைத்து நில்லாது. சிவபெருமான், தம்

முள் வியாப்பிய மாகிய பசு பாசங்களோடு வேற்றுமையின்றி உடனாகநின்று அசத்தை அறிதலுறுவாராயின் அறிந்தாங் கறிவரன்றி நம்மனோர்போல வேருக அதனைச் சுட்டி யறிவாரல்லர். ...... பாசமும் சிவனை அநுபவியாது. அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்துக்கு அறிவில்லை. பாச ஞானம் என்று சொல்லப்படுவது பசுவினிடத்துப் பாசத்தைப் பற்றி உள்ளஞானமேயாம். 'மாசறு காட்சியில் பாசஞானமும் பசுஞானமேயாம். கானல் நீர் தாகமுடையவற்கு நீராகத் தோற்றினும் அதனை நணுகிய வழி நீராதலின்றிப் பொய்யாய்த் தோன்றும். இவ்வாறே குரு உபதேச நெறியில் ஆராய்வார்க்கு அசத்துக்கு அறிவில்லை என்பது புலப்படும். ... உயிர், அரனை அடையும், அநுபவிக்கும், சத்தாகிய சிவம், அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சம் இந்த இரண்டையும் அறியும் தன்மையதாய், அறிவிக்க அறியும் உபதேசியாய், சத்து அசத்து என்ற இரண்டிலும் அநுபவ அறிவுள்ளதாயுள்ளது சத்தும் அசத்துமல்லாத சதசத்தாகிய ஆன்மாவே ஆம். இருளில் மறைபட்டுக் கிடக்கையில் இருளல்லாமலும், ஒளியிற் பொருந்தி அறிந்தும் ஒளியில்லாமலும் இருப்பது கண்ணின் இயற்கை. சத்து அசத்து இரண்டையும் அறியும் ஆன்மா அவற்றின் வேறும். அசத்தையாவது சத்தையாவது சார்ந்த விடத்தே அவ்வவற்றின் வண்ணமாய் நிற்பது ஆன்ம இயல்பு. இவ்விரண்டையும் சார்ந்தே ஆன்மா தன்னியல்பை அறியும். மயக்கமாகிய அறியாமை, அறிதற் கருவியில்லாவழி மேற்பட்டும், அஃதுள்வழி நீங்கியும் நிலைபேறில்லாததாக இருப்பது. ஆதலால். அது உயிருக்குயிராயுள்ள முதல்வனது மெய்ஞ்ஞானத்தைப் பற்றாது. கடலிலே

உப்பானது நீரைப்பற்றும். அந்நீருக்கு இடங் கொடுக்கும் ஆகாயத்தைப் பற்றாது. அதுபோல, மயக்கமானது உயிரைப் பற்றுமேயொழிய முதல் வனைப் பற்றாது. சத்தும் அசத்தும் பிரமேயம்; அவற்றை அறியும் ஆன்மா பிரமாதா. ஆன்மாவின் அறிவெனப்படும் சிற்சத்தியே பிரமாணம். அவ்வறி வின் நிகழ்ச்சி பிரமிதி. அசத்திலுல் விளங்கும் போது காட்சி – அனுமானம் – உரை எனப்படும் பாசஞான மூன்றும் ஆன்மாவுக்கு வியஞ்சகங்க ளாம். சத்திலுல் விளங்கும்போது அனன்னிய மில்லாமல் தனக்கு ஆதாரமாய் உடனின்று விளக் கும் சிவஞானம் வியஞ்சகமாம். ஆதலின் சார்ந்த தன் வண்ணத்தது ஆன்மாவாகும்

---

# தேவாரம்

## ஏழாந் திருமுறை

### முதற் பாடல்

திருவெண்ணெய்நல்லூர் – பண் – இந்தளம்

[சுந்தரமூர்த்தி சுவாமிகள்]

பித்தாபிறை சூடீ பெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
அத்தாஉனக் காளாயினி அல்லேனென லாமே.

**தொடர்புரை**

முதல் ஆறு திருமுறைகளாலும் முப்பொருள் களின் உண்மையும், இலக்கணமும் கூறப்பட்டன.

மற்றும் ஆறும் திருமுறை முதற் பாடலிலே சிவத்தின் சொரூப இலக்கணம் பேசப்பட்டது. அப்பொருளை அடையும் உரிமையுடையது ஆன்மாவேயாம். ஆதலால் ஆன்மாவின் சிறப்பியல்பு இவ்வேழாந் திருமுறையில் பேசப்படவேண்டும். இதற்கொரு தோற்றுவாய் செய்வதுபோலவே ஆறும் திருமுறை முதற் பாடலிலே அசத்தாம் தன்மையாகிய பிறப்பும் சத்தாம் தன்மையாகிய பிறவாமையும் நினைவூட்டப் பட்டன. அவ்வழி நின்று உண்மை அதிகார முதல் வரிசையில் அதிகாரி இயல்பை இவ்வேழாம் பாடல் பகருகின்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் முதல் சூக்குமமான உண்மையை உணர்த்து மியல்பின வருந்திருமுறைகளாதலால் எல்லா அடியார்களையும் சுந்தரர் உணர்த்த, அவரை முதன்மையாகக் கொண்டு பெரியபுராணம் சுந்தரர் வரலாறாக அமைவுண்டதென்னலாம். "படியிலா நின்பாட்டில் ஆரூர! நனிவிருப்பன் பரமன் என்பது அடியனேன் அறிந்தனன்" என்பர் நால்வர் நான்மணி மாலையிலும். இதுவும், சுந்தரரைத் தடுத்தாட் கொண்ட செயலும், தோழமை கொண்ட தன்மையுமான வரலாறும் சிவமெனும் தந்தையொடுங் கூட்டு முறைமை கொண்டது ஏழாந் திருமுறை யென்பதை உணர்த்துறும்.

## பொழிப்புரை

பித்தனே! பிறையைத் திருமுடியின்கண் தாங்கியவனே! முதல்வனே! அருளாட்சியுடையவனே! எந்த முறைமையான் மறவாமல் சிந்திக்கின்றவனாகிய அடியேனது மனத்தே உம்மை வைத்தருளினீர்;

பெண்ணை நதியின் தென்கரையிலே உள்ளதான திரு வெண்ணெய்நல்லூரிலே திருவருட்டுறையில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள தந்தையே! உமக்கு அடிமைப்பட்ட தன்மையை அறிந்த பிறகு இனி அடியேன் அடிமையல்லேன் எனவும் கூடுமோ!

## பொருத்தம்

தூலாருந்ததி நியாயம் பற்றி இப் பாடலிலே உண்மையியல்பானது, "பித்தா" எனத் தொடங்கிப் "பெருமானே" எனப்படுகின்றது. கண்ணெதிரே வந்து தடுத்தாட்கொண்டவன் முதிய கோலத்தனாக வுள்ளான். அவனையே பின்னர்த் தம்மான் எனச் சுந்தரர் உண்மையானுணர்கின்றார். ஆதலால், பின்னர், "பிறைசூடி" முதலியவைகளால் விளித்த லுற்றார் என்க. முன்பு சதசத்தாகிய உயிர் (ஆன்மா), அசத்தாமியல்புவழி நின்றமையின், "பித்தனோ மறையோன்" என்று பேசியது. அதனை ஈண்டுணர்த்து முகமாகவே "பித்தா" என்று பாடல் தொடங்குகின்றது. சுந்தரர் எவ்வெவ்வகை முயற்சி செய்தனரோ அவ்வப் பாசவகைகளெல்லாம் முதுமறையோராகிய சிவத் தினைக் கட்டுப்படுத்தில. "இனி அல்லேன் என னலாமே." என்ற தொடர் முதற்கண் அல்லே னென்று எண்ணியிருந்தமை புலப்படுத்துகின்றமை தெரிக்கும். முன்பு, அந்தணர் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதலில்லை என்றவர் பின்பு, "அத்தா உனக்கு ஆளாய்" என்கிறார். சத்தாம் நெறி ஆன்மா ஈடுபடுதல் இறைவனருளால் நிகழ்வ தென்பதை "நினைக்கின்றேன் மனத்துன்னை

வைத்தாய்" என்ற இடம் புலப்படுத்தும். இறைவனருளால் இது நிகழ்வதென்பதை "நல்லூர் அருள் துறையுள்" என்ற தொடர் குறிக்கும். மற்றும் "அருளாளா" என்ற விளியும் இஃதுணர்த்தும். சிவம் சுதந்தர அறிவுடையதென்பதைப் "பெருமானே" என்பதுணர்த்தும். ஆன்மா அறிவிக்க அறியும் உபதேசி என்பது, "மனத்து வைத்தாய்" என்பதனாலும், "அருள்துறையுள் அத்தா" என்பதனாலும் உணரக் கிடப்பதாகும். சத்தின் பாற்பட்ட பின்னர் அதுவாய் ஆன்மா நிற்றலை, "அல்லேன் எனல் ஆமே" என்பது வெளிப்படுத்துகின்றதென்னலாம். இங்ஙனம், ஆன்மா சதசத்தாம் தன்மைவாய்ந்ததென்னும் பசுவின் சிறப்பியல்பினை இப் பாடல் தொடக்க முதல் முடிவுகாறும் படிப்படியாய் உணர்த்தி நிற்றலால் இப் பாடல் ஏழாம் சூத்திரக் கருத்தினைக் கருக் கொண்டுள்ளதென நவிலலாகும். இப் பதிகத்திறுதியிலும், "ஆரூரன் எம்பெருமாற்கு ஆளல்லேன் எனலாமே" என ஆன்ம இயல்பே கூறப்பட்டிருத்தல் காணலாம். இத் திருமுறை இறுதிக்கண்ணும் "தானெனை முன்படைத்தான்" எனவும், "அஞ்சையப்பர்க்கு அறிவிப்பதே" எனவும் ஆன்ம சொரூபமே கூறி முடித்தல் கருதத் தக்கதாகும். இவ்வாற்றால் ஏழாந் திருமுறையும் ஏழாஞ் சூத்திரமும் உள்ளொற்றுமை உடையனவென ஓதலாகும்.

---

சாதன இயல்

## எட்டாம் சூத்திரம்

## சாதனம் இன்னதென்பது

சாதன அறிவு – குருவருள்

(கேட்டல்)

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்திவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

### தொடர்புரை

ஏழாம் சூத்திரத்தே அதிகாரியின் இயல்பு கூறப்பட்டது. இனி அவ்வதிகாரி (ஆன்மா) செய்யவேண்டிய சாதனமும், அந்தச் சாதனம் வரும் வழியும், சாதித்தலாற் பெறப்படும் பயனும் இந்த எட்டாம் சூத்திரம் கூறுகின்றது. ஆன்மாவின் அறிவாவது, சத்து அசத்து என்னும் இரண்டனுள் அசத்தால் விளங்கி, அசத்தின்பாலுளதாய், அசத்தினை அறிந்து நின்றவாறும், அவ்வாறே சத்தால் விளங்கிச் சத்தின்பாலுள்ளதாய்ச் சத்தினை அறிந்து நிற்குமாறும், தரிசிக்கும் முறையினை அறிவித்து அங்ஙனம் அறிவிக்கும் முறையில் ஏழாம் சூத்திரத்தால் சாதித்தற்குரிய அதிகாரம் தனக்குண்டென அறிந்த ஆன்மாவுக்குச் சாதித்தலுண்டாம் பயனும், அப்பயனுக்குச் சிறந்த சாதனமும், அச்சாதனம் வரும் வழியும் இவையென அறிவித்தல் இயல்பாக

லால் இவ்வெட்டாம் சூத்திரம் அவையிற்றைக் கிளத்தலின் இயைபுடையதாயிற்று.

## பொழிப்புரை

உயிரானது தான் முன் பிறவிகளில் செய்த புண்ணிய விசேடத்தின் பயனாக இதுவரையும் தனக்கு அந்தரியாமியாய் உள்நின்று சரியை, கிரியை, யோக மார்க்கங்களை உணர்த்திவந்த பரம்பொருளே இப்பொழுது ஞானமார்க்கத்தை அநுக்கிரகித் தருளும் பொருட்டுக் குரு வடிவங்கொண் டெழுந்தருளி வந்து, சிவ தீக்ஷை செய்து, தன்னைப்பார்த்து அரச குமாரனாகிய நீ, ஐம்பொறிகளாகிய வேடருக்குட் பட்டு வளர்ந்து நின் பெருமைகளை அறியாது மயங்கித் துன்பப்பட்டாய்; நின் பெருந்தன்மை யாவது இத் தன்மைத்து என்று அறிவிக்கவும், அவ்வுண்மையை அறிந்து, அறிந்த அப்பொழுதே அவ் வேடரைவிட்டு நீங்கி முதல்வனாகிய அரசனோடு அந்நியமின்றி அநன்னியமாய்ப் பிரிக்க முடியாத தன்மையில் நிலை பெற்று அம் முதல்வன் திருவடிகளை அணையும்.

## கருத்துரை

பதிஞானத்தை ஆன்மா அடையும் முறையினை இச் சூத்திரம் உணர்த்துகின்றது. பல்பிறவிகளிலே செய்த பெருந்தவத்தால் ஒரு பிறவியிலே பரம் பொருள் உயிருக்குக் குருவாய்த் தோன்றிச் சிவ தீக்கை செய்தருளி, ஞான நெறியை உபதேசிக்கும். இதனால் உயிர் அவ்வழி நின்று கட்டுநீங்கி இறைவனோடு ஒன்றுபடும் நிலையுணர்ந்து முதல்வன் திருவடி அணையும். இதனால் மலந்தாரகமாயிருந்த உயிர் சிவம் தாரகமாகும்.

சூர்ணிகை :–

1 உயிருக்கு நல்லறிவு தவத்தால் வரும்.
2. உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.
3. உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையாலே தன்னையும் அறியமாட்டாது.
4. உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.

விளக்கம்

ஆன்மாக்களுக்கு முற்செய் தவத்தாலேயே ஞானம் நிகழும். பரம்பொருளை அடைதற்கு ஞானமே சிறந்த சாதனமாகும். சரியை முற்றியபின் கிரியையும், கிரியை முற்றியபின் யோகமும், இவ்வாறு ஒன்றன்பின் ஒன்றாய் முற்பிறவிகளில் செய்துவந்த தவத்தால் ஞானம் நிகழும், முற்பிறவிகளில் செய்திட்டிய தவம் இவ்வொரு பிறவியில் பயன் தரும். ஞானம் என்பது அநுபவ ஞானமன்று. ஆசிரியன் அறிவித்த வண்ணம் சிவஞானம் கண்ணாகக் கொண்டு அறிவதாகிய சாதன அறிவாகும். முதலில் வருவது சாதன ஞானம். அதனால் வருவது அநுபவ ஞானம். அதன்பின் நிகழ்வது சாதன அறிவாம். இது குருவால் அறிவிக்கப் படுவது. ஞான நன்னெறி என்பது சன்மார்க்கம். சத்திய மார்க்கம் என்பதும் இஃதே. இராதவீதி போல்வது ஞானம். புறவீதிகள் போல்வன சரியையாதிகள். மூத்தி போல்வது ஆலயம். ஞானம், உண்மையும் உபாயமும் ஆம் இரு பிரிவுபட்டு விரிவால் எட்டாய்ப் பின் முப்பத்திரண்டாதல்

நூலால் அறியத் தக்கதாம். முத்தியும் பல திறப்படும். அவற்றுள் சாயுச்சியம் சிறந்தது. சாயுச்சியமும் இரு திறப்படும். அவற்றுள் மிக்கது சிவபெருமான் திருவடியில் இரண்டறக் கலந்து சிவானந்தத்தை அனுபவித்தலாம். இதுவே பரமுத்தி எனப்படுவது. மற்றுள்ள விரிவுகள் நூலானே அறிதக்கன.

எட்டாந் திருமுறை

## திருவாசகம் - திருக்கோவையார்

*[ ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் ]*

திருவாசகத்தே முதற்கண் இருப்பது சிவபுராணம் ஆகும். சிவத்தின் பழமை என்பது இத்தொடர்ப்பொருள். இப்பகுதியில் சிவநாமக் கருத்துக்களும், சிவனைச் சீவன் அடைதற்கேற்பட்ட ஞான கர்மத்தின் பாகுபாடும், பரவாழ்வின் பலனை வாழ்த்துதலும், சிவனுடைய அருள் விலாசமும், பிறவும் கூறப்பட்டுள. எட்டாம் சூத்திரம் ஞானப்பிராப்தி கூறுவதுபோலவே திருவாசகத் தொடக்கமும் ஞான வாசகமாகிய ஐந்தெழுத்தை முதற்கண் கொண்டு ஆரம்பிக்கின்றது. அந்த ஞானம் குருவருளால் வருவதென்பதனை ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளின் வரலாறும் உணர்த்தும். ஞான நெறியில் அவர் நின்றமையும் அவர் வரலாற்றால் அறியலாம். இங்ஙனம் எட்டாம் சூத்திரத்திற்குச் சான்றுபோலும் ஆளுடை அடிகள் சரிதம் அமைந்து கிடத்தல் ஓர்ந்து உவத்தற்குரியதாகும். இனி இந்நூலின் ஆரம்பக் கலிவெண்பாவின் முதல்வரியினை மட்டில் ஈண்டு எடுத்துக்கொள்வோம்.



ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகட்கு
உபதேசம்

## சிவபுராணம்

### கலிவெண்பா

(முதல் அடி)

நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க.

### தொடர்புரை

ஏழாம் திருமுறையிலே முதற் பாடலின்கண் ஆன்மாவானது தாரகமாகக் கொண்டு கிடக்கும் பொருளையும், அது தாரமாகக் கொள்ளவேண்டிய பொருள் சிவமே எனவும் கூறி அதிகாரி இயல்பினைக் கூறலுற்றார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். இனி, அந்த ஆன்மா செய்யவேண்டிய சாதனமும், அது வரும் வழியும், பயனும் கூறப்படுதலே முறைமை. இங்கு இன்றியமையாது கூறப்படுவது குரு வெளிப்பாடு ஆகும். ஆன்ம ஈடேற்றத்துக்கு இக் குரு திருவருளே சிறப்பான தேவயாகும். ஆசாரியனுடைய தரிசனமும் தீக்ஷையும் உபதேசமும் பெறுமல் முத்தி சாதனம் கிட்டுதல் ஒருபோதுமில்லை. ஆதலின் சிவஞானபோத சாத்திரத்தின் பன்னிரு சூத்திரங்களுள்ளும் இந்த எட்டாஞ் சூத்திரமே உயிர்நாடியாகும். இச் சூத்திரத்தினைச் சிவஞான போத நூலின் இதயம் எனவும் இயம்பலாகும். அங்ஙனமே பன்னிரு திருமுறைகளுள்ளும் ஆன்மாவினை உருக்கி அகங்குழைப்பித்து இறையருளுக்கு ஆளாக்கும் இயல்புடையது திருவாசகம். ஆனது பற்றியே, இந்த நூலைச் சிவபெருமானே எழுதிக்கொண்டனன் என்றும் வரலாறுரைக்கப்படுகின்றது. குரு திருவருளுக்கு இலக்காகாதார்க்கு

ஒருபோதும் ஆன்ம ஈடேற்றமில்லை. அவ்வாறே, "திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்" என்ற பழமொழி வழங்கிவருகின்றது. ஆளுடை அடிகள் வரலாற்றிலே குரு வெளிப் பாடுதான் சிறப்புடைப் பகுதி. இங்ஙனம் பரமா சாரியனிடம் உபதேசமாதிய பெற்ற அநுபூதிமானு கிய அடிகள் அவ்வனுபவ நெறியினையே தம் நூல் களில் பேரின்ப முறையில் ஒரு நூலாகவும் சிற்றின்ப முறையில் ஒரு நூலாகவும் வடித்து வழங்கியுள்ள னர். ஆதலின் இந்த எட்டாந் திருமுறை எட்டாஞ் சூத்திரம்போலும் சிறந்து விளங்கும் சிறப்பினையபு கொண்டதென்னலாம்.

## பொழிப்புரை

பஞ்சாக்கரப் பரம்பொருளே வாழ்க! ஆன்ம கோடிகளின் தலைவனே தேவரீருடைய திருவடிகள் வாழ்க!

## பொருத்தம்

நாம் பெறுதற்கரிய பிறப்பினை அடைந்துள் ளோம். இச் செய்தி இச் சிவபுராணத்தே "புல்லாகி ........ எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்" என்ற பகுதியால் உணர்த்தப்படுகின்றது. இப் பஞ்ச பூதச் சேர்க்கையுள் ஆன்மாவினை நிறுத்தித் திரோ தான சக்தி தொழிற்படுத்துகின்றது. இதனாலடைவது சிறு வெளிச்சமேயாகும். இச் சிற்றொளியால் தனு வாதியவற்றை நாமென்றே கருதும் மயக்கம் விளைகின்றது. என்றாலும் சிறுசிறு புண்ணியங்கள் செய்யப்பட்டுப் பின்னே இருவினையொப்பாதிய

நிகழ்வதற்குப் பிறப்பு மயக்கம் பயன்படுகிறது. இச் செய்தியே ஆன்மாக்கள் முந்த அறியவேண்டிய ஒன்றும். இவ் விஷயம் நகாரத்தில் அடங்கியுள்ளது என்பர். இனி, இத்தகைய பிறப்புக்களுள் நாம் தோன்றி மயங்குதற்குக் காரணமாக இருப்பது நமது மலமேயாகும். மலத்தின் வேகமே நாம் தணிக்கவேண்டியிருப்பது. இந்த விடயத்தினை இச் சிவபுராணப் பகுதியில், "வல்வினையேன் தன்னை மறந்திட மூடிய மாய இருளை ..... வஞ்சனையைச் செய்ய" என்ற இடங்கள் தெரிவிக்கும். இதனை மகாரம் தெரிவுறுத்தும் என்ப. இம் மல நீக்கம் பெற்று ஆன்மா அடையவேண்டுவது சிவம் என்னும் பொருளையே ஆகும். அவன் போக்கும் வரவுமில்லாப் பொருளாவான். மற்றும் அவன் சொல்லற்கு அரியான். சிவனென்று பல்லோராலும் ஏத்தப்படுபவன். அவனே ஆன்ம தாரகமாவான். இவ்வுண்மையைச் சிகாரம் உணர்த்துமென்பர். இங்ஙனம் நாதனாக உள்ள அவன் கருணையுருக்கொண்டு நிலந்தன்மேல் வந்து நீள் கழல் வைத்து அருள் செய்தாலல்லது வேறு கதியில்லை. நாயிற் கடைப் பட்ட நம்மைத் தாயிற் சிறந்த தயாவாகிப் பெருமான் ஆட்கொள்ளவேண்டியிருத்தலை அருளாக் கரமாகிய வகாரம் தெரிவிக்கின்றதென்பர். இவ் வளவும் அடைந்து நன்மை பெறுவது உயிரே. உயிரின்பொருட்டே நள்ளிருள் நட்டமும் தில்லைக் கூத்தும் நிகழ்கின்றது. அல்லற் பிறவி அறப் பெற்றுச் சொல்லற்கரிய சுகாதீதத்தில் அழுந்துவது உயிரே என்பது யகாரம் தெரிவிப்பதென்பர். இவ் வண்ணம் திரோதை, மலம், சிவம், அருள், உயிர்

என்னும் இவை பற்றிய பிரக்ஞை உண்டாவதே நல்வினைக்கறிகுறியாகும். இத்தகைய நன்னெறியில் நம்மைச் செலுத்துங் கருத்தோடுதான் இத் திருமுறை "நமச்சிவாய வாழ்க" எனத் தொடங்குகின்றது. சிவமே ஆசாரியன். ஆசாரியனே சிவன். அவன் திருவடிப் பேறே முத்திப் பேறு. ஆகலின், "சிவனடிக் கீழ்ப் பல்லோரும் ஏத்தப் பணிந்து செல்வர்" என்று சிவபுராணத்தை முடித்தருளுகின்றார் ஆசிரியர். இதனைத் தொடக்கத்திலேயே "நாதன் தாள் வாழ்க" என்று திருவாய் மலர்ந்துள்ளமை உணர்த்தும். இத் திருமுறையின் இறுதியிலும், "எனக்கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே" என்று செப்பி வியப்பூட்டுகின்றமையும் இதனைத் தெரிவுறுத்தும்.

மேலும், இம்முறையே உள்ளீடாகக் கொண்டு திருக்கோவையாரிலும் சுவாமிகளருளிச் செய்கின்றார் என்னலாம். திருக்கோவையார் நூலில் முதற் பாட்டாகிய "திருவளர் தாமரை" என்றதன் கண்ணும், ஐந்தும் கொண்ட தெய்வம் ஒளிர்கின்றதே என உரைக்கப்பட்டுள்ளமை உய்த்துணரலாகும். சொற்களாலும் பொருத்தம் தோன்றுமாறு இச் செய்யுளின்பால் குரு, தெய்வம் எனும் பதங்கள் அமைந்துள்ள விதம் அகமகிழ்வூட்டும் திறத்தனவாம். எவ்வாற்றானும் இவ்வெட்டாந் திருமுறை எட்டாத ஒன்றை எட்டவைப்பது குரு திருவருள் என்பதை, வெள்ளிடை மலைபோலும் அங்கை நெல்லிக் கனிபோலும் காட்டா நிற்றல் கற்றுக் களித்தற்குரியதாம். கோகழியாண்ட குருமணி தன் தாள் வாழ்க!

# ஒன்பதாம் சூத்திரம்

## சாதன அனுட்டானம்

*(சிந்தித்தல்)*

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணு மஞ்செழுத்தே.

## தொடர்புரை

*எட்டாஞ் சூத்திரத்தில் சாதன அறிவு குருவால் வரும் என்று கூறப்பட்டது. இனி அந்தச் சாதனத்தை அநுட்டிக்கும் முறை இந்த ஒன்பதாம் சூத்திரத்தில் கூறப்பட வேண்டும். குருவாய் வந்து உபதேசிக்கக் கேட்ட உயிர், அவ்வுபதேசத்தைச் சிந்திக்கும் முறைவழிச் சிந்தித்தலினால் அசுத்தத்தை நீக்கித் தன்னைப் பரிசுத்தப் படுத்து முறையை உணர்த்துதல் இச்சூத்திரத்தின் கருத்தாதலால் இயைபு உடையதென்ப. முன் சூத்திரத்தில் குருவால் ஞானம் நிகழும் எனக்கேட்டல் கூறப்பட்டது. இச்சூத்திரத்தில் அந்த ஞானத்தைச் சிந்திக்கும் முறை கூறப்படுகின்றது. இச்சூத்திரம் சிவதரிசனம் உணர்த்துவதெனவும், ஆன்ம சுத்தியைக் கருத்துரையாகக் கொண்டதெனவும் கூறுப. இந்திரியங்களைத் தன்னின்வேறாகக் காண்டலால் அக்காட்சியே தன்*

னைக் காண்டலாகிய ஆன்ம சுத்தியாம். காட்சி மூவகைப்படும். நிருவிகற்பக் காட்சி, சந்தேகக் காட்சி, தெளிவுக் காட்சி என்பன. இவை அதிதீவிர தர பக்குவிகளுக்குக் கேட்டமாத்திரத்தே உடனே நிகழும். ஆனால் ஏனையோர்க்குக் கேட்டலாதி மூன்றும் படிப்படியாகத் தோன்றும்.

தத்துவங்களின் வேறெனத் தன்னைக் கண்டும் தன் உண்மை நிலையை அறியாமையே நிருவிகற்பக் காட்சியாம். தன் உண்மை நிலை அருளோடு பிரிப்பின்றி நிற்பதென அறிந்தும் அவ்வருளில் அடங்காமல் அருளினும் கருவியினும் மாறிமாறிப் போக்குவரத்தாய் நிற்றல் ஐயக் காட்சியாம். அருளில் அடங்கி அடிமையாய் நிற்றல் தெளிவுக் காட்சியாம். இவை தத்துவ ரூபம் முதல் சிவயோகம் ஈருகத் தசகாரியமாகக் கூறவும்படும்.

## பொழிப்புரை

துணையின்றி அறியமுடியாத குறைபாட்டினை உடைய பசு அறிவாலும், துணையாகிய கருவி கரணங்களினால் உண்டாகிய ஏக தேசமாகிய பாச அறிவாலும் பதியை அறியமுடியாது. அவ்விருவகை அறிவாலும் அறியப்படாத முதல்வனை அம் முதல்வனுடைய திருவடி ஞானத்தால் உயிராகிய தன்னறிவின் கண்ணே ஆராய்ந்தறிக. அத் திருவடி ஞானத்தால் முதல்வனை அறிவதோடு நிலம் முதல் நாதம் ஈருகிய பாசக் கூட்டத்தைக் கானல் நீர்போலத் தோன்றிப் பொய்யாக் கழியுமாறு கழிவதென்று அறிந்து அப் பாசக் கூட்டத்தினின்றும் நீங்கவே, அத் திருவடி ஞானமாகிய பதிஞானம் பிறவித் துயராகிய

வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும். அவ்வாறு பாசத்தில் நின்றும் நீங்கித் திருவடி ஞானத்தைப் பெற்று அத் திருவடி ஞானத் தால் முதல்வனைக் கண்ட காட்சி சலியாமல் நிலைத் தற்காகப் பாசத்தில் நீங்கி முதல்வனையடைதலாகிய பொருளைத் தருகின்ற திரு ஐந்தெழுத்தை அறிந்து அப் பஞ்சாக்கரம் விதிப்படி செபிக்கப்படும்.

## கருத்துரை

முதல்வனைத் திருவடி ஞானமெனும் பதிஞானத் தால் அறியலாம். அக் காட்சி சலியாமல் நிலைப் பதற்குப் பஞ்சாக்கரம் விதிப்படி செபிக்கப்பட வேண்டும்.

## சூர்ணிகை

1. உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக் காணும்.
2. உயிர் பாசத்திலே பற்றற்றால் அரன் வெளிப்படுவான்.
3. பஞ்சாக்கர செபம் பண்ணினால் வாசனா மலம் போம்,

## விளக்கம்

பதி ஞானத்தால் பதியைக் காணவேண்டும். முதல்வன் பாச ஞானத்தாலும் அறியப்படான். பாச ஞானம் என்பது பாசமாகிய கருவிகளால் ஆன்மாவினிடத்தில் நிகழும் ஞானமாம். பசுஞான மென்பது தற்போத முனைப்பால் ஆன்மாவினிடத்து

நிகழும் ஞானமாம். பதிஞானமாவது பதியின் அருளால் ஆன்மாவினிடத்து நிகழும் ஞானமாகும். எனவே வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதவன் ஞானக் கண்ணிற்குப் பெறப்படுவன் என்பது கருத்தாம் அரன் திருவடி ஞானத்தால்தான் தன்னையும் தலைவனையுங் காணவேண்டும். அங்ஙனம் காணமுடிவது அரன் அருளால் ஆகும் கள்வன், வீட்டுக்குடையவனை வசியம் பண்ணித் தன் வசமாக்கிக் கொண்டால் எல்லாப் பொருளும் அறியப் படுமாறு போல இறைவன், உயிரைப் பக்குவப்படுத்தித் தன் அருள்வழி நிற்கச்செய்து சஞ்சித வினைகளைச் சோதித்துத் திருவடி தருவன். பிரபஞ்சம் வன்னத்தை யொப்பது. ஞான சொரூபம் படிகம் நிகர்ப்பதாம். சிவ ஞானத்தை அநுபவ அறிவால் அறியலாமேயன்றி ஆராய்ச்சியறிவால் இத்தன்மைத்தென அறிய இயலாது. எல்லாப் புவனங்களும் அப்புவனங்களிலுள்ள அநுபவப் பொருள்களும் கக்கின சோறு போலக் கண்டு அருவருத்தல் வேண்டும். முதல்வன் நிர்க்குணன். அதாவது சாத்துவிகம் முதலிய மூன்று குணங்களும் இல்லாதவன். ஒரு பொருளை விடுதல் மாத்திரம் பற்றுதல் ஆகாது. பொருளை விடுதலோடு அப்பொருளின் பற்றினையும் விடவேண்டும். பாம்பின்விடம் மந்திரகருடனால் நீங்குவதுபோல அறிவில் பிரிப்பின்றித் தோன்றும் முதல்வனால் உயிருடன் அநாதியாகக்கூடி நின்ற ஆணவமலப்பற்றை விட்டு உயிர் நீங்கும். பஞ்சாக்கரமாவது, தூலபஞ்சாக்கரம்; சூக்கும பஞ்சாக்கரம், அதிசூக்கும பஞ்சாக்கரம் என மூத்திறப்படும். தூல பஞ்சாக்கரம்

நகாரத்தை முதலாக உடையது. திருவாசக நூலின் தொடக்கம் இதுவே. சூக்கும பஞ்சாக்கரம் சிகாரத்தை முதலாக உடையது. ஔவையார் பாட்டில் இது கூறப்பட்டுள்ளது. "சிவாய நம" என்று சிந்தித் திருப்பார்க்கு அபாயம் ஒருநாளுமில்லை என்பது ஔவை கூற்றும். அதிசூக்கும பஞ்சாக்கரம் நகர மகரங்கள் இரண்டுமின்றி மற்ற மூன்றெழுத்தும் முன்னும் பின்னும் மாறுதலால் ஐந்தெழுத்தாவது. இது சிகரத்தை முதலாக உடையது. இதற்கே காரண பஞ்சாக்கரமெனவும் முத்தி பஞ்சாக்கர மெனவும் பெயர் உண்டு. பாசத்தை நீக்கி ஞானக் கண்ணால் சிவத்தை நாடுவதே முத்தி பஞ்சாக்கரப் பொருள் ஆகும். இதுவே ஓதுமுறையும் நிற்கு முறையும் என்பர். "ஆசினவா நாப்பணடையா தருளினால் வாசியிடை நிற்கை வழக்கு" என்பது திருவருட்பயன். இதன் உண்மைகளெல்லாம் குரு முகமாயறிதல் தக்கதாம். சுத்தமானதமாகிய அறி வாற் கணித்தலே எண்ணுதலாம். உயிர்கள் பழக்க வாசனை தாக்கா திருத்தற்கு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க வேண்டும். உடம்பினுள் இதயம் பூசைத் தானமாகும். உந்தி ஓமத்தானமாம். புருவநடு தியானத்தானம். கொல்லாமை – ஐம் பொறியடக்கல் – பொறை – அருள் – அறிவு – வாய்மை – தவம் – அன்பு – என்ற இவை அட்ட மலர்களாம். சிகரம் தற்பதப் பொருளது. யகரம் துவம் பதப்பொருளது. வகரம் அசி பதப்பொருளது. சிவோகம் பாவனையால் முதல்வன் விளங்கித் தோன் றுவன். சிகரம் பதியைக் குறிப்பது. யகரம் பசு வைக் குறிப்பது. வகரம் அவ்விரண்டின் ஐக்கிய

நிலையாகிய அருளைக் குறிப்பது. ஆதலால் முத்தி பஞ்சாக்கரமே சித்தாந்த மகா வாக்கியமாம். முதல் வன் சாதன காலத்து இதயபங்கயத்தே விளங்கித் தோன்றுவன். நேரே அறியப்படாத இராகு கேதுக்கள் கிரகணகாலத்தில் சந்திர சூரியரிடத்தில் விளங்கித் தோன்றும். விறகினிடத்துக் கோலை நட்டுக்கடையின் அக்கினி விளங்கித் தோன்றும். அக்கினியைச் சேர்ந்த இரும்பு அக்கினியாம். முதல் வனைச் சார்ந்த ஆன்மாவும் சிவமாய் முதல்வனுக்கு அடிமையாம். விறகு போல்வது இதயம்; கோல் போல்வது பஞ்சாக்கரம்; கடைதல் தியானமாம். பாசத்தினிடத்து இறைவன் நிற்பதை விறகுவமை காட்டும். பசுவினிடம் முதல்வன் நிற்கும் தடத்த நிலையை பாலில் நெய் உவமை பகரும். மாமணிச் சோதியான் என்பது இறைவன் சொரூப நிலை உணர்த்தும். இதயம் தாமரை போல்வது. இங்ஙனம் சாதன அநுட்டானம் இச்சூத்திரத்தில் விரிவாகக் கூறப்படுவதாகும். உட் பூசைமுறை இதுவாம் என்ப.

ஒன்பதாந் திருமுறை

## திருவிசைப்பா திருப்பல்லாண்டு

[ திருமாளிகைத் தேவராதியோர் ]

**கோயில் – பண் – பஞ்சமம்**

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வு சூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்கும் தேனே



ஸ்ரீ திருமாளிகைத் தேவர்

அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே
அம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

## தொடர்பு

எட்டாம் திருமுறையில் சாதன அறிவு குருவால் வருதல் உணர்த்தப்பட்டது. அந்தச் சாதன அநுட்டானமே ஒன்பதாந் திருமுறை உரைப்பது. சாதன முறையில் சிந்தையொருமையே சிறப்பாக அமையவேண்டுவது. ஆதலால் இது சிந்திக்கும் முறை கூறுவதாகும். அருளில் அடங்கி அடிமையாய் நிற்றலே சாதன அநுட்டிப்பு ஆகும். தெளிவுக் காட்சி எனவும் இஃது உரைக்கப்படும். சிவோகம் பாவனை என்பதும் இதுவாம். இந்த நெறியினை ஒன்பதாந் திருமுறை உணர்த்துவதாகும். இவ்வொன்பதாந் திருமுறையினைப் பாடியருளியவர் ஒன்பதின்மர் ஆவர். அவருள்ளும் திருமாளிகைத் தேவர் பாடலே முதற்கண் அமைந்துள்ளது. இது திருவிசைப்பா எனப்படுவது. இறுதியில் சேந்தனார் திருப்பல்லாண்டு வைக்கப்பட்டுள்ளது. சிவோகம் பாவனையைத் திருமாளிகைத் தேவர் திருவிசைப்பாப் புலப்படுத்த. அத் தெளிவுக் காட்சி நிலவுந் திருத்தலைத் திருப்பல்லாண்டு திருந்த வுரைக்கின்ற தென்னலாம்.

## பொழிப்புரை

ஜோதி குன்றாத விளக்கே! சத்துப் பொருளான ஏகமே! பாச பசுவுணர்வுகட்கு எட்டாத பதி

ஞானத்துக் கண்ணாக இருப்பவரே! தெளிவுடைய (களங்கமற்ற) பளிங்கின் குவியல்போன்று விளங்கும் மாணிக்க மலையே! தியானிப்பவர் உள்ளத்தே இனிக்கும் தேன் போன்றவரே! அருள் பொருந்திய சிந்தையுள்ளே ஆனந்த ரசம் கசியுங் கனியே! தில்லை அம்பலத்தை நடன மேடையாகக் கொண்டு அவ் வெளியிலே முடிவிலாத் தெய்வ ஆடலை விரும்பிச் செய்யும் முதல்வரே! தேவரீரை அடியனேன் எங்ஙனம் உணர்வேன். அடியேனை விளம்பச் செய்தற்குத் தேவரீரே காரணமாக நின்று விளம்பவேண்டும்.

## பொருத்தம்

முதல்வனைப் பசு பாச ஞானங்களாற் காண இயலாது. பதி ஞானமொன்றானே அவனருளாற் காண இயலும் என்பர். இச் செய்தியை மேற் பாடலிலே உள்ள "உணர்வு சூழ் கடந்ததோ ருணர்வே" என்பதும் "விளம்புமா விளம்பே" என்பதும் உணர்த்துதல் காணலாம். மற்றும் இப் பதிக முழுதுமே, "பணியுமா பணியே — கருதுமா கருதே — உரைக்குமாறுரையே — நணுகுமா நணுகே — இசையுமாறிசையே—நுகருமா நுகரே—புணருமா புணரே — தொடருமா தொடரே — விரும்புமா விரும்பே — நினையுமா நினையே" என்றே கூறிப் போதல் இக் கருத்தை வலியுறுத்தும். இதனால் அரன் அருளாலன்றி ஆன்மாவின் செயலில்லை என்பதை நாமறிதல் கூடும். ஞான சொரூபம் படிகம் நிகர்ப்பது என்பதனை இப் பாடலிலே "தெளிவளர் பளிங்கு" என்ற இடம் தெரிவிக்கும். உடம்பினுள்

இதயம் பூசனைத் தானமாமென்பது "சித்தத்துள் தித்திக்கும்" என்பதனால் விளங்கும். இறைவனுடைய சொரூப நிலையினைத் "திரள்மணிக் குன்றே" என்ற தொடர் அறிவித்து நிற்றல் காணலாகும். இதயத் தானத்தே இறைவனைக் கொல்லாமை யாதி மலர்களால் அருச்சிக்க வேண்டுமென்ற உட்பூசைச் செய்தியை "அளி – (அருளுடைமை) வளர் உள்ளத்து ஆனந்தக் கனியே" என்பது தெரிவிக்கும். ஆன்மாக்களை இறைவனே நடத்துகின்றான் என்பதனை "அம்பலம் ஆடரங்காக வெளிவளர் தெய்வக் கூத்து உகந்தாய்" என இசைத்துள்ளமையால் அறியலாம். பதி ஞான அநுபவத்தைத் "தித்திக்கும் தேனே! ஆனந்தக் கனியே" என்ற தொடர்கள் தோன்றச் செய்யும். முதல்வனைச் சார்ந்த ஆன்மா முதல்வனுக்கு அடிமை என்ற கருத்தினைத் "தொண்டனேன்" என்ற சொல் காட்டுகின்றதெனல் தகும். "உலப்பிலா ஒன்றே" என்ற இடம் முத்தி பஞ்சாக்கரப் பொருளையும் மகா வாக்கியப் பொருளையும் புலப்படுத்தல் உய்த்துணர்வார்க்கு விளங்கும். மேலும் இப் பதிக இறுதியிலும் "நிறை தரு கருணாநிலயமே" எனவும் சிவோக நிலை தெரிவிக்கப்படுதல் தேறலாகும். இத்தகை இன்ப நிலை நிலைத்திருத்தலே இம்மை — அழிவிலாப் போகம் என்பதை இத்திருமுறை இறுதிப் பதிக ஆரம்ப மொழியாகிய "மன்னுகதில்லை" என்பதும், "அந்தமில் ஆனந்தச் சேந்தன்" என்ற பதின் மூன்றும் செய்யுட் கண்ணுள்ள தொடரும் தேற்றுகின்றன என்னலாம். இனி அடுத்த திருமுறை, பாச நீக்கம் கூறப் புகுவதென்பதைக் குறிப்பிடு முறையில்

இவ்விறுதிப் பதிகத்து இறுதிக்கண் "ஆருயிர்மேல் பந்தம் பிரியப் பரிந்தவனே" என்றும் திருவாய் மலர்ந்தருளியிருத்தல் கண்டு கழிபேருவகை எய்தற் பாலதாகும்.



## பத்தாம் சூத்திரம்

*பாச நீக்கம்*

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

### தொடர்புரை

*ஏழாம் சூத்திரத்தில் சாதிக்கும் பொருளியல்பு புகலப்பட்டது. எட்டாம் சூத்திரத்தினால் சாதித்துப் பெறப்படும் பொருளியல்பு சாற்றப்பட்டது. ஒன்பதாம் சூத்திரத்தே சாதிக்குமாறு உணர்த்தப் பட்டது. இனி அச்சாதனத்தால் வரும் பயன் கூறப்படுகிறது. அப் பயன்களாவன பாசத்தை விடுதலும், சிவனை அடைதலும், சிவனை அடைந்த பின்னர்த் தேகம் இருக்குமளவும் பிராரத்துவ வாசனை தாக்காதிருத்தலும் என மூன்றும். இம் மூன்றும் கூறுவது பயனியல். மற்றும், சுட்டுணர் வினாலாகிய ஏகதேசக் காட்சி திருவைந்தெழுத்தின் உச்சரிப்பால் பற்றறக் கழியும். அதனால் வருவது ஆன்மசுத்தி. இவ் வான்மசுத்தியை ஒன்பதாம் சூத் திரம் சொற்றது. ஆன்மசுத்தியின் பயன் பாசவீடு. இப் பாச நீக்கத்துக்காகச் சிந்தனைசெய்த பொருளைத் தெளிய உணர்த்துவது பத்தாம் சூத்திரமாகும். இது ஞானத்து யோகம் எனவும் படும். நிதித்தியாசனம் எனவும் கூறுப. சிவயோகமும் ஆம்.*

## பொழிப்புரை

மேல் ஒன்பதாம் சூத்திரத்துக் கூறியவாறு ஞானக் கண்ணால் காணப்படும் அம்முதல்வன் பெத்த நிலையில் உயிரோடு உடனாய் நின்று உயிர் அறியும் வண்ணம் தான் அறிந்தும் அவ்வுயிருக்கு முதல்வன் இருக்கின்றானென வேறு காணப்படாமல் உயிர்தானே அறிந்ததாக எண்ணும்படி அவ்வுயிரோடு ஒற்றுமைப் பட்டு நின்றவாறுபோல, முத்தி நிலையில் உயிர் அம் முதல்வனோடு உடனாய் நின்று இன்பத்தை அனுபவித்தாலும் அனுபவிக்கின்ற தான் உண்டென வேறு காணப்படாமல் அம் முதல்வனோடு ஒற்றுமைப் பட்டு அம்முதல்வனேயாய் அவன் அருள்வழியாகிய இறைபணியில் வழுவாமல் நிற்பின், ஆணவ மலம் மாயா மலம் என்னும் இரண்டனோடு வலிய கன்ம மலமும் இல்லையாய் ஒழியும்.

## கருத்துரை

பெத்த நிலையில் முதல்வன் ஆன்மாவுடன் நின்ற மாதிரியே முத்தி நிலையில் உயிர் முதல்வனோடு நின்றால் ஆணவமாதியன இராமல் நீங்கும்.

## சூர்ணிகை

1. அரனுடன் ஒன்றாகி நில்.
2. உன் தொழிலெல்லாம் அரன்பணி என்று கொள்.

## விளக்கம்

ஏகனாகி ஒற்றுமைப் படுதல் அத்துவித சம்பந்தமெனப்படும். இவ்வொற்றுமைத் தன்மையைக்

குடாகாய மகாகாய ஒருமை முதல் ஆவும் ஆவும் போலாம் ஒப்புமை மாத்திரை வரையில் பதினான்கு வகையாகப் பிறர் கூறுவர், ஆனால் அவ்வுவமைகளை இச் சூத்திரம் சொல்லவில்லை; பெத்த நிலையில் முதல்வன் உயிரோடு கலந்திருத்தலையே உவமையாகக் காட்டுகின்றது. அவ்வாறே முத்தி நிலையில் உயிர் சிவமாய் ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்பது இச் சூத்திரம். சாதனஞ் செய்யுங் காலத்து ஒருமைப் பாட்டிற்குக் கருட பாவனை, தீயிரும்பு முதலிய உவமைகள் கூறப்பட்டன. முத்திக் காலத்து ஒருமை நிலைக்குப் பெத்தநிலை நிலைமையே உவமையாகக் காட்டப்பட்டது. கண்ணொளியும் ஆன்மபோதமும் என்ற உவமை வருஞ் சூத்திரத்தே காட்டப்படும். எனவே, வேறுபாடும் முனைப்பும் அற்று நிற்றலே சித்தாந்த முத்தி இலக்கணமாம். சிவனிடத்து ஏகனாகி நின்றால்தான் ஆணவ மலம் நீங்கும். திருவடியாகிய சிவானந்தம் விளையும். தான் ஒரு முதல் என்ற எண்ணம் உயிர்க்கிருக்கும் வரை சிவம் விளங்குவதில்லை. உயிரறிவு, தனு கரண புவன போகங்களுடன் கூடில் சிறிதாகும். திருவருளோடு கூடில் பேரறிவாய் விளங்கும். சஞ்சித வினை ஞானாசாரியரால் அத்துவ சோதனை செய்யப்பட்ட போதே எரிசேர் வித்துப்போலக் கெட்டொழிந்தது. பிராரத்துவமும் ஆகாமியமும் இறைபணி நிற்றலால் உடற் புசிப்பாய் ஒழியும். உயிர்ப் புசிப்பாகி மறு பிறவிக்கு உயிருமாகா. "அல்லல் என் செய்யும் அருவினை என் செயும் — தொல்லை வல்வினைத் தொண்டன்றானென் செயும் — தில்லை மாநகர்ச் சிற்றம்பலவனார்க் — கெல்லையில்லதோர் அடிமை

பூண்டேனுக்கே ” என்பது ஸ்ரீ வாகீசப் பெருமானார் திருவாக்காம். எனவே இறைபணியில் சலியாது நிற்றலே பாச நீக்கம் பயக்கும் என்பது துணிபாம்.

---

## பத்தாந் திருமுறை

## திருமந்திரம்

### ( திருமூலர் )

### உபதேசம்

விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பு அறுத்தானே.

### தொடர்புரை

சாதன அநுட்டானத்தை ஒன்பதாந் திருமுறை ஓதலுற்றமை காணப்பட்டது. ஒன்பதாந் திருமுறையின் இறுதியில் பத்தாந் திருமுறைக் கொரு தோற்றுவாய் செய்யப்பட்டது. அது, “ ஆருயிர் மேற்பந்தம் பிரியப் பரிந்தவன் ” என்னும் திருவாக்காகும். அங்ஙனமே பத்தாந் திருமுறை ஆன்மகோடிகள் பாசம் நீக்குமுறையினை உணர்த்துவதாக வேண்டும். திருமந்திரம் என்பதே பத்தாம் திருமுறை. இதனை அருளிச் செய்தவர் திருமூலர் ஆவர். ஒன்பதாந் திருமுறை இறுதியிலே பல்லாண்டு கூறப் படுதற்கேற்ப இந்த நாயனார் மூவாயிரம் யாண்டளவும் இருந்தாரென வரலாறு கூறுதல் காணலாம். அங்ஙனம் இவர் நீடிய காலம் இருந்த



ஸ்ரீ திருமூலதேவ நாயனர்

தலம் திரு ஆ அடு துறையாகும். அதாவது பசுத் தன்மையாகிய பாச நீக்கம் செய்யும் தலமெனப் படுவதாம். திருமூலர் வாழ்க்கை வரலாற்றிலும் பசுக்கட்கிருந்த துயரமே போக்க இவர் மூற்பட்டு மூலனூர் என்பது கூறப்படுகின்றது. எல்லாங் கருதிப் பார்க்குங்கால் ஆன்மகோடிகளின் பாச நீக்கத்துக்கான பாதையினைச் சொல்லாலும் செயலாலும் தெளிவித்தற்கே இவரது திருவாக்காகிய திருமந்திரமும், தெய்விக வாழ்வும் அமைந்தன எனத் துணியலாம்.

மற்றும், திருவாவடுதுறைப் பதியிலே அவ்வாதீனத்து 21-ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்ரமண்ய தேசிக பரமாசாரிய சுவாமிகள் திருவருளால் 31—5 – 1954 முதல் தொடங்கி நடைபெற்ற திருமந்திர மகாநாட்டிற்குத் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் 25-ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அளித்தருளிய "வாழ்த்துரை" நூலிலே ஒன்பதாம் இதழிலே பத்தாந் திருமுறை என்னும் பத்தியிலே "அத்தகு சிறப்புடைய ......... உணர்த்துகின்றது" என்னும் திருவாக்கினகத்தே சைவத் திருமுறைகளுள் பத்தாவதாகத் திகழ்கின்ற திருமந்திர நூல் சிவஞான போதத்தின் 10-ஆவது சூத்திரப் பொருளுடையது தெனத் திருவாய் மலர்ந்திருத்தல் காணலாம். எனவே தாம் சிவயோகியாராக வாழ்ந்து திருமூல தேவர் சிவயோக நிலையினை நூலாலும் உபகரித்துப் போயினர் என்பது தெளியலாம். "நன்று கண்டாய் அது நமச்சிவாயக் கனி" என்று தெளிந்தோதிய

இத் திருமூலனார் அருளிச் செய்த தமிழ் மூவாயிரம் என்பர்; மந்திரம் முந்நூறு என்பர்; உபதேசம் முப்பது என்பர். இம் முப்பதும் செம்பொருள் செப்புவனவாம். இம் முப்பதே முந்நூறாகவும் மூவாயிரமாகவும் விரிக்கப்பட்டுளதெனக் கோடலும் அமையும். பாச நீக்கமே ஆன்மசுத்தியாம். இச் செய்தியே இந் நூலில் உபதேசப் பகுதியில் முதற் பாடல் காட்டுகின்றமையின் இப் பாடல் ஈண்டைக் குக் காட்டாகத் தரப்பட்டுள்ளது.

## பொழிப்புரை

பரநாத வெளியினின்றும் வெளிப்பட்டு அடியனேன் விளைக்கீடாக மெய்கொண்டாங்கு தாமும் மானிட உடம்புகொண்டு எழுந்தருளி வந்து (அ) (அடியேனுடைய பெத்த நிலையிலே விளைக்கீடான அடியேனுடம்பினை இடமாகக் கொண்டிருந்து) உலக மெல்லாம் ஒடுங்குதற்கும் மீளத் தோன்றுதற்கும் காரணமாக நின்ற தன்னுடைய திருவடியைக் காப்பாக என் புன்தலைமேல் சூட்டி, என்னுள்ளே அறிவுக் கறிவாக விளங்கி நின்று தற்போதத்தைக் கரையச்செய்து ஒருவமானமுமில்லாத ஆனந்தத்தைக் கொள்ள வல்லதாகிய சிவஞானமாகிய கண்ணினை உதவியருளி எமது ஆணவமாதிய களிம்பு நீங்கச் செய்தருளினான்.

## பொருத்தம்

குறையுணர்வாகிய பசு அறிவாலும் பாச அறிவாலும் உணரப்படாதவன் முதல்வன் என்பதை இப் பாடலிலே உள்ள “விண்ணின்றிழிந்து” என்ற

தொடர் தெரிவுறுத்தும். தத்துவாதீதனாக முதல்வ னிருத்தலை 'விண்' என்னுஞ்சொல் சுட்டிநிற்பதாகும். முதல்வனை அவனது திருவடி ஞானத்தால் அறிக என்னு மிக்கருத்து "தண்ணின்ற தாளை" என்ற இடத்தால் அறியப்படும். சஞ்சிதமெல்லாம் பற்றறக் கழிந்தொழிதலைத் "தலைக்காவல் முன் வைத்து" என்பதால் உணரலாகும். பிராரத்துவமும் ஆகாமியமும் உயிரூழாகாதொழிதல் "உண்ணின் றுருக்கி" என்பதனால் புலப்படும். இறைவன் பெத்த நிலையில் உயிரேயாய் உடனின்ற நிலையினை "வினைக்கேடாய் மெய்கொண்டு" என்ற தொடரால் ஊகிக்கலாகும். முத்தி நிலையில் உயிர் முதல்வனோடு உடனாகி இறைவழி நிற்றலை "உண்ணின்றுருக்கிக் கண்ணின்று காட்டி" என்ற இடமும் அதன் கண்ணமைந்துள்ள பிறவினைச் சொற்களும் வெளிப்படுத்தும். அருணிலை அடைந்தாரைக் காத் தளித்தல் முதல்வன் கடமையாதலையும் மேற்குறித்த சொற்கள் தெரிவிக்கும் தகையன. அத்துவிதக் கலப்பினைக் "கண்ணின்று காட்டி" என்ற இடம் தெரிவிக்குமியல்புடையது. பூரண நிலையில் விசார மற்றுத் தூங்குதலை "ஓர் ஒப்பிலா ஆனந்தம்" என்ற தொடரால் அறியலாகும். அங்ஙனம் தூங்கு வார்க்குப் பிரபஞ்சத்தாக்குதல் இல்லை; அதனால் விருப்பு வெறுப்பில்லை. ஆகவே மறுமைக்குக் காரண மான வினையும் ஏறாது. இச் செய்திகளைத் தொகுத் துக் "களிம்பறுத்தான்" என்ற இடம் உணர்த்தும். களிம்புச் சொல் சிறப்புவகையால் ஆணவத்தைக் குறிப்பதோடு பொதுவகையால் மாயை கன்மங்களை யும் சுட்டும் என்னலாம். "செல்லடியே நெருக்கித்

திறம்பாது சேர்ந்தவர்க்குச் சித்தி — செய்வான்" என்ற மேற்கோளும் ஈங்குப் பொருந்துவதாம். மற்றும் இவ்வுபதேசப் பகுதியின் முப்பதாம் பாடல் சிவயோக நிலையினைப் "போதந்தரும்" எனவும் ஆன்ம சுத்தி அடைந்தாரைப் "போதந்தனில் வைத்துப் புண்ணியராயினர்" எனக் கூறித் தெளிவு செய்தலும் காணலாம். அன்றியும், இத் திருமுறை பாச நீக்கம் உணர்த்துவதென்பதை இறுதிப் பாடலான "வாழ்கவே" எனத் தொடங்கும் பாடலில் இறுதியில் "மலமிலான் பாதம்" என்ற தொடர் நின்று தெரிவித்தலும் காணலாம். மேலும் பதினோராம் திருமுறை சிவபிரான் திருவடி பற்றுதலாகிய சிவப்பேறு கூற இருப்பதென்பதை உபதேசப் பகுதி இறுதிப் பாடல் "போயடைந்தார் விண்ணே" எனவும், இத்திருமுறை இறுதிப் பாடல் மெய்ஞ் ஞானத் தவன்தாள்" எனவும், "திருவடி" எனவும், "பதம்" எனவும், "பாதம்" எனவும் கூறி நினைப்பூட்டல் சிந்தைக்கு இனிக்கும் விருந்தாம். இங்ஙனமாகப் பத்தாந் திருமுறை பத்தாஞ் சூத்திரக் கருத்தோடு பிணைந்தொழுகல் காணக் காணப் பெரிதும் இன்பம் தரும்.

---

# பதினோராஞ் சூத்திரம்

சிவப்பேறு

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பி னரன்கழல் செலுமே.

## தொடர்புரை

பத்தாம் சூத்திரத்திலே சாதனத்தால் விளையும் பயன் இரண்டினுள் பாசநீக்கம் பற்றிக் கூறப்பட்டது. பாசப் பற்று நீக்கத்தின் பொருட்டு இடையறாது சிவபெருமான் திருவடியைப் பற்றுவது அடுத்து நிற்கும் பயனாகும். இதனைச் சிவப்பேறு என்பர். இது இச் சூத்திரத்தால் உணர்த்தப்படுவது. அகத்தில் சிவபெருமானோடு ஒற்றுமைப் பட்டு ஏகனாகி நிற்கவேண்டும். புறத்தில் பிராரத்தம் தாக்காவண்ணம் இறைபணி நிற்கவேண்டும். இவ்விரண்டும் புரிவார்க்குத் தனக்கெனச் செயலில்லை. ஆகையால், முதல்வனுடன் உயிர் கலந்து நிற்கும் போது முதல்வன் அருளுடன் உயிரின் அறிவு இச்சை செயல் மூன்றும் கலந்துநின்று தொழிற்படும். இதன் பயனே பாச நீக்கமும் சிவப்பேறும். இவற்றுள் பாச நீக்கம் பத்தாம் சூத்திரத்திற் பகரப்பட்டமையால் சிவப்பேறு எனப்படும் நிட்டையின் இயல்பு இப் பதினோராம் சூத்திரத்தே கூறப்படுகின்றது. ஏகனாகி இறைபணி நிற்பதால் நிகழ்வது அருள்

விளக்கமாகும். இதனால் சுக ஒளி மட்டும் விளங்கும். சுகம் விளங்காது. பரம சுகம் விளங்கவேண்டித் திருவடி அடைதல் கூறப்படுகின்றது இச் சூத்திரத்தில். "மாசில் வீணையும்" என்ற திருநாவுக்கரசர் திருவாக்குத் திருவடி சுகம் தருமென்பதைத் தெரிவிப்பதாகும். ஆகவே பாச நீக்கத்தால் உண்டாவது அருள்விளக்கமேயாகும். அருள் விளக்கம் என்பது முதல்வனையின்றித் தான் தனித்திருப்பதில்லை எனவும், முதல்வன் செயலை இன்றித் தனக்குச் செயலில்லை எனவும் காண்பதாகும். இச்சை தொழிற்படுவதில்லை. ஆனால் ஆனந்த விளக்கம் என்பது முதல்வன் உடனாய் நின்று அறிவிப்பதோடு தனக்காக அறிந்தும் வரும் பேருதவியை நினைந்து அவனிடம் அன்புமீதூர அவ்வன்புமிகுதியால் அவனுடன் கலந்து அழுந்துதலாகும். அதாவது, அழுந்துங்கால், அறிவு இச்சை செயல் மூன்றும் தொழிற்படுவதாம். அருள் விளக்கம் ஆனந்த விளக்கத்துக்கு அடிப்படை என்பது இதனால் விளங்கும். எனவே இச் சூத்திரம் பரமசிவனது சீபாதங்களை அணையுமாறு கூறுகிறதெனக் கோடல் வேண்டும். சிவன் முத்திநிலை கூறுவதன்று.

## பொழிப்புரை

கண்ணானது உருவத்தைக் காணவேண்டுமாயின் உயிர் காட்டினாலன்றிக் காணமுடியாது. உயிர் காட்டக் காணும் இயல்புடைய கண், உருவத்தைக் காண்பதற்கும் அக் கண்ணோடு உயிர் கலந்துநின்று காணவேண்டும். கண்ணுக்கு உருவத்தைக் காட்டி

யும் கண்ணோடு கலந்துநின்று உருவத்தைக் கண்டும் வருகின்ற உயிர்போல,——அறிவிக்க அறியுந் தன்மையுள்ள உயிருக்குப் பொருளையறியும்படி முதல்வன் அவ்வுயிரோடு கலந்து நின்று அறிவித்தும் அறிந்தும் வருவன். ஆகையால், கலந்துநிற்கும் அந்த அத்துவித நிலையை மறவாமல் உறுதியாகக் கொண்டு அன்பு செய்யவேண்டும். அவ்வன்பினு லேயே அம் முதல்வன் திருவடியாகிய சிவானந்த அநுபூதியை உயிர் கூடும்.

## கருத்துரை

சிவத்தின் அத்துவித உதவியை உறுதியாகப் பற்றி உயிரானது அயராமையாலாகிய அன்பு செலுத்தினுல்; முதல்வன் திருவடியாகிய சிவானந்த அநுபூதியை எய்தும்.

## சூர்ணிகை

1. ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.

2. அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவ னிடத்தில் ஐக்கியமாய்ப் போவான்.

## விளக்கம்

கண், உயிரறிவின் துணையில்லாமல் உரு வத்தைக் காணமாட்டாது. உயிரின் அறிவும், கண் ஒளியும் கலத்தலால் உருவம் காணப்படுகின்றது. அப்போது, உயிரறிவானது தன்னறிவெனவும் கண்ணொளி எனவும் பிரிப்பின்றி நிற்கும்.

கண்ணினுடைய காணுதற்ருெழிலும் உயிரினுடைய காணுதற்ருெழிலும் ஒன்றை யொன்று விடாது அத்துவிதமாகி இரண்டும் ஒன்ருகவே நிகழும். அதுபோல,—முதல்வனையின்றித் தனித்து நில்லாத உயிர், ஒரு பொருளை அறியும் போது முதல்வனுடைய சிற்சத்தியானது உயிரின் அறிவோடு கலந்து, முதல்வனுகிய தன்னறிவென்றும் உயிரின் அறிவென்றும் பிரிப்பின்றி உடனுய் நிற்கும். எனவே உயிரின் அறிவும் முதல்வனறிவும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாகி இரண்டும் ஒன்ருகவே நிகழும். இவ்வாறு காட்டியும் கண்டும் வருகின்ற முதல்வனுபகாரம் பெத்தம் முத்தி இரண்டினும் ஒரு தன்மையாய் நிகழும். ஆதலால், ஏகனுகி இறைபணி நிற்கும் உயிர், முதல்வன் இங்ஙனம் அத்துவிதமாய்க் கலந்து நின்று காட்டியும் கண்டும் வரும் உரிமையை நோக்க நோக்க முதல்வனிடத்து அன்பு மீதூரப் பெறும். அப்போது அவ்விச்சையே பேரின்பமாக விளங்கித்தோன்றும், அதனை உயிர் அனுபவிக்கும். எனவே, அத்துவிதமாய் நிற்கும் உரிமையை நோக்குதலால் அறிவின் தொழிலும் — இச்சை யதிகப்படுதலால் இச்சையின் தொழிலும் — பேரானந்தத்தை அனுபவித்தலால் செயலாகிய கிரியையின் தொழிலும் நிகழும் என்பது பெறப்படும். இதனுல் அறிவு இச்சை செயல்கள் முத்தி நிலையினும் தொழிற்படுமென்பதாயிற்று. தொழிற்படினும் தொழிற்பட்டதாகப் பிரித்தறியவாராது. இது நின்மலதுரியாதீத நிலை எனப்படுவதாம்.

ஒரு பொருள் குணமென்றும் குணியென்றும் இருதன்மைப்பட்டு நிற்பதும்—இரண்டு பொருள்கள்

பிரிக்கமுடியாக் கலப்பினால் ஒரு தன்மைப்பட்டு நிற்பதும் எனத் தாதான்மியம் இருவகைப்படும். அக்கினி பொருளால் ஒன்றாகும். ஆயினும் அக்கினி என்றும் சூடு என்றும் இரு தன்மைப்பட்டு நிற்கும். கண்ணொளியும் ஆன்மாவின் அறிவும் பொருளால் இரண்டாம். ஆனால், பிரிக்க முடியாமையால் ஒருதன்மைப்பட்டு நிற்பதாம். இந்த இரண்டுவித ஒருமைகளுள், குணகுணியின் சம்பந்தம் தாதான்மியம் எனப்படும். இருபொருள்களின் சம்பந்தம் அத்துவிதம் எனப்படும். இதன்படி, முற்றறிவும் முற்றுத் தொழிலுமுடைய சிவமும், சிற்றறிவும் சிறு தொழிலுமுடைய ஆன்மாவும் வேறுவேறான அறிவும் தொழிலுமுடைய பேதப் பொருள்களாயினும் பிரிக்க முடியாது கலந்து நிற்றல்பற்றிப் பேதப்பொருள்கள் இரண்டும் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடமே சுத்த அத்துவிதம் எனப்படும். இதனை "அறிவு ஒளிபோல் பிரிவரும் அத்துவிதம்" என்பர்.

முதல்வனுடைய காணுமுபகாரத்தை இன்றி உயிர் ஒன்றையும் காணமுடியாது. இதனை "அறிவானும் தானே; அறிவிப்பான் தானே; அறிவாய் அறிகின்றான் தானே" எனக் காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதி கூறும். காணும் உபகாரம் முன்னை நிகழ்வது, காட்டும் உபகாரம் பின்னையது. பெத்தத்திலும் அத்துவிதமாய் நிற்றல் நிகழினும் விளங்குவதில்லை. முத்தி நிலையின் நன்கு விளங்கும். முதல்வன் காணும் உபகாரத்தைச் செய்வன். முத்தியிலும் முதல்வன் உடனின்று உணருவன். முத்தியில் முதல்வன் உயிருடன் ஒன்றாய் நிற்றல்பற்றி உயிரின் அறிவோடு கலந்து நின்று, வேறாய் நிற்றல் பற்றிச் சிவ

போகமாய் விளங்கித்தோன்றி, உடனாய் நிற்றல் பற்றி அச்சிவபோகத்தை உயிரின் அறிவோடு உடனின்று அறிவன்.

இவ்வத்துவித நிலையை மறவாது பத்தி செய்தால் முதல்வன் திருவடி கூடுதலாகிய நிட்டை கூடும். பத்தி என்பது பரமுத்தி நிலையினும் உண்டு. சீவன் முத்த நிலையினும் வேண்டுவதே. "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே என்பது திருவாசகம். பத்தி செய்தால் திருவடியடைதல் கூடும். பரமுத்தி என்பது சாதனம் முற்றும் பெற்றபொழுதே உண்டாம். உடம்பு நீங்கியபின்னே விளைவது என்பதில்லை. மறவாது பத்தி செய்தால் அப்பொழுதே திருவடி அடைதல் கூடும். காந்தம் இரும்பை இழுத்துக்கொள்ளும். இரும்பின் தன்மை அடையாது. முதல்வன் உயிரை இழுத்துக்கொள்வதால் உயிரின் தன்மையாகவாவது, உயிரின் தன்மை முதல்வன் தன்மையாகிய இரு தன்மையாகவாவது வேறுபடுதலில்லை. மலம் அறுதியாயினும் நீக்கப்படும். பக்குவத்துக் கேற்பப் படிப் படியாய் நீக்கப்படும். மலம் நசித்தல் என்பது மலத்தினுடைய மறைத்தற் சத்தி மடங்கிக் கீழ்ப் படுதலாம். "நல்ல சிவமுத்தியின்கண் பெத்தான் மாவை நணுகி நிற்கும்; ஆதலால் நாசமும் இன்றாம்" என்பர் வழி நூலாசிரியர்.

---

## பதினோராம் திருமுறை

(நாற்பது பிரபந்தங்கள் கொண்டது)

[ திருவாலவாயுடையார் முதல் பன்னிருவர் ]

---

*திருவாலவாயுடையார் அருளிய*

### திருமுகப் பாசுரம்

---

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை
அன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யாம் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்கும் சேரலன் காண்க;
பண்பால் யாழ்வல பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

### தொடர்புரை

*பத்தாம் திருமுறையின் உபதேசப் பகுதி முதற் றிரு மந்திரம் சாதனத்தால் விளையும் பயன்கள் இரண்டனுள் பாச நீக்கத்தைக் "களிம்பறுத்தல்" என்னும் தொடரால் சொற்றது. அப்பால் விளைய வேண்டும் பயன் பாசம் பற்றறுகையாகிய திருவடிப்*

பேறும். இதனைப் பத்தாம் திருமுறை இறுதிப் பாடல் "மலமிலான் பாதம்" என்ற தொடரால் தோற்றுவாயும் செய்தது. ஆதலால், இச் சிவப் பேறே பதினோராம் திருமுறை கூற நிற்பது. அகத்தும் புறத்தும் இறைவனோடு உயிர் ஒன்றுபட்டு ஒழுகினால் பாச நீக்கமும் சிவப்பேறும் உண்டாம். திருவடிப் பேறே சிவப்பேறு அல்லது நிட்டை எனப் படும். அறிவாலும் தொழிலாலும் ஒன்றுபட்டுக் கிடக்குமுயிர் இச்சையாலும் ஒன்றுபடுதலே சிவானந்தம் பயப்பது. அதாவது அயரா அன்பு மீதூரப் பெற்ற உயிருக்குப் பெத்த முத்தி இரண் டினும் இன்பெலாம் முதல்வனே விளைப்ப வரும். எனவே, பரமனது சீபாதங்களை அணைந்தாரைப் பற்றிய எவ் விஷயத்தையும் சிவமே பார்த்துக் கொள்ளும் என்பது துணிபாம். "சிவனும் இவன் செய்தி எல்லாம் என் செய்தி என்றும், இவனுக்குச் செய்தது எனக்குச் செய்தது என்றும் பவமகல உடனாகி நின்று கொள்வன்" என்பர் சித்தியாரிலும்.

மதுரைப்பதியின் பாண்டிய மன்னன் அவைக் களத்து இசைப் புலவன் பாணபத்திரன். சிவ பக்தி மிக்கவன். இவனுக்குப் பாசமாக முளைத்தவன் ஏமநாதன். பாணபத்திரன் சாதனத்துக்கு மகிழ்ந்த சிவபெருமான் ஏமநாதனை இசையால் வென்று நீங்கச் செய்தான். பாணபத்திரன் துயர் ஒழியப் பெற்றது. இங்ஙனம் தன்பொருட்டுதவியவன் முதல்வன் என்பதைப் பத்திரன் தெரிந்தான். அன்று தொட்டு அரண்மனை அலுவலையும் விட்டான். சிவனுக்கே இசை பாடி உள்ளமொன்றானான். இதனையே அயரா அன்புடைமை என்னலாம். இச்



மதுரை வெள்ளியம்பலவாணர்

செய்தியைப் "பணிமதி மருமான் நோயிற் பாணிசைக் கிழமை நீத்துக் குனிமதி மிலைந்த நாதன் கோயில் முப்போதும் எய்திக் கனிமதி அன்பின் பாடும் கடப்படு நியமம் பூண்டான்" என்னும் திருவிளையாடற் பாட்டுத் தெரிவிக்கும். பத்திரன் இலம்பாடெய்தினன். கூடற்பிரான் பொறுக்கலாற்றாராகிப் பாண்டியன் பொருளெல்லாம் கவர்ந்தளித்துக் காத்தலானார். இங்குப் பொறுப்பெல்லாம் சிவனதாயினமையும் அச்சிவன் தருபோகத்தே பாணபத்திரன் அழுந்தி யுவந்தமையும் காணல் தக்கதாம். இதனைப் "பாண் செல்வன் உவகைமாகடலில் ஆழ்ந்தான்" என்பதா லறியலாம். பாண்டியன் செல்வமெல்லாம் கவரப்பட்டன. இனிக் கவர்ந்து பாணருக்களிக்கப் பொருளில்லை. அப்போதும் பரமன் பத்திரரைக் கைவிட்டனரிலர். சேர வேந்தராகிய சேரமான் பெருமாளார்க்கு ஒரு திருமுகம் பாணர்பால் தந்தனுப்பினன். இங்ஙனம் முதல்வன் மேற்கொண்ட செயலே பெத்தத்தும் போகமளிப்பவன் என்பதை உணர்த்தும். பெத்த நிலையிலே இங்ஙனந் தன்பரமாக் கொள்பவன் முத்திக் கண்ணும் சிவபோகத் தழுந்துவிப்பன் என்பதைத் தடையறக் காட்டும். பத்திரன்கொண்ட அயரா அன்பால் முதல்வனது அறிவிச்சை செயல்களும் பத்திரன் அறிவிச்சை செயல்களும் ஒன்றுபட்டமை விளைந்ததென்னலாம். மேலும், வளர்பிறைச் சந்திரன் நாட்கு நாள் இருளொழிப்பது போன்று மலநீக்கம் முதல்வனால் நிகழுமென்பதையும் சிவபெருமான் செய்கை காட்டும். மற்றும், இப்பதினோராந் திருமுறையில் அயரா அன்பர் பாடல்களே பெரும்பான்மை அமைந்திருத்தலும் காணலாம். இறவாத இன்ப அன்பு நயந்த காரைக்கா

லம்மையார் பாடல்களும் இதன்பாலுள. அன்பால் செருமா உகைத்த சேரலன் பாடல்களும் இதன்கண் உள. திருமுருகாற்றுப்படை, கண்ணப்பதேவர் கதை, வரகுணன் வரலாறுதிய எல்லாம் பெரிய அன்பின் செயலையே உணர்த்துவன. இவ்வெல்லாம் இப்பதினோராம் திருமுறைக்கண்ணே இருத்தல் காணலாம். இங்ஙனம் அரன்கழல் செல்லும் செய்திகூறும் திறத்தால் இத்திருமுறை முன்னதோடு இயைபு கொண்டு நிற்றல் தெரியலாம்.

## பொழிப்புரை

சந்திரன் அளாவும் மதில் சூழ்ந்த நான்மாடக் கூடற் பதியிலே உள்ள பால்போன்ற வரியமைந்த சிறகுகளையுடைய அன்னப் பறவைகள் தங்கியுள்ள சோலை சூழும் ஆலவாயின் எழுந்தருளியுள்ள சிவ பெருமான் விடுக்கும் செய்தியாவது. பருவகாலத்து மேகம்போலும் பாவலர்க்கு உரிமை மிக உதவி புரிந்து, பிரகாசம் பொருந்திய நிறமுடைய சிறந்த சந்திரனையொத்த குடையின் கீழே இருந்து, போர்த் திறமுடைய குதிரையினைச் செலுத்தும் சேர நர பாலன், காண்பானாக. பண்ணின் பாகுபாடறிந்த யாழிசையில் வல்ல பாணபத்திரன் இத் திருமுகத்தோடு தங்களிடம் காண்பது கருதி வருகின்றான். அவன் உம்மைப்போலவே என்னிடம் அன்பு பூண்டவன். ஆதலால், மாண்பொருள் அளித்து அவனை உடனே இங்குவர விடுவீராக!

## பொருத்தம்

பாணபத்திரன் அறிவிச்சை செயலெல்லாம் முதல்வன் அறிவாதியவற்றுளே ஒன்றுபட்டுக் கிடந்

தமை இப்பாசுரம் தெரிவிக்கும் தகையது. பெத்தத்திலும் காட்டியும் கண்டும் வருகின்ற முதல்வனுபகாரத்தை "மாண் பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே" என்ற வாசகம் உணர்த்தும். இதனுள் முத்திக் கண்ணும் முதல்வன் இங்ஙனம் புரிதலை "மாண்" என்ற சொல்லும், "வரவிடுப்பதுவே" என்ற சொல்லும் தெரிவிக்கும். முதல்வன்பால் உயிர்க்கு அயரா அன்பு நிகழவேண்டு மென்பதைப் "பாணபத்திரன் தன்போல் என்பால் அன்பன்" என்ற பெருமானுரை உணர்த்தா நிற்றல் காணலாம். "வரவிடுப்பது" என்ற சொல் சுத்த அத்துவித முத்திக் குறிப்புடைமை ஓர்தற் குரியது. "தன் போலன்பன்" என்பது தாதான்மியம் தெரிவிப்பதாகும். உயிர் அரன் கழலடைதலை, "மதிமலி புரிசை" என்னும் தொடரும் காட்டும், முதல்வனுதவி கைம்மாறு கருதாதென்பதைப் 'பருவக்கொண் மூப்படிஎன" என்பதனாலறியலாம். "ஆலவாயின் மன்னிய சிவன்" என்பது முத்தியிலும் முதல்வன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்றலைப் புலப்படுத்தும் தகையது. தன்வழி நிற்பார் பரபோகமேவுவர் என்பதைச் "செருமா உகைக்கும் சேரலன்" என்ற குறிப்புத் தெரிக்கும். சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்திகளுடன் செருமாவுகைத்துத்திருக்கயிலை சேர்ந்தமை வரலாறு. இவ்வாறு பாணபத்திரர் முதல்வன் வழி நின்ற தன்மையைச் சேக்கிழாரும் போற்றியுள்ளார். பரமன் உதவியருளிய சிறப்பினைக் கல்லாடத்தும், "மதிமலி புரிசைத் திருமுகங் கூறி — அன்புருத் தரித்த இன்பிசைப் பாணன் — பெறநிதி கொடுக்கென உறவிடுத்தருளிய —

—மாதவர் வழுத்தும் கூடற் கிறைவன்" எனப் போற்றப்பட்டுள்ளமை காண லாம். இங்ஙனம் பதினோராம் திருமுறையின் முதற் பாடலான இது, இறைபுரி செயலாகவே நிகழ்ந்து, பதினோராஞ் சூத்திரக் கருத்தோடு பொருத்தமுற நடத்தல் இனித்தம் பயப்பதாகும். மற்றும் இத் திருமுறை இறுதிப் பாடல்; "உபாயம் மற்றுள்ளன வேண்டோமால்" என்பதும், "நாவினுக் கரைசடி நவினம் வைத்து" என்பதும் அடுத்த பன்னிரண் டாம் திருமுறை அடியார் வழிபாட்டுத் திறம் கூற லுறுவதைத் தோற்றுவித்து நிற்றலும் காணலாம்.



## பன்னிரண்டாஞ் சூத்திரம்

*அணைந்தோரியல்பு*

---

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.

### தொடர்புரை

*பதினோராம் சூத்திரம் சிவப்பேறு கூறியது. அப்பேறு பெற்ற ஞானிகள் உடம்போடு கூடியிருக்கும் வரையில் எவ்வாறொழுகுவர் என்பதை இப் பன்னிரண்டாம் — இறுதிச் சூத்திரம் இசைக்கின்றது. இடைவிடாத அன்பு பூண்டு அரன் திருவடி அடைந்து நிட்டை கூடிய முத்தர்க்குப் பிராரத்துவ அனுபவங் காரணமாக நிட்டை கலைவுறும். அப்போது பிரபஞ்சத்தை நோக்க நேரும். இங்ஙனம் நேருகையில் சீவன் முத்திநிலை எய்தியவர் ஆவர். அப்போது அவரது அறிவு இச்சை செயல்கள் ஒரோரு சமயம் புறத்திற் செல்லும். அப்படிச் செல்லும்போது இன்னின்ன இடத்திற் செல்லும் என்பதை இச் சூத்திரம் கூறுகின்றது. வாக்குமனங்கட்கு எட்டாமல் அன்புக்கு எட்டுவதாய் மறவாது வழிபடற் குரியவனாய் நின்ற முதல்*

வனை வாக்கிற்கும் மனத்துக்கும் எட்டும்படிச் சிவாலயத்தினிடத்தும், சிவனடியாரிடத்தும், திருவேடத்தினிடத்தும் தெளிவாய்க் கண்டு வழிபடும் முறையினை இச் சூத்திரம் உணர்த்துகின்றது. முன் சூத்திரத்தில் பரமுத்தி கூறப்பட்டது. இதனில் சீவன் முத்தி கூறப்படுகின்றது. இஃது இயைபாம்.

## பொழிப்புரை

பதினோராம் சூத்திரத்தே சொன்ன வண்ணம் அயரா அன்பினால் அரன் கழல் அணைந்த முத்தன் வினைப்பயனை அனுபவித்தற்குப் புறத்திற் செல்லுங்கால் சீவன் முத்தன் எனப்படுவான். அந்தச் சீவன் முத்தன் புறத்துச்செல்லுங்கால் செங்கமலமலர் போல விரிந்து விளங்கிய முதல்வனுடைய தாங்குந் திருவடியை அணையவொட்டாது அத்திருவடியை மறக்கும்படி மும்மலங்களும் முயலும். ஆதலால், அவ்வாறு மறக்கும்படி செய்விப்பதை இயல்பாகக் கொண்ட அம் மும்மலங்கள் என்னும் அழுக்கை ஞானம் என்னும் நீரினால் கழுவி அவ்வாறு கழுவுதலால் அயரா அன்பு செய்யும் மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி மலத்தால் உண்டாகும் நீங்குதலால் இடைவிடாத அன்பினை உடைய அம் மெய்ஞ்ஞானிகளுடைய திருவேடமாகிய விபூதி உருத்திராக்கங்களையும் சிவாலயத்தையும் சிவனெனவே கண்டு வழிபட்டு வாழ்வன்.

## கருத்துரை

சிவப்பேறடைந்த ஞானிகள் சீவன் முத்தராகும் நிலைக்கண் தமது நிட்டை நசித்துவிடா வண்ணம்

வெளி முகமாகச் சிவாலயத்திடத்தும், சிவனடியாரிடத்தும், திருவேடத்தினிடத்தும் வழிபாடுடையவராக ஒழுகவேண்டும்.

## சூர்ணிகை

1. மும்மலங்களையும் களைக.

2. சிவஞானிகளுடனே கூடுக.

3. சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவனெனவே தேறி வழிபடுக.

4. வழி படாமையை ஒழிக.

## விளக்கம்

அரன் கழல் நின்ற நிலை பரமுத்தி எனப்படும். அந்நிலை நின்றார் புறத்துச் செல்லு நிலை சீவன் முத்தி எனப்படும். சீவன் முத்தருடைய அறிவு, இச்சை செயல்கள் மூன்றும் செல்லும் இடம் இவை என்பதே இச் சூத்திரச் செய்தியாகும். இவர்தம் அறிவு "அம்மலங் கழீஇ" என்பதனால் மலங் கழுவதற் றொழிற்படும். "அன்பரொடு மரீஇ" என்பதனால் இவர்களுடைய இச்சை அன்பர் கூட்டத்திற்றொழிற் படும். "தொழும்" என்பதால் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனவே வழிபடுதலில் செயல் தொழிற்படும். மல நீக்கத்தால் அன்பர் கூட்டத்திற் பற்று நிகழும். அப் பற்றால் அவரையும் அவர் வேடத்தையும் ஆலயத்தையும் வழிபடுந் தொழில் நிகழும். பசுவின் பாலானது செல்வருக்கு உணவாயும், உடம்பு நோயின்றி வளரச் செய்யும் மருந்தாயும் இருத்தல்போலச் சீவன் முத்தரின்

இவ்வகை வழிபாடு சிவானந்த அனுபவத்தை மேன் மேல் வளரச்செய்யும் அநுபவமாகவும், மல வாசனை யாகிய நோயை நீக்கும் மருந்தாகவும் உதவும். ஆணவம், மாயை, கன்மம் என்ற மூன்றும் மெய் யுணர்ந்து நீட்டை கூடினரிடத்தும் யாதானும் ஒரு வழியால் நுழைந்து மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தான பழைய விபரீத உணர்வை மேற் படுத்தும். இஃது ஆகாது. ஆதலால், மும்மலங்களை யும் களையவேண்டும். ஆணவம், உண்மையை அறிய வொட்டாமல் மறைக்கும். மாயை, மயக்கத்தை உண்டுபண்ணும். கன்மம், விருப்பு வெறுப்பை உண்டாக்கும். ஆகவே அறியாமையோடு கூடிய மயக்கத்தால் உண்டாகும் விருப்பால் யான், எனது என்னும் புத்தி நிகழும். ஆதலால், இந்த அஞ்ஞானத்தை விலக்கவேண்டுவதாயிற்று. நெருப்பு ஓரிடத்தின் ஏகதேசத்தைப் பற்றினலும் அப்போதே அதைக் கெடுக்கவேணடும். இல்லையேல் அது இடமுற்றும் கெடுத்து முறுகி வளரும். அவ்வாறே, மும் மலங்களையும் தோன்றும் போதே கெடுக்காவிடில் அவை சிவஞானத்தை முற் றும் கெடுக்கும். "இளைதாக முள் மரம் கொல்க; களையுநர் கைகொல்லும் காழ்த்த இடத்து" என்பது தேவர் உரை. இதனல் தற்போதமின்றிச் சிவ ஞானத்துள் அடங்க வேண்டும் என்பது பெறப் படும். சீவன் முத்தர் சிவபக்தர்களோடே இணங்க வேண்டும். ஏனையரோடிணங்கலாகாது. அல்லா தார் தற்போதத்தை உண்டாக்கிக் கெடுப்பர். இவர்கள் தெய்வமில்லை என்பாரும், விரதமே தெய் வம் என்பாரும், அந்தந்த மதங்களே மேலென்பாரும்

ஆகப் பலதிறத்தினர் ஆவர். இவர்கள் மும்மலங் களினும் கொடியர். "சமயவாதிகள் தத்தம் மதங் களே அமைவதாக அறற்றி மலைந்தனர்" என்பது முதலிய திருவாக்குகளும் இஃதுணர்த்தும். "மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும் சிறப்பிலார்" என்பதும் அது. ஆனால், சிவபத்த ராவார், மறவியை மாற்றி, ஞானக்கண்ணை உதவி, பிறவிக் குழியினின்றும் எடுத்து, நன்னெறிக் கண் செலுத்தி, வாழ்விக்கும் சிறப்புடையவர் ஆவார். தீவிரதர அன்புடையார் பித்தர் போலக் காணப் படுவர். இவர் மெய்த்தவரெனப்படுவர்.

இனிக்காமக் கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை ஆபரணம் முதலியன காமுகரை வசஞ்செய் யும்; இன்பஞ்செய்யும், அதுபோலத் திருவேடமும் சிவாலயமும் காட்சி மாத்திரையில் மெய்யுணர்வுடை யாரை வசப்படுத்தி இன்பஞ் செய்யும். திருவுருவங் களையும் வழிபடுதல் இன்ன தன்மை பற்றியதேயாம். திருஞானசம்பந்த சுவாமிகட்கு அப்பர்சுவாமிகள் திருவேடத்தைத் தரிசிக்க விருப்ப மிருந்தமையும் இதற்குச் சான்றாகும். மற்றும், திருவேடம் சிவா லயம் என்னும் இடங்களில் முதல்வன் தயிரினிடத்து நெய்போல விளங்குவன். ஏனைய இடங்களில் பாலில் நெய்போல் மறைய நிற்பன். இனி, விறகி னிடம் தீ எப்போதும் உண்டு என்பதுண்மையாம். ஆயினும் கடைந்தாலன்றி வெளிப்படாது. கடைந் தால் விளங்கித் தோன்றும். கடையாதபோது தீத் தோன்றாமை பற்றி விறகில் தீயில்லை என்பது பொருந் தாது. அவ்வாறே தாவரவடிவின்கண் சிவன் இருப் பவனாகிறான். மந்திரக் கிரியையுள்ளபோது விளங்கித்

தோன்றுவன். அஃதில்லாவிடத்து வடிவமே தானாக நிற்பன். ஆதலால் தாவர சங்கமமென்னும் இரண்டிடத்தும் முதல்வன் பிரகாசிப்பன் என்க! மற்றும் ஒவ்வொரு பொருளுக்கும் வெவ்வேறு பெயர்களிருக்கத் திருவேடமும் சிவாலயமும் மட்டில் கடவுட் பெயரால் தோன்றுதல் கடவுளிடத்தில் அன்பைக் கண்ட மாத்திரத்தே உண்டுபண்ணற்கேயாம். பசுவிற்கு மடியின்கண் பால் வெளிப்படும். கன்றைக் கண்டால் வெளிப்படும். அதுபோலவே ஆலயத்துள்ள திருமேனியில் அன்பு கண்டவிடத்து முதல்வன் வெளிப்படுவன். திருக்கண்ணப்பர் வரலாறு இஃதுணர்த்தும். மெய்யுணர்வுடையாரையும் அன்பினாலேயே வழிபடவேண்டும். வழிபாடு செய்யாக்கால் நன்றி கொன்ற உய்தியில் குற்றமே விளையும். தன்னைக் காப்பாற்றிய குருவை மறத்தலாகாது. உயிர் என்றும் அடிமையேயாம். "தான் தானாச் செய்தானைப் பிள்ளை மறத்தல் பிழை" என்பது இக் கருத்தை விளக்குவதே. ஆதலால், அன்பு விளையுமிடமாகிய சிவலிங்கத்தையும், அன்பே உருவாகிய சிவனடியாரையும் திருவேடத்தையும், அன்பே சிவமாகிய சிவானுபவத்தை உண்டு பண்ணிய சிவதேசிகர்களையும் யாண்டும் வழிபடல் வேண்டும் என்பதே இச் சூத்திரமுடிபாம்.

---

## பன்னிரண்டாந் திருமுறை

# திருத்தொண்டர் புராணம்

(ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள்)

### வாழ்த்து

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

## தொடர்புரை

*பரமுத்தி நிலையடைந்த மெய்யுணர்வினர், எடுத்தூள்ள உடல் நீங்குந்தனையும் இவ்வுலகிடையே வாழ வேண்டியிருத்தலின், முடிவில் சிவானந்தப் பெரும் பேறெய்துமாறும் எங்ஙனம் தாம் ஈண்டு அரிதின் அடைந்த மெய்யுணர்வையும் சிவபோகத்தையும் இழவாமல் காத்துக்கொள்ள வேண்டுமென்பது தெரிதலே ஆன்ம ஈடேற்றத் துறையின் கடைசியான ஆசங்கையாம். அவ் வாசங்கையை எழுப்பு முகமாகப் பதினொன்றாந் திருமுறை இறுதிப் பாசுரம் நினைவூட்டிய செய்தி முன்னரே அத் திருமுறை விளக்க இறுதியிலே காட்டப்பட்டது. இனி அவ் வாசங்கைக்குரிய பூரண விடையையும் இத் திருமுறை தெளிவு செய்கின்றது. இதற்குமேல் ஆசங்கை நிகழ்தற் கேதுவில்லாமையால் சூத்திரம் பன்னிரண்டோடு முடிவெய்தல் போன்றே திருமுறைகளும் பன்னிரண்டாகி முடிவுறுகின்றன என்னலாம். இனித் திருமுறைகளின் எண்ணிக்கையை அதிகப் படுத்துத*

லும் முறைமையன்றென இச் செய்தி காட்டுகின்றதென்னலாம். யோகியர்க்குத் துவாத சாந்தத் தலம் போல்வது சிவஞானியர்க்கு இந்நூல் எனச் சுருங்கக் கூறல் ஏற்புடைத்து. எங்ஙனமாயினும் இப் பன்னிரண்டாந் திருமுறை பன்னிரண்டாம் சூத்திரச் செய்தியோடு தொடர்புடையதென்பது யாவரும் அறிந்த ஒன்றே ஆகும். திருத் தொண்டர் புராணமே குரு வழிபாடு, சிவலிங்க வழிபாடு, சிவனடியார் வழிபாடு, திருவேட வழிபாடு முதலிய செய்திகளைச் சான்று காட்டி நிறுவுகின்றதென்பது வெளிப்படை. இந் நூலுட்படும் நாயன்மார் வரலாறுகளெல்லாம் மேற்குறித்த செய்திகளையே தெரிவிக்கின்றன. இந் நூலுட் கூறப்படும் வரலாறுகள் எம்போலியர்க்கு அசாத்தியமான செயல்களாகக் காணப்படினும், மெய்யுணர்வினர்க்கு இயல்பான செயலாகவே தோன்றும். தெய்வப் புலவராகிய சேக்கிழார் பெருமான் சிவபத்தி அடியார் பத்தியாதிய பெற்ற சிவகரணமுடையாராதலால் அவரது திருவுள்ளம் நாயன்மார் செயற்கரும் செயல்களை அங்ஙனமே ஏற்றுக்கொண்டது. சிவம் இதனை ஆமோதித்த தன்மை வானிழல் கூறிய மெய்ம் மொழியான "உலகெலாம்" என்பதால் விளங்கும். மற்றும் இந் நூற்குத் தோற்றுவாய் செய்தருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகட்கும் இவ்வகைத் தெய்வ வாக்கே துணைநின்றுதவியமையும் பிரசித்தம். ஆதலால், சிவபரம் பொருளும், நாயன்மாரும், சீர்சால் நம்பிகளும், சிவனடியார்களும், சேக்கிழார் சுவாமிகளும் ஒரு முகமாகப் போற்றியும் வெளியிட்டும் உபகரித்துள்ள இந்நூல் சிறந்த சான்றாக

உள்ளமை வியப்பின்றும். இதனினும் பன்னிரண்டாஞ் சூத்திரத்துக்குச் சிறந்த சான்று வேறிலது. இந் நூலுட் கூறப்படுவாரனைவரும் சிவன் முத்தி நிலையினின்று செயற்கரும் செயல் புரிந்துளாராதலின், இத் திருமுறை இதன் முன்னதனோடு இயைபுடையதாகும்.

## பொழிப்புரை

உலகமெல்லாம் உணர்ந்து கூறுதற்கு அருமையானவனும், சந்திரன் தவழ்கின்ற நீர் நிறைந்த சடையையுடையவனும், அளவில்லாத பேரொளியனுமாய் திருச்சிற்றம்பலத்தில் திருக்கூத்தாடும் இறைவன்தன் மலர்கின்ற சிலம்பணிந்த திருவடியை வாழ்த்தி வணங்குவோம். (மற்றும்) உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன், நிலாவுலாவிய நீர்மலி வேணியனாய் அமர்ந்து, அலகில் சோதியனாய் எழுந்து விரிந்து, அம்பலத்தாடியாய் நின்று, சிலம்பும் மலரடி காட்டி, வாழ்த்தி வணங்குமாறு உயிர்கட்குத் திருவருள் புரிகின்றான் என்பர்.

## பொருத்தம்

பொதுப் படையாக நோக்கின், சூத்திரத்தே "செம்மலர் நோன்தாள்" என்றாங்கு இப்பாசுரத்தே "உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன் அடி" எனப்பட்டுள்ளது. "அரன் எனத்தொழுமே" எனச் சூத்திரமுடிவு போன்றே இப்பாடலும் 'அடி வாழ்த்தி வணங்குவாம்என முடிகின்றது, முதல்வன் சீபாதமே யாவற்றையும், யாவரையும் அகப்படுத்தித் தாங்குகின்றதெனச் சூத்திர மிசைப்பது.

அவ்வாறே பாசுரமும் "மலர் அடி" எனக் கூறுதல் காணலாம். இனிச் சூத்திரம், சீவன் முத்திநிலைக் கண் அறிவு இச்சை செயல்கள் புறம்பாகிக் கேடு விளையாதிருக்கும் பொருட்டு மலங் கழுவுதல், சிவனடியாரை மருவுதல், சிவவேடம் சிவமெனக்கருதுதல், சிவாலயம் வழிபடுதல் முதலிய செயல்களைச் செய்யுமாறு பணிக்கின்றது. ஞானாசாரியரை மறவாமை சிறப்பாக இதன் கண் எடுத்தோதப்படுகின்றது. இவையெல்லாம் சீவன் முத்தர் ஒழுக்கமாகும். இவ்வொழுக்க முரைத்தலே சூத்திரத்தின் குறிக்கோள். இவ்வாறே இப்பாட்டும் ஒழுக்கமுணர்த்துதல் "வாழ்த்தி வணங்குவாம்" என்றுரைத்தலால் அறியலாம். அன்றியும் இப்பாட்டின் ஆரம்பச் சொல் "உலகம்" என்பது. இச்சொல் நிலத்தையும், உயிர்களையும், ஒழுக்கத்தையும் குறிப்பதென்பர் சேனுவரையர். எனவே ஒழுக்கக் குறிப்புடையது உலகெனும் சொல் எனவும் தேறலாகும். அன்றியும், "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" எனப்படுதலின் மெய்யுணர்வுடைய ஞானியரை இச்சொல் காட்டும். ஆதலால், சீவன் முத்தராவாரும் மெய்ஞ் ஞானியரோடு கூடியுறைந்து முதல்வனை உணர்தலும் ஓதுதலும் செய்யற்பாலர் என்பதும் தெரியலாம். உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியநிலை சமய வாதங் கடந்த நிலையாதலின் சிறியார் கூட்டுறவு கூடாதென்பதையும் உணர்த்தும். பரமனே ஞானாசாரியனாகி நலஞ்செய்தலின் அன்னவரை மறவாது வாழ்த்தி வணங்குதல் தலைக்கடமை எனப் பாட்டுத் தேற்றும். இதனை "நிலவு உலாவிய வேணியன்" என்பது புலப்படுத்துவதாம். "தூமதி சடைமிசைச் சூடுதல்

தூநெறியாம் அதுயான் என அமைத்தவாறே" என்பது பட்டினத்தார் வாக்கு. "நீர்மலி வேணியன்" என்ற தொடர்பு "மலங்கழீஇ" என்றதன் பொருளைக் குறிக்கும். "அலகில் சோதியன்" என்பது சிவலிங்க வழிபாட்டினை உணர்த்தும் குறிப்புடையது. சோதி, ஞானம் குறிப்பது. ஞானத்தின் பயன் அருள். சிவலிங்கம் அருட்குறி எனப்படுதல் மரபு. "அம்பலத்தாடுவான்" என்பது பெருமானைக் குறிக்கும். ஆடுதல் இறை தொழில். ஆடுதல் சஞ்சரித்தலும் குறிக்கும். நடமாடுங்கோயில் அடியார்களாவர். ஆதலால் அவரடி வணங்கி வாழ்த்தலும் இதனுள்ளடங்கும். சிவத்துக்குரிய சின்னங்களாக இப்பாடலகத்தே நிலவு, நீர், சிலம்பு எனுமிவை கூறப்பட்டுள. அடியார்க்குரிய சின்னங்கள் திருநீறு, உருத்திராக்க மாலை, பஞ்சாக்கரம் ஓதுகை ஆம். நிலவு வெள்ளிய நீற்றை நினைவூட்டும். கங்கை யருவிமாலை, கண்டிகைமாலையை ஞாபகப்படுத்தும். பஞ்சாக்கர ஒலி அல்லது பிரணவ ஒலியைச் சிலம்பு உணர்த்தா நிற்கும். நிலவையும், நீரையும், சிலம்பையும் சேர்த்தே சிவத்தை வழிபடும்போது வணங்குகிறோம். அங்ஙனமே திருநீறும், கண்டிகையும் மந்திர ஒலியும் சிவமாகவே வழிபடற் பாலன என்பதை நாமுணரலாகும். சிலம்பு ஓங்கார வடிவும் ஒலியுமுடையதென்பது யாவரும் அறிவர். சாத்திர நூலாகலின் ஸ்ரீ மெய்கண்டதேவர் பதினோராம் சூத்திரத்தே "கழல்" கூறினர். தோத்திர நூலாகலின் இத் திருமுறையின் இப்பாடல் "சிலம்பு" கூறியது. எனவே சத்தியோடு கூடிய சத்தனை இவ்விரு நூல்களும் நமக்குப் புலப்பட வைத்தன

என்பதில் ஐயமின்றாம். இங்ஙனம் குறிப்பு மொழிகளால் இப் பன்னிரண்டாம் திருமுறை முதற் பாட்டு, பன்னிரண்டாம் சூத்திர உபதேசத்தை - ஆணையைப் புலப்படுத்தல் கழிபேருவகைக்கடலுள் கருதுவாரை மூழ்த்தித் திளைக்கச் செய்தல் ஒருதலை. இத் திருமுறை இறுதிப் பாடலும் "அடியாரவர் வாழ்புகழ் நின்றது" என்று கூறித் தலைக்கட்டுதல் காணற் பாலதாம். இனித் திருமுறைகள் இதனொடு முடிவுறுதலை "உலகெலாம்" என்ற தொடக்கச் சொல்லே இறுதிக் கண்ணும் நின்று காட்டுதல் நயந்தரு செய்தியாகும். சிவன் முத்தி நிலையில் இங்ஙனம் ஒழுகுவார் தட்டாமற் பேரின்பம் எய்துவர் என்பதனை இத் திருமுறையின் இறுதிப் பாடல் "என்றும் இன்பம் பெருகும்" என்றுரைத்தல் கட்டுரையாம். தொழுது வாழ்க உலகெலாம்!

## பின்னுரை

இதுகாறும் பன்னிரு திருமுறைகட்கும் - பன்னிரு சூத்திரங்கட்கும் இயைபிருத்தல் கூடுமென்று சிற்றறிவில் பட்டதொன்று அவ்வச் சூத்திரங்களைக் காட்டி, அந்தந்தத் திருமுறை முதற் பாசுரங்களை இணைத்து இயன்றளவும் ஆராயப்பட்டது. மதி நுட்பமுடையார்க்குப் பல்வகை இயைபுகளும் தாமே தோன்றும். குற்றம் பொறுக்கப் படுவதாகுக! சுருங்கக்கூறின், "தமிழதனின் உள்ளூறு நெய்ச்சுவையே" சிவஞானபோதமெனல் உண்மைக் கூற்றாம். எனவே நம் அருமைச் சிவஞானபோதம் வேதாகமங்களோடும் நால்வராதியோர் தமிழோடும் இருவகைத் தாதான்

மிய நிலையினும் ஒன்றுபட்டு நின்று நம்மனோருக்கு நன்று பயக்கும் விருப்பமுடைய ஞான நூல் என்னலாகும்.

மக்களை நன்னெறிப் படுத்துவது சமயம். சமய ஞானத்தை ஐயந்திரிபற மக்கள் யாவர்க்கும் அறிவுறுத்த வேண்டுமென்பதே ஸ்ரீ மெய்கண்டதேவர் திருவுள்ளம். இதனால் நன்கு வரையறை செய்து எவரும் அசைக்க இயலாவண்ணம் சிவஞானபோத சாத்திரத்தைச் சமைத்தளித்தனர். இதனாலேயே பிரமாணம் – இலக்கணம் – சாதனம் – பயன் என்ற முறையிலே இச் சாத்திரத்தை யாத்தருளினர். எதுவும் மேற்கோளும் எவரும் மேற்கொள்ளுமாறு நாட்டியருளினர். இம் முறையினை உள்ளத்துக் கொண்டு இக் கண்ணோடு திருமுறைப் போக்கினை ஆய்வோமாயின் சிற்சில உண்மைகள் நுண்மையாகப் புலப்படாமற் போகா. பதி, பாச, பசு உண்மைகளைப் பிரமாண முறையிற் காட்டுவதாக ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமான் வரலாறு அமைந்திருத்தல் காணலாம். பசு, பாச, பதி இலக்கணங்களைச் சான்று காட்டி நிறுவுவதுபோலத் திருநாவுக்கரசர் வரலாறு சமைந்து கிடத்தல் உணர்த்துகின்றது. சத சத்தாகிய ஆன்ம சாதன முறையினை இரு நாச்சிமார் சமேதரான ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரிதம் மெய்ப்பிக்கின்ற தென்னலாம். சாதன அறிவு குருவருளால் விளைதலை உள்ளங்கை நெல்லிக் கனிபோல ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் வாழ்க்கை-நெறி புலப்படுத்துகின்றது. சாதன சிந்தனை சித்திபெறு முறையினைச் சித்தராகிய திருமாளிகைத்

தேவர் திவ்ய சரிதை தெரிவிக்கின்றதென்னலாம். பாச நீக்கம் ஒரு பயனுமென்பதைப் பசுக்களின் துயரம் போக்கிய திருமூலர் செயல் செவ்விதின் செப்புகின்றதெனலாகும். சிவப்பேறு இவ்வியல்பிற்றென்பதைப் பாணபத்திரர்க்குதவிய திருவாலவாயுடையார் திருவிளையாடல் நன்கு நவில்கின்றதாகும். சீவன் முத்தரியல்பினைப் "பத்திச் சுவைநனி சொட்டச்சொட்டப் பாடிய"ருளிய ஸ்ரீ சேக்கிழார் பெருமான் பண்பாடே தெளிவுறுத்தும். இங்ஙனம் அவரவர் வரலாறுகளே அமைந்து கவின் செய்தலை உள்ளுதோறும் உள்ளுதோறும் உள்ளம் இனிக்கும் எனல் மிகையாகாது. அறமே பிரமாணம். பொருளே சாதனப் பொருள். இன்பமே இலக்கணம் - வீடுபேறே பயன். அறன் வலியுறுத்தல், நீத்தாருறுதிப் பொருள் - வான்சிறப்பின்பம் - கடவுள் வாழ்த்து நெறி வீடு ஆகிய நான்கு அதிகாரங்களாகத் திருக்குறள் என்னும் தமிழ்மறை கூறுவதும் பிரமாணமாதி நான்கியலுள் அடங்குவதேயாகும். எவ்வாற்றானும் வேதாகம தமிழ்மறை நீதி நூல்களெல்லாம் பொருந்துமாறு முரணின்றி முட்டறுத்துச் சித்தாந்த சைவ நெறி புலப்படுத்துவதே சிவஞானபோத சாத்திரத்தின் நோக்கம். இந் நூலுரைக்கும் நன்னெறியுணர்ந்து ஞானசாரியரையடைந்து தெளிவு பெற்றுக் கட்டறுத்தின்பம் பெறுதலே மக்கட் பிறப்பெய்தியுள்ள நம்மனோர் கடமையாகும்.

இங்ஙனம் இந்நூலை இயற்றுமாறு உள்ளிருந்துணர்த்தியருளிய ஸ்ரீ நமச்சிவாய தேசிக பரமாசாரியர் திருவடிகளை வழுத்தி, தமது பேருரையால் வழி புலப்படவருளிய மாதவச் சிவஞான சுவாமிகளாரை

நினைந்து, இவ் வெளியனேனை அடிமை கொண்டு இந்நூலை இயற்றக் கட்டளையிட்டருளியும் ஆதீன வெளியீடாகத் திருவருள் புரிந்தும் எழுந்தருளியுள்ள திருவாவடுதுறை ஆதீனம் 21-ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரியர் திருவடிகளை வணங்குகின்றேன்.

வாழ்க!



சரஸ்வதி பிரஸ், திருப்பாதிரிப்புலியூர்

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 23 | 21 | ஆண்மீக | ஆன்மீக |
| 56 | 18 | ஊர் திவால் | ஊர்தி வால் |
| 67 | 10 | 'எனவும்' என்பதன் பிறகு | 'பின்னர்' என்று சேர்க்கவும் |
| 119 | 21 | 'என' என்ற சொல்லை | நீக்கவும் |
| 164 | 17 | பிள்ளை | பின்னை |

